# நமசிவாய வாழ்க

(சைவ சமயம் பற்றிய எல்லா விபரங்களுடனும்,
125 பஞ்சாக்ஷர மந்திரங்களுடன்)

ஆசிரியர் :

**எஸ். நடராஜன்**

(ரஜன்)



—பிரதிபா பிரசுரம்—

புதுக்கோட்டை ஸ்ரீ புவனேஸ்வரி அதிஷ்டானத்தில் நடைபெற்ற
பஞ்சாக்ஷர ஹோமத்தையொட்டி வெளியிடப்பட்டது.

வெளியிடுபவர் :
என். லலிதாம்பாள்

**பிரதிபா பிரசுரம்**

25, ஆடம் தெரு, மயிலாப்பூர், சென்னை–600 004.

phone : 74720

 [விலை ரூ 4-00

நமசிவாய வாழ்க
(Namasivaya Vazhga)

முதல் பதிப்பு: ஏப்ரல், 1978.

விலை ரூ. 4-00



பிரதிபா பிரசுரம்
25

## பொருளடக்கம்



பூங்குழலி அச்சகம், இராயப்பேட்டை, சென்னை-600 014.

# காணிக்கை



பிரபல மகா சந்நிதானங்களால் அணி செய்யப்பட்டு வந்த தருமபுர ஆதீன பரம்பரையில் ஞானசிரியராக வீற்றிருப்பவர் 26-வது குரு மகா சந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ சண்முக தேசிக ஞான சம்பந்த பரமாச்சாரிய சுவாமிகள்.

பிரதிபா பிரசுரம் மேற்கொண்டுள்ள புத்தக வெளியீட்டுப் பணியை ஆரம்ப முதற்கொண்டே ஊக்குவித்து அருளாசி வழங்கி வருகிறார்கள்.

“நமசிவாய வாழ்க” என்ற இந்த சைவத் திருநூலை

ஸ்ரீலஸ்ரீ குரு மகா சந்நிதானம்

**ஸ்ரீ சண்முக ஞானசம்பந்த பரமாச்சார்யர்கள்**

அவர்களின் பொன்னடிகளில் பக்தியுடன் சமர்ப்பிக்கின்றோம்.

**என். லலிதாம்பாள்**
*(பிரதிபா)*



**எஸ். நடராஜன்**
*(நஜன்)*

# பதிப்பாசிரியர் நன்றி

பிரதிபா பிரசுரத்தின் 25-வது புத்தகமாக வெளிவரும் "நமசிவாய வாழ்க" விலும் ஒரு பொருத்தம் காணலாம். பஞ்சாக்ஷரப் பெருமானான சிவனுக்கு 5 முகங்கள். ஒவ்வொரு முகத்திற்கும் ஒரு பஞ்சாக்ஷர மந்திரம் என்றாலும் 25 மந்திரங்கள் ஆகும். அவ்வகையில் இப்புத்தகம் 25-வதாக அமைந்தது அந்த சிவபெருமானின் அருளே.

ஒவ்வொரு சிவனின் முகத்திற்கும் 25 பஞ்சாக்ஷரமாக 125 பஞ்சாக்ஷரங்கள் உள்ளன. இதுபற்றி யாருக்கும் தெரிந்திராது. இதை உதவிய [illegible]புரம் சாக்த ரத்ன ஸ்ரீ வி. கோவிந்தராஜப் பிள்ளை அவர்களுக்கும், அவருடைய பண்டிதக் குழுவுக்கும் எங்கள்

புதுக்கோட்டை சத்குரு சுவாமிகள் புவனேஸ்வரி அதிஷ்டானத்தில் இதுவரை எவ்வளவோ ஹோமம் செய்திருக் கிறார்கள். அப்போதுதான் முதல் தடவையாக பஞ்சாக்ஷர ஹோமம் செய்கிறார்கள். அதையொட்டி இப்புத்தகம் வெளி யிடப்படுவது அந்த சாம்ப பரமேஸ்வரனின் (உமையுடன் கூடிய சிவம்) அருளையாகும்.

எங்கள் பணியை ஆரம்பம் முதற்கொண்டு அனுக்கிரஹித்து அருளாசி வழங்கி வரும் சைவப் பெரியாரான தருமபுரம் ஆதீன கர்த்தர் ஸ்ரீலஸ்ரீ குரு மகா சன்னிதானம் அவர்களுக்கு இந்நூலை காணிக்கையாக்கியிருக்கிறோம்.

இப்புத்தகத்தை அச்சடித்துத் தந்த பூங்குழலி அச்சக அதிபர் ஸ்ரீ முத்துக்கிருஷ்ணனுக்கும், அட்டைப் படத்தைத் தயாரித்துத் தந்த ஸ்ரீ சித்ரலேகாவுக்கும் எங்கள் நன்றி.

மயிலாப்பூர்
14—4—78.

என். லலிதாம்பாள்
(பதிப்பாசிரியர்)

ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதி

ஜகத்குரு ஸ்ரீ சங்கராச்சாரிய சுவாமிகள் ஸ்ரீமடம் காஞ்சீபுரம்.



முகாம்:
திண்டுக்கல்

*23—1—1978.*

சிவம் என்றாலே மங்களம். அந்த மங்களகரமான பரமசிவனுக்கு வாழ்த்து தெரிவிக்கும் வகையில் ''நமசிவாய வாழ்க'' என்ற தலைப்பில் 'நஜன்' அவர்கள் ஒரு அரிய நூலைக் கொண்டு வருவதை கண்டு சந்தோஷிக்கிறோம்.

இந்த நூலில் சிவ வழிபாடு, பஞ்சாட்சரத்தின் பெருமை, சிவ ஸ்துதிகள் போன்ற பல விஷயங்கள் அடங்கி இருக்கின்றன.

எல்லா ஆஸ்திக அன்பர்களும் இதுபோன்ற நல்ல நூல்களைப் படித்து பரமேஸ்வரனுடைய அருளுக்கு பாத்திரராகும்படி ஆசீர்வதிக்கின்றோம்.

—நாராயண

# ஆசிரியர் முகவுரை

*பெற்ற தாய்தனை மகன் மறந்தாலும்*
*பிள்ளையைப், பெற்ற தாய் மறந்தாலும்*
*உற்ற தேகத்தை உயிர் மறந்தாலும்*
*உயிரை மேவிய உடல் மறந்தாலும்*
*கற்ற நெஞ்சங்களை கலைமறந்தாலும்*
*கண்கள் நின்றிமைப்பது மறந்தாலும்*
*நற்ற தவத்தவர் உள்ளிருந் தோங்கும்*
*''நமயசிவாய''த்தை நான் மறவேனே!*

சிவபெருமானைப் பற்றி எப்போதோ வரவேண்டிய இந்நூல் இப்போதுதான் வெளிவர நேர்ந்திருக்கிறது. புதுக்கோட்டை அதிஷ்டானப் பெரியவர்கள் ஸ்ரீமத் சத்குரு ஸ்வாமிகள் இந்த ஆண்டு பஞ்சாக்ஷர ஹோமம் செய்கிறார்கள். அதையொட்டி வெளிவர வேண்டும் என்பது சிவபெருமானின் நோக்கம்போல் தெரிகிறது.

சக்தியுடன் கூடிய சிவமே நம்மையும் இந்த எல்லா புவனங்களையும் இயங்கச் செயகிறது என்பது. சக்தியைப் பற்றி வெளிவந்து பல புத்தகங்களிலிருந்து ஓரளவு தெரிந்திருக்கும். சிவத்தைப் பற்றித் தெரிந்துகொள்ள வேண்டியது எவ்வளவோ இருக்கிறது. இம்மாதிரி பல புஸ்தகங்கள் எழுதலாம். இதில் பஞ்சாக்ஷர மந்திர மகிமை என்ன? சிவலிங்க உருவம் ஏன்? அதன் தத்துவம் என்ன? சிவநெறி என்பது என்ன? சைவ சாஸ்திரங்கள் எவை? சிவாகமம் என்பது என்ன? சிவனுக்குப் பிடித்த மானது எவை? சிவச் சின்னங்களின் மகிமை என்ற முதலிய பல அவசியம் தெரிந்துக்கொள்ள வேண்டிய விஷயங்கள் இதில் விளக்கப்பட்டுள்ளன.

மேலும் பல அரிய விஷயங்கள் ''சிவ மூர்த்தங்கள், நடராஜ தத்துவம்'' என்ற இனி வரவேண்டிய புத்தகங் களில் இடம் பெறும். வாசகர்கள் இதுவரை வெளியான பிரதிபா புத்தகங்களுக்கு அளித்த ஆதரவுபோல் இதற் கும் ஆதரவு இருக்கும் என எதிர்பார்க்கிறேன்.

சிவராத்திரி |
7-3-1978 |

எஸ். நடராஜன்
(நஜன்)

# ஸ்ரீமத் சத்குரு சாந்தானந்த சுவாமிகள்
## ஸ்ரீமுகம்

முகாம்:

புதுக்கோட்டை.



30—1—1978

ஸ்ரீமான் நடராஜன் (நஜன்) ''நமசிவாய வாழ்க'' என்ற அற்புதமான நூலை வெளியிடுவது அறிந்து ஸ்ரீமத் ஸத்குரு சுவாமிகளின் மிகவும் சந்தோஷமடைகிறார்கள்.

மங்களம் அனைத்திற்குமிடம் சிவமேயாதலால் அம்மங்களத்தைப் பெற வழி சிவ நாமமேயாகும். தான் செய்து வரும் அனைத்தும் சிவ கைங்கரியமே என உறுதியாக நினைத்து நிலம், நீர், நெருப்பு, காற்று, ஆகாயம், ஞாயிறு, மதி, ஆன்மா என்கிற எட்டையுமே சிவபெருமான் தன் வடிவாகக் கொண்டுள்ளதால் சிவனுக்கு அந்நியாயமான பொருள் வேறொன்றில்லை என்பதை உணர்ந்து சிவார்ப்பணம் செய்ய வேண்டும் என்பதற்காகவே நஜன் இந்நூலை சிவபக்தர்களுக்கு நல் விருந்தாகக் கொடுத்திருக்கிறார். இந்நூலில் சிவனை எப்படி எல்லாம் வழிபடவேண்டும், சிவபெருமானுக்குரிய மந்திரங்கள் தன் பெருமைகள் சிவராத்திரி, பிரதோஷம், சோமவாரம் இவைகளின் தத்துவ விவரங்கள் வேதத்தில் எப்படி சிவன் பிரதிபாத்யமான முழுமுதற் கடவுளாக விளங்குகிறார் என்பதை எல்லாம் மிக அருமையாக விளக்கியிருக்கிறார்.

இப்புத்தகத்தை நல்லறிவு மிக்க அன்பர்கள் அனைவரும் பெற்றுப்படித்து சிவப்பிரசாதத்திற்கு பாத்திரமாக வேண்டும். நஜனின் இந்த தெய்வீகத் தொண்டு ஜீவ நதியின் பிரவாகமாக விளங்க வேண்டும் என்று ஸ்ரீமத் ஸத்குரு அவர்கள் ஆசீர்வதிக்கிறார்கள்.

—ஸ்ரீமத் சத்குரு சாந்தானந்த சுவாமிகள்
ஆக்ஞைப்படி என். சுந்தரம்

# தருமபுர ஆதீனகர்த்தரின் அருளாசி

குருபாதம்

தருமையாதீனம்
ஸ்ரீலஸ்ரீ
சண்முக தேசிக ஞானசம்பந்த
பரமாசாரிய சுவாமிகள்

தருமபுரம், மாயூரம் P.O.
22—3—1978.

''ஞாலம் நின்புகழே மிகவேண்டும் தென்
ஆலவாயில் உறையும் எம் ஆதியே''

மக்களை மக்கட் பண்புள்ளவர்களாக வாழ வழி வகுப்பது சமயம். சமய நெறியில் நடப்பது மக்களின் இன்றியமையாத கடமை. சமயங்களுள் சிறந்த சைவ சமய நெறியைப் ''பொருட் சமய முதற் சைவ நெறி'' என்பார் சேக்கிழார் பெருமான். சைவ சமயத்தில் பிறந்த புண்ணியமுடையவர்கள், சிவன், சிவக்குமாரர்கள், நவ சத்திகள் ஆகியோர்களைப் பற்றியும், திருவிழாக்களைப் பற்றியும் முதலில் தெரிந்துகொள்வது சைவ நெறியில் அவர்கள் மனம் ஈடுபடத் துணை செய்யும்.

பிரதிபா பிரசுர ஆசிரியர் திரு. நடராஜன் அவர்கள் இதுவரை இருபத்து நான்கு துணை நூல்களை வெளியிட்டுச் சமயப் பணியைச் செய்திருக்கிறார். இப்போது இருபத்தைந்தாவதாக ''நமச்சிவாய வாழ்க'' என்ற நூலை வெளியிடுகிறார். இதில் ஐந்தெழுத்து, சிவ வழிபாடு, லிங்கத் திருவுருவம், சிவராத்திரி, பிரதோஷம், சிவ விரதங்கள், சிவச் சின்னங்கள் முதலியன வேத ஆகம புராண இலக்கிய மேற்கோள்களுடன் விளக்கப்பட்டுள்ளன. இவைபோன்ற நூல்கள் சமய வளர்ச்சிக்குத் துணை செய்யும்.

இவ்வெளியீடு மக்கள் மனத்தில் சமய உணர்வை எழுப்பி இறை வழிபாட்டு நெறியில் செலுத்தவும், ஆசிரியர் இதுபோன்ற பல நூல்களைச் சமய உலகிற்குத் தந்து நலம் பல பெற்றுச் சிறக்கவும் ஸ்ரீ செந்தமிழ்ச் சொக்கன் திருவருளைச் சிந்திக்கின்றோம்.

# முகவுரை

(மந்திர ரத்னாகரம் சாக்தஸ்ரீ
டாக்டர் வைத்யநாத சாஸ்திரிகள், புதுக்கோட்டை)

கருணையால் பிறந்தது சராசரங்கள் அதில் உயிரினம் யாவும் கடவுளின் கருணையால் வாழப் பிறந்தவை. வாழ விரும்பும் உயிரினங்களை சகல பாக்கியங்களுடனும் வாழ வைப்பது தெய்வமேயாகும். ஆதலால் தெய்வத்தின் அனுக்ரகத்தால் வாழ்த்தப்பட வேண்டியது பிராணி வர்க்கங்களேயாகும்.

அங்ஙனமிருக்க நூலாசிரியர் வாழ்த்தப்பட வேண்டிய பிராணி வர்க்கங்களை விட்டு வாழவைக்கும் தெய்வத்தை வாழ்த்தும் "நமசிவாய வாழ்க" என்று நூலின் பெயர் கொடுத்ததற்கும் உண்மை இல்லாமல் இல்லை. இந்த உலகில் பெரியோர்கள் தெய்வத்தைக் காட்டிலும் தெய்வத்தின நாமத்திற்கு சிறப்பையும், அனுக்ரஹ சக்தியையும் கூறி வந்திருக்கின்றனர். அக்ஞானிகளாகிய நாம் தெய்வத்தை அறிந்து நேரில வழிபட முடியாததால் தெய்வத்தின் நாமத்தையே அடிக்கடி ஜெபித்து கிடைத்தற்கரிய புருஷார்த்தங்களைப் பெறுவது பெரியோர்களிடம் கேட்டலும் நாம் அனுபவிப்பதுமான உண்மையாகும். ஆதலின் எக்காலத்திலும் எல்லா இடங்களிலும் எல்லோராலும் இடையறாது நாடம் ஜெபிக்கப்பட்டு நாமத்தின் பெருமை எங்கும் நிறைந்திருநதால் அதுவே உயிரினங்களுக்கு க்ஷேமம் தரும் வள்ளலாகும். அதை மனதில் கொண்டே நூலாசிரியர் நமசிவாய சிவ நாமத்தை வாழ்த்தும் நூற்பெயரிட்டது சாலப் பொருத்தமாகும்.

பிரதிபா பிரசுரத்தினர் புதுக்கோட்டை புவனேஸ்வரி அதிஷ்டானத்தில் இந்த ஆண்டு நடைபெற விருக்கும் ஸ்ரீ சக்தி பஞ்சாக்ஷர மஹா மந்திர ஸம்புடித ஸ்ரீ புவன சக்தி மஹா மந்திர மஹா யக்ஞத்தை யொட்டி "நமசிவாய வாழ்க" என்ற புத்தகத்தை வெளியிட்டிருக்கிறார்கள்.

கொண்டிருக்கின்றார்கள். அதைப் போலவே பிரதிபா பிரசுரத்தை நடத்தும் ஸ்ரீமதி லலிதாம்பாளும், அவர் கணவர் ஸ்ரீ நடராஜனும் (நஜன்) தேவியை உபாசித்து அவளுடைய ஸ்ரீசக்ரத்தை தங்கள் பிரசுரத்தின் சின்னமாகக் கொண்டு அதிலுள்ள 43 முக்கோணத்திற்கு 43 புத்தகங்கள் வெளியிட சங்கற்பம் செய்து கொண்டுள்ளனர். ஆத்மீக உலகிற்கும், பக்தி உலகிற்கும் செய்யும் அரும் பெரும் தொண்டாகும் இது.

'நமசிவாய வாழ்க' என்ற புத்தகத்தில் சைவ சமய சாரம் முழுவதும் அடங்கியிருக்கின்றது. பல புத்தகங்களை ஆராய்ந்து நிறைய விஷயங்களை சுவைபடத் தந்திருக்கின்றார். அவருக்கு தெய்வ அருளும் ஆசார்ய அருளும் இருக்கின்றன. அவர் உழைப்பு பரிமளிக்க உங்கள் எல்லோருடைய ஆதரவு தான் முக்கியம். நஜன் தம்பதிகளுக்கு என் ஆசிகள்.

புதுக்கோட்டை
31—3—1978

இப்படிக்கு,
சாக்தஸ்ரீ வைத்யநாத சாஸ்திரிகள்

# நமசிவாய திருப்பதிகம்

:(ஞானசம்பந்தர் அருளியது)

காதலாகிக் கசிந்து கண்ணீர் மல்கி ஓதுவார் தமை நன்னெறிக்
[குய்ப்பது
வேத நான்கினும் மெய்ப்பொருளாவது நாதன் நாம சமச்சிவாயவே 1

நம்புவாரவர் நாவினவிற்றினும் வம்பு நாண்மலர் வார்மது வொப்பது
செம்பொனார் திலகம் உலகுக் கெல்லாம் நம்பன் நாம நமச்சிவாயவே 2

நெக்குளார்வ மிகப் பெருகிந் நினைந்தக்கு மாலை கொடங்கையில்
[எண்ணுவார்
தக்க வானவ ராத் தகுவிப்பது நக்கன் நாம நமச்சிவாயவே 3

யமன் தூதரும் அஞ்சுவர் இன்சொலால் நயம் வந்தோதவல்லார் தமை
[நண்ணினல்
நியமம் தான் நினைவார்க்கினி யான் நெற்றி நயனன் நாம
[நமச்சிவாயவே 4

கொல்வாரேனுங் குணம் பல நன்மைகள் இல்லாரேனும் இயம்புவ
[ராயிடின்
எல்லாத் தீங்கையும் நீங்குவரென்பரால் நல்லார் நாம நமச்சிவாயவே 5

மந்த ரம்மன பாவங்கள் மேவிய பந்தனையவர் தாமும் பகர்வரேல்
சிந்தும் வல்வினை செல்வமும் மல்குமால் நந்தி நாம நமச்சிவாயவே 6

நரகம் ஏழ்புக நாடின ராயினும் உரை செய்வாயினராயின் உருத்திரர்
விரவியே புகு வித்திடும் என்பவரால் வரதன் நாம நமச்சிவாயவே 7

இலங்கை மன்னன் எடுத்த அடுக்கல் மேல் தலங் கொள் கால்விரல்
[சங்கரன் ஊன்றலும்
மலங்கி வாய்மொழி செய்தவன் உய்வகை நலங்கொள் நாம
நமச்சிவாயவே 8

போதன் போதன கண்ணனும் அண்ணல் தன் பாதந்தான் முடி தேடிய
[பண்பராய்
யாதுங் காண்பரிதாகி அலந்தவர் ஓது நாம நமச்சிவாயவே 9

கஞ்சி மண்டையர் கையில் உண் கையர்கள் வெஞ்சொல் மிண்டர்
[விர வில ரென்பரால்
விஞ்சை அண்டர்கள் வேண்ட அமுது செய் நஞ்சுண்டகண்டன்
[நமச்சிவாயவே 10

நந்தி நாம நமச்சிவாயவ் வெனும் சந்தையாற்றமிழ் ஞானசம்பந்தன்
[சொல்
சிந்தையான் மகிழ்ந்தேத்த வல்லாரெல்லாம் பந்த பாச மறுக்க
[வல்லார்களே

திருச்சிற்றம்பலம்

# பஞ்சமுக பஞ்சாக்ஷரங்கள்

## 1. ஸத்யோஜாத சிவம்

ஓம் ஸத்யோஜாதம் ப்ரபத்யாமி ஸத்யோ ஜாதாயவை நமோ நம:
பவே பவே நாதிபவே பவஸ்வமாம் பவோத்பவாய நம: ||

ஸத்யோ ஜாத வைதிக மந்திர பிரதிபாத்ய சிவ ஸ்ரீ பாதுகாம்
ஓம் வாசிமயந | ஓம் நமசிவாய | ஓம் யநவாசிம | [பூஜயாமி |
ஓம் மவாய நசி | ஓம் சியநமவா |

ஸத்யோ ஜாத பஞ்சாக்ஷர கூட
பிரதிபாத்ய சிவ ஸ்ரீ பாதுகாம் பூஜயாமி ||

(ஒவ்வொரு நாமாவுடன் சிவ ஸ்ரீ பாதுகாம் பூஜயாமி என்று சேர்த்துச் சொல்லவும்.)

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 1. | ஓம் | ஷ்ரும் | சிவாய நம: | ப்ரஜாபதி | பஞ்சாக்ஷர |
| 2. | ,, | கடபேத் | ,, | மஹாபலி | ,, |
| 3. | ,, | ஐம் ஹ்ரீம் ஓம் | ,, | கீர்வாண | ,, |
| 4. | ,, | ஹும் | ,, | நய | ,, |
| 5. | ,, | யம் யம் யவாசிமன | ,, | கிரி | ,, |
| 6. | ,, | நளத் சிவாய ஓம் | ,, | விஷ்ணு | ,, |
| 7. | ,, | த்வம் ஹி சிவாய ஓம் | ,, | உச்சைச்ரவ | ,, |
| 8. | ,, | ஓம் ஜிம் வம் சிவாய நம: | ,, | மந்தாகினீ | ,, |
| 9. | ,, | அக்னிம் சிவாய ஓம் | ,, | அக்னீ | ,, |
| 10. | ,, | ஹ்ரீம் ஹ்ரீம் சிவாய ஹ்ரீம் | ,, | அகமர்ஷண | ,, |
| 11. | ,, | ரம் ளம் ஹும் சிவாய ஓம் | ,, | அன்னுத | ,, |
| 12. | ,, | பும் ரம் ஹும் | ,, | மோக | ,, |
| 13. | ,, | ஹிம் தம் சிவ சிவ ஓம் | | வாயு | ,, |
| 14. | ,, | மந்திரம் மந்திரம் நமசிவாய | ,, | ஸித்தி | ,, |
| 15. | ,, | யம் தும் சிவாய ஓம் | ,, | பரிமள | ,, |
| 16. | ,, | ளம் ஷேம் சிவாய ளம் ஷேம் ஓம் | ,, | ஸஸ்ய | ,, |
| 17. | ,, | ஹ்ரீம் ச்ரீம் ஈம் சிவாய ஓம் சிவாய | ,, | பூஜா | ,, |
| 18. | ,, | கேம் ஹ்ரீம் சிவாய ஓம் ஹும் | ,, ,, | திக் | ,, |
| 19. | ,, | ஹ்ரீம் ஹ்ரீம் ஹ்ரீம் சிவ சிவ சிவ ஓம் | ,, | கர்ண | ,, |
| 20. | ,, | நமசிவாய சிதம்பரம் ஓம் | ,, | ஆகாச | ,, |
| 21. | ,, | ஹ்ரீம் க்ரேம் சிவாய ஹம்ஸ | ,, | ப்ராண | ,, |
| 22 | ,, | ஜிம் ஜிம் சிவாய ஜிம் ஜிம் ஓம் | ,, | ஜிஹ்வா | ,, |
| 23. | ,, | ஹம்ஸ: ஸோகம் | ,, | ஆத்ம | ,, |
| 24. | ,, | ஓம் க்லீம் க்லீம் க்லூம் க்லூம் க்லைம் | ,, | ஸம்போக | ,, |
| 25. | ,, | ஐம் ஐம் சிவாய ஐம் ஐம் நம: | ,, | ஞான | ,, |

## 2. வாமதேவ சிவம்

ஓம் வாம தேவாய நமோ ஜ்யேஷ்டாய நம: | ச்ரேஷ்டாய நமோ ருத்ராய நம: | காலாய நம: | கலவி கரணாய நமோ பலவிகரணாய நமோ பலப் பிரதம நாய நமஸ் ஸர்வ பூததமனாய நமோ மனோன்மனாய நம: ||

வாமதேவ வைதிக மந்திர பிரதிபாத்ய சிவ ஸ்ரீ பாதுகாம் பூஜயாமி |

ஓம் சியநமவா | ஓம் வாசியயந | ஓம் யநவாசிம | ஓம் மவாய நசி | ஓம் நமசிவாய |

வாமதேவ பஞ்சாக்ஷர கூட பிரதிபாத்ய சிவ ஸ்ரீ பாதுகாம் பூஜயாமி ||

(ஒவ்வொரு நாமாவுடன் சிவ ஸ்ரீ பாதுகாம் பூஜயாமி என்று சேர்த்து சொல்லவும்.)

| | | | | |
|---|---|---|---|---|
| 1. | ஓம் ஸ்புரம் நமசிவாய சிவாய நம: | | பிரக்ஞான பஞ்சாக்ஷர | |
| 2. | ,, ஜூம் யம் ஹைமம் சிவாய வௌஷண்ணம நம: | ,, | ஆகாச | ,, |
| 3. | ,, ஹ்ரைம் தம் தம் ஓம் ஹூம் | ,, | பானஸ | ,, |
| 4. | ,, காம் காம் உம் உம் சிவ ஓம் | ,, | தேனு | ,, |
| 5. | ,, ஜம் ஜம் ஜம் சிவாய ஜம் ஓம் | ,, | புருஹூத | ,, |
| 6. | ,, ரம் ரம் சிவ ஓம் நம: | ,, | ஈசசா | ,, |
| 7. | ,, ரக்ஷ ரக்ஷ ஹ்ரீம் சிவாய ஸ்வாஹா | ,, | லகு வித்யா | ,, |
| 8. | ,, ஸம் ஹ்ரீம் ஹம் | ,, | ஸௌர வித்யா | ,, |
| 9. | ,, ஸௌம் சிவாய ஹூம்பட் | ,, | ஐந்தவ வித்யா | ,, |
| 10. | ,, டம் டம் சிவாய ஸ்வாஹா | ,, | கூடியாண வித்யா | ,, |
| 11. | ,, லம் லம் ஊம் | ,, | ஸஞ்சார வித்யா | ,, |
| 12. | ,, ச்விம் ஹ்ரீம் ஹூம் | ,, | ஆலோகன வித்யா | ,, |
| 13. | ,, க்ஷம் ஹம் சிவாய ஓம் நம: | ,, | விஞ்ஞான வித்யா | ,, |
| 14. | ,, கேம் கேம் ப்ரேம் க்ளம் | ,, | கேசர வித்யா | ,, |
| 15. | ,, ஹம் சோஷய சோஷய ஸம் ஸதாசிவாய நம: | ,, | ப்ராஸாத வித்யா | ,, |
| 16. | ,, ஹம் ஸம் லம் ஹூம் நமசிவாய | ,, | காமனு வித்யா | ,, |
| 17. | ,, ணம் நமசிவாய நம ஓம் | ,, | சுப வித்யா | ,, |
| 18. | ,, காம் ஹூம் சிவாய ஸ்ரீம் நம | ,, | கிர் வித்யா | ,, |
| 19. | ,, த்கிம் சிம்சம் வாம் வாம் யம் நம் யம் நம: | | ,, | சுபக வித்யா | ,, |
| 20. | ,, கம் ஹூம் சிவ சிவ சரணம் சிவானந்தம் சிவ சிவ சிவாய சிவாய | ,, | நிர்வாண வித்யா | ,, |
| 21. | ,, ஸௌம், ஹௌம், சிவாய சுந்தராய நம: | ,, | ஆச்சர்ய வித்யா | ,, |
| 22. | ,, ஹ்ரைம் சிவாய நம: | ,, | விமர்ச வித்யா | ,, |
| 23. | ,, ஸம் ஹ்ரீம், லீம் சிவாய நம: | ,, | சஞ்சீவினி | ,, |
| 24. | ,, க்லீம் மம் சிவாய ஹூம் பட் நம: | | ,, | ஆகண்டலி வித்யா | ,, |
| 25. | ,, வ்ரம் வ்ரம் சிவாய ஓம் நமஸ்வாஹா | | ,, | ப்ராண வித்யா | ,, |

## 3. அகோர சிவம்

ஓம் அகோரேப்யோ தகோ ரேப்யோ கோர கோர தரேப்ய ஃ | ஸர்வேப்யஸ் ஸர்வ ஸர்வேப்யோ நமஸ்தே அஸ்து ருத்ர ரூபேப்ய ஃ ||

அகோர வைதிக மந்திர பிரதிபாத்ய சிவஸ்ரீ பாதுகாம் பூஜயாமி

ஓம் மவாயனசி | ஓம் சிய நமவா | ஓம் வாசி மயந| ஓம் நமசிவாய| ஓம் யநவாசிம | அகோர பஞ்சாக்ஷர கூட பிரதிபாத்ய சிவ ஸ்ரீ பாதுகாம் பூஜயாமி ||

(ஒவ்வொரு நாமாவுடன் சிவ ஸ்ரீ பாதுகாம் பூஜயாமி என்று சேர்த்துச் சொல்லவும்.)

| | | | | |
|---|---|---|---|---|
| 1. | ஓம் அம் கம் மவாய நசி | சிவாய நம ஃ | ஸவ்ய | பஞ்சாக்ஷர |
| 2. | ,, ஸம் | ,, | ஸத்ய | ,, |
| 3. | ,, வம் | ,, | பிரும்ம | ,, |
| 4. | ,, யம் | ,, | விச்வ | ,, |
| 5. | ,, ஸர்ப ஸர்ப நமசிவாய | ,, | வருண | ,, |
| 6. | ,, மம் | ,, | வாருண்ய | ,, |
| 7. | ,, கம் கம் நமசிவாய | ,, | கருட | ,, |
| 8. | ,, லோகாய நமசிவாய | ,, | கஜ | ,, |
| 9. | ,, சிவ சிவ ஓம் | ,, | ஸங்கம | ,, |
| 10. | ,, சம் சிம் | ,, | யோகிநி | ,, |
| 11. | ,, விம்ஸ விம்ஸ | ,, | கண | ,, |
| 12. | ,, சிவ சரண்ய | ,, | சரண | ,, |
| 13. | ,, ஹ்ரைம் ஓம் | ,, | கந்த | ,, |
| 14. | ,, ஷம் ஷம் சிவாய நம ஃ | ,, | சிருஷ்டி | ,, |
| 15. | ,, ஸ்ரம் ஸ்ரம் சிவ சிவ ஓம் | ,, | ஸம்ஹார | ,, |
| 16. | ,, வ்ரம் வ்ரம் க்ஷம் சிம் ஓம் | ,, | சித்ர | ,, |
| 17. | ,, மம், மம், மம் | ,, | வைஸ்வாநர | ,, |
| 18. | ,, வஷட் வஷட் வநம வஷட் | ,, | திருஷ்டி | ,, |
| 19. | ,, ஹ்ரீம் சிவாய ஓம் நம ஃ | ,, | பர்ஜன்ய | ,, |
| 20. | ,, ஹ்ரீம் விம் | ,, | ஸரணி | ,, |
| 21. | ,, ஹ்ரீம் சிவ சிவ ஹ்ரீம் ஊம் | ,, | தியாந | ,, |
| 22. | ,, ஸம் ஸம் யவாசி நம ஃ | ,, | ஸமுத்ர | ,, |
| 23. | ,, ஸ்ப்ஸைம் ஸ்ப்ஸைம் ஓம் | ,, | யக்ஷணி | ,, |
| 24. | ,, ஹ்ரீம் நம ஃ சிவாய ஹ்ரீம் | ,, | சக்தி | ,, |
| 25. | ,, நம் ஓம் மம் ஓம் சிம் ஓம், வாம் ஓம் யம் நம ஃ | ,, | மஹா | ,, |

## 4. தத் புருஷ சிவம்

ஓம் தத் புருஷாய வித்மஹே மஹா தேவாய தீமஹி | தந்தோ த்ர ஃ ப்ரசோதயாத் ||

தத் புருஷ வைதிக மந்த்ர பஞ்சாக்ஷர பிரதிபாத்ய சிவ ஸ்ரீ ாதுகாம் பூஜாயாமி |

ஓம் யநவாசிம, ஓம் மவாயநசி ஓம் சிய நமவ, ஓம் வாசிமயந ஓம் மசிவாய |

தத் புருஷ பஞ்சாக்ஷரகூட பிரதிபாத்ய சிவ ஸ்ரீ பாதுகாம் பூஜாயாமி ||

(ஒவ்வொரு நாமாவுக்கும் கடைசியில் "சிவ ஸ்ரீ பாதுகாம் பூஜயாமி என்று சேர்த்துக் கொள்ளவும்.)

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 1. | ஓம் | சிவாய நம: அம்ஸௌம்ய | | | பஞ்சாக்ஷர |
| 2. | ,, | யநவாசிம | சிவாய நம: | கோர | ,, |
| 3. | ,, | ஆம் ஹ்ரீம் | ,, | ரூப | ,, |
| 4. | ,, | ஹம்ஸ | ,, | ஹம்ஸ | ,, |
| 5. | ,, | ஹம் | ,, | ஆத்ம | ,, |
| 6. | ,, | ஹிம் ஹிம் | ,, | ஆக்ஞா | ,, |
| 7. | ,, | க்லீம் | ,, | குண | ,, |
| 8. | ,, | ஹ்ரீம் நம: | ,, | மாயா | ,, |
| 9. | ,, | ஐம் நம: | ,, | ஸரஸ்வதி | ,, |
| 10. | ,, | க்ஷம் நம: | ,, | அம்ருத | ,, |
| 11. | ,, | ச்ரீம் நம: | ,, | ச்ரீம் சக்தி | ,, |
| 12. | ,, | ஹ்ரீம் சிவாய நம: ச்ரீம் | ,, | ஸித்தி | ,, |
| 13. | ,, | கௌம் | ,, | சந்திர | ,, |
| 14. | ,, | லிம் நம: சிவாய | ,, | ஜகதீ | ,, |
| 15. | ,, | ஸௌம் சிவாய நம: ஸௌ: | ,, | பராபர | ,, |
| 16. | ,, | க்ஷ்மிரீம் சிவாய நம ஸௌ: | | ஸ்கந்த | ,, |
| 17. | ,, | ஹ்ராம் ஹ்ரீம் | ,, | மோக்ஷ | ,, |
| 18. | ,, | லம் கம் ப்ரேம் | ,, | மஹாவித்யா | ,, |
| 19. | ,, | ஹர ஹர நம சிவாய ஓம் | ,, | கைலாஸ | ,, |
| 20. | ,, | ஜூம் நமசிவாய | ,, | ம்ருத்யுஞ்ஜய | ,, |
| 21. | ,, | ச்ரீம் ஹ்ரீம் ச்ரீம் நம: | ,, | லக்ஷ்மீ | ,, |
| 22. | ,, | ஹ்ராம் நமசிவாய | ,, | க்ஷிப்ரசித்தி | ,, |
| 23. | ,, | ஹௌம் | ,, | ஆனந்த | ,, |
| 24. | ,, | க்லீம் | ,, | க்லீம் அநங்க | ,, |
| 25. | ,, | ஹம்ஸ சிவாய நமோ ஹம்ஸ: | ,, | ஸர்வசித்தி | ,, |

## 5. ஈசான சிவம்

ஓம் ஈசான ஸர்வ வித்யாஞம் ஈஸ்வரஸ் ஸர்வ பூதானம் பிர்மாதி பதிர் பிரும்மணோதிர் பதிர் பிரும்மா சிவோமே அஸ்து சதாசிவோம் |

ஈசான வைதிக மந்த்ர ப்ரதி பாத்ய சிவ ஸ்ரீ பாதுகாம் பூஜயாமி |

ஓம் சிவாய நம: ஓம் நம: சிவாய ஓம் வாயநமசி ஓம் நவாமசிய ஓம் வாமசியன ஈசான பஞ்சாக்ஷரகூட ப்ரதியாத்ய சிவ ஸ்ரீ பாதுகாம் பூஜாயாமி ||

(ஒவ்வொரு நாமாவிற்கும் கடைசியில் சிவ ஸ்ரீ பாதுகாம் பூஜா யாமி என்று சேர்த்துக் கொள்ளவும்.)

| | | | |
|---|---|---|---|
| 1. | ஓம் | ச்ரீம் சிவாய நம: ப்ராஸாத கோசர | பஞ்சாக்ஷர |
| 2. | ,, | ஸூம் சிவாய நம: ஸூம் ப்ராஸாத சுந்தர | ,, |
| 3. | ,, | ஷ்த்ரம் சிவாய நம: ப்ராஸாத சேகர | ,, |
| 4. | ,, | க்ஷ்ரூம் சிவாய ஹ்ரீம் யம் நம: ஓம் சிவாய நம: ப்ராவஸார | ,, |

5. " த்க்ரைம் சிவாய நம ஃ சிவ ஓம்
சிவாய நமஃ ப்ராஸாத மூல மூலாதார சக்ர "

6. " ரைம் ஹ்ரீம் சிவாய நம ஃ ப்ராஸ பந்தன
ஸ்வாதிஷ்டான சக்ர "

7. " ஹ்ரீம் ஓம் ஹ்ரீம் சிவாய நம ஃ ப்ராஸாத புஜங்க
மணிபூரக சக்ர "

8. " ஹூம் சிவ சிவ ஓம் சிவாய நம ஃ ப்ராஸாத மந்த்ர
அநாகத சக்ர "

9. " க்லீம் ஹூம் க்ஷம் சிவாய ஹூம் பட்
சிவாய நம ஃ ப்ராஸாத கமல விசுத்தி சக்ர "

10. " லூம் ஹூம் சிவாய ஹௌம் சிவாய நம ஃ ப்ராஸாத
வித்யாதர ஆக்ஞா சக்ர "

11. " ஹ்ரீம் ளம் ஓம் சிவாய ஹ்ரீம் சிவாய நம ஃ
ப்ராஸாத காந்த அக்னி மண்டல "

12. " ல்ரூம் நமசிவாய ல்ரூம் ஓம் சிவாய நம ஃ ப்ராஸாத
விகஞான ஆதித்த மண்டல "

13. " ஐம் ஹூம் சிவ ஓம் நம ஐம் ஹூம் சிவாய நம ஃ
ப்ராஸாத சிந்தாமணி சோம மண்டல "

14. " ஔம் நம ஃ சிவாய ஓம் சிவாய நம ஃ ப்ராஸாத
தீபிகா மந்த்ர தர்சன "

15. " ஆம் ஹ்ரீம் சிவ ஹூம் ஸ்வாஹா சிவாய நம ஃ
ப்ராஸாத வித்யா வர்ண தர்சன "

16. " அஃ அஃ சிவ ஓம் நம ஃ சிவாய நம ஃ ப்ராஸாத
கமல புவனத்வ தர்சன "

17. " ளம் ளம் சிவாய ஔம் நம ஃ சிவாய நம ஃ
ப்ராஸாத மஞ்சரீ பதாத்வ தர்சன "

18. " ணம் தம் சிவாய ஔம் நம ஃ ஔம் சிவாய நம ஃ
ப்ராஸாத கவச தத்வமார்க்க தர்சன "

19. " ணிம் மம் ஓம் நம ஃ சிவாய நம ஃ ஹ்ரீம் சிவாய நமஃ
ப்ராஸாத ரகதாகார கலாத்வ தர்சன "

20. " ஜ்ரம் சிவாய நம ஃ ஹ்ரும் ஓம் ப்ராஸாத
கௌஸ்துப விசேஷ தீக்ஷா தர்சன "

21. " ஜ்ரம் ஓம் ஹம்ஸ ஓம் சிவாய நம ஃ ப்ராஸாத
கௌஸ்துப சமய தீக்ஷாதர்சன "

22. " ஜ்ரூம் சிவாய நம ஃ ஓம் சிவாய நம ஃ ப்ராஸாத

23. " காம் காம் ஓம் சிவாய ஓம் சிவாய நம ஃ ப்ராஸாத
ரூத்ர ஞான தீக்ஷா தர்சன "

24. " ஹ்ராம் சிவாய நம ஃ ஹ்ராம் சிவாய நம ஃ
ப்ராஸாத ஹ்ருதய ஸர்வ ஞான தீக்ஷா தர்சன "

25. " ஔம், ஔம், ஔம் நம ஃ சிவாய ஔம் ஔம்
ஔம் சிவாய நம ஃ மஹாப்ராஸாதி சிவதர்சன ஸாலோக
ஸாரூப்ய ஸாயுஜ்ய ஸாமீப்ய ஸர்வ தர்சன பஞ்சாக்ஷர
ப்ரதிபாத்ய சிவ ஸ்ரீ பாதுகாம் பூஜாயாமி ॥



# சிவப் பிரார்த்தனை

## சிவ காயத்ரி

ஓம் தத் புருஷாய வித்மஹே மஹா தேவாய தீமஹி
தந்நோ ருத்ர: பிரசோதயாத் ||

## சிவ தியானம்

ஓம் நமோ பகவதே ருத்ராய பூர்வ முகாய நம: ||
ஸர்வப்ய: சர்வ சர்வேப்ய: நமஸ்தேஸ்து ருத்ர ரூபேப்ய: |

ஓம் நமோ பகவதே ருத்ராய தக்ஷிணமுகாய நம: ||
ஓம் சத்யோஜாதம ப்ரபத்யாமி சதயோஜாதாயவை நமோ நம: |
பவே பவே நாதி பவே பவஸ்யமாம் பவோத் பவாய நம: || 2

ஓம் நமோ பகவதே ருத்ராய பச்சிமமுகாய நம ||
ஓம் வாம தேவாய நமோ ஜ்யேஷ்டாய நம:
ச்ரேஷ்டாய நமோ ருத்ராய நம: காலாய கலவிகரணாய நமோ
பல விகரணாய நமோ பலாய நமோ பலப்ரமதநாய நம:
ஸர்வ பூததமநாய நமோ மநோன்மனாய நம: || 3

ஓம் நமோ பகவதே ருத்ராய உத்தரமுகாய நம:
ஓம் ஈசான ஸர்வ வித்யாநாமீசவர:
ஸர்வ பூதாநாம் பிரஹ்மாதிபதிர்
பிரஹ்மணோதிபதிர் பிரஹ்மா சிவோமே அஸ்து சதாசிவோம் || 4

ஓம் நமோ பகவதே ருத்ராய ஊர்த்வமுகாய நம: ||
ஓம் நமோ ஹிரண்ய பாஹவே ஹிரண்யவர்ண
ஹிரண்ய ரூபாய ஹிரண்ய பதயே அம்பிகா பதயே
உமாபதயே பசுபதயே நமோ நம: || 5

ஓம் நமோ பகவதே ருத்திராய ஷஷ்டமுகாய நம: || 6

## பஞ்சாக்ஷரம்

ஓம் நமசிவாய என்ற பஞ்சாட்சரத்தை இமைகளுக்கு இடையே லிங்க சொரூபத்தில் வைத்து மனமொன்றி ஜபம் செய்வது முறை.

நாகேந்த்ர ஹாராய திரிலோசனாய
பஸ்மாங்கராகாய மஹேச்வராய |
நித்தாய சுத்தாய திகம்பராய
தஸ்மை நகாராய நம சிவாய || 1

மந்தாகினி ஸலில சந்தன சர்ச்சிதாய
நந்தீஸ்வர ப்ரமதநாத மஹேஸ்வராய |
மந்தார புஷ்ப பஹுபுஷ்ப பூஜிதாய
தஸ்மை மகராய நம சிவாய 2

சிவாய கௌரீ வதனுப்ஜ பால சூர்யாய
தக்ஷாத் வர நாசகாய ।
ஸ்ரீ நீலகண்டாய விருஷத்வஜாய
தஸ்மை சிகாராய நமசிவாய ॥ 3

வசிஷ்ட கும்போத்பவ கௌதமாய
முனீந்திர தேவார்ச்சித சேகராய ।
சந்த்ரார்க வைச்வாநர லோசனாய
தஸ்மை வகாராய நமசிவாய ॥ 4

யக்ஷ ஸ்வரூபாய ஜடாதராய
பினாக ஹஸ்தாய ஸனாதனாய
திவ்யாய தேவாய திகம்பராய
தஸ்மை ய காராய நமசிவாய ॥ 5

பஞ்சாக்ஷரம் இதம் புண்ணியம ய: படேச் சிவ ஸன்னிதௌ
சிவலோக மவாப்னோதி சிவனே ஸஹமோததே ॥

## பஞ்சாக்ஷர வகைகள்

பஞ்சாட்சரம் ஐந்தெழுத்தை உடையதாயினும், சாதகர் களின் பக்குவத்திற்கேற்ப அது முறையில் ஐந்து வகையாகக் கூறப்பட்டுள்ளது. அவையாவன :—

1. ஸ்தூல பஞ்சாட்சரம — நமசிவாய
2. சூக்ஷ்ம பஞ்சாட்சரம் — சிவாய நம
(ஒரு தலை மாணிக்கமென்றும் கூறுவர்)
3. காரண பஞ்சாட்சரம் — சிவாய சிவ
(இரு தலை மாணிக்கமென்றும் கூறுவர்)
4. மகா காரண பஞ்சாட்சரம்— சிவ
5. மகா மனு பஞ்சாட்சரம் — சி

இதனை 'நாயோட்டி மந்திரம்' என்றும், முக்தி பஞ்சாட்சரம் என்றும் பரிபாஷையால் அழைப்பார்கள்.

## ஸ்தூல பஞ்சாக்ஷர விளக்கம்

பஞ்சாட்சரத்தில், சிகாரம்—சிவம்; வகாரம்—அருள். யகாரம்—ஆன்மா; நகாரம்—திரோதம்; மகாரம்—மலம் என்பர்;

இந்த மகா மந்திரத்தில் 'நம' என்னும் பதம் பசுவையும், 'சி' என்னும் பதம் பதியையும்' 'வய' என்னும் பதம் பாசத்தையும் குறிக்கும். உபதேச வாயிலாக அறியப்பட வேண்டிய இந்தப் பேருண்மைகள் விளக்காமல் விடப்படுகின்றன.

பஞ்சாட்சரத்திற்கு க்ஷேத்திரம் ஐந்து. தர்மீஸ்வரம் (கடைசியில் சோழர்கள் இருந்த இடம்) பட்டீஸ்வரம், சோழ மாளிகை, திருசத்தி முத்தம், ஆலய வடதளி. இவை 24 காயத்ரீ க்ஷேத்திரங்களில் அடங்கியவை.

# நமசிவாய வாழ்க!

நமசிவாய வாழ்க! நாதன் தாள் வாழ்க
இமைப் பொழுதும் என் நெஞ்சில் நீங்காதான் தாள் வாழ்க
கோகழியாண்ட குருமணி தன் தாள் வாழ்க
ஆகம மாகி நின்று அண்ணிப்பான் தாள் வாழ்க

—மாணிக்கவாசகர் (சிவபுராணம்)

சிவ வழிபாட்டுக்கு ஜீவஸ்தானமாக உள்ளது ''பஞ்சாட்சரம். (''நமசிவாய'') என்ற மகா மந்திரம்.

மதுரை மீனாக்ஷி சுந்தரேஸ்வரர் ஆலயம் போல இது வேதத்தில் நடு மையத்தில் அழகாக அமைந்துள்ளது. வேதங்கள் நான்கு எனினும், அதர்வண வேதம் மற்ற மூன்று வேதங்களின் தொகுப்பே. வேதங்களில் மூன்றுக்கே முக்கியத்துவம் கொடுக்கப் படுகின்றன.

த்ரயீவை வித்யா ரிச யஜூஷி ஸாமாநி

என்று சதபதப் பிராம்ஹணம் கூறுகிறது. 'இதி வேதா த்ரயஸ்தவீ' என்பது அமர நிகண்டு. ரிக்குகளால் துதிக்கிறார்கள். யஜுஸ்ஸால் ஹோமம் (யஜனம்) செய்கிறார்கள். ஸாமத்தால் பாடுகிறார்கள். இம்மூன்றில் நடுவிலுள்ளது யஜுர் வேதம். இதில் 101 சாகைகள். 51-வது (நடு) சாகை போதாயன சாகை எனப் படும். இதில் ஏழு காண்டங்கள். இதில் நாலாவது (நடு) காண்டம் சதுருத்ரீயம். இதன் நடுவில் உள்ளது ஐந்தாவது பிரச்னம். அதில் சோமாயச, ருத்ராயச என்னும் அனுவாகத்தின் இருதயத்தில் நமசிவாய அமைந்திருக்கிறது.

இதைப் பார்க்கும்போது ஒரு கிடைத்தற்கரிய ரத்தினத்தை மிகப் பத்திரமாகப் பாதுகாப்பது போல இம் மந்திரம் வைக்கப் பட்டுள்ளது. இதைப்பற்றி ஸ்ரீ அப்பைய தீக்ஷிதர் குறிப்பிட்டதாவது :—

யஜ்-ஜீவரத்ன மகிலாகம லாலனீயம்
யே சத்ரி நேத்ர-ம்ருட சங்கர நாம தேயே
ஏதைரபி ஸ்புட மனன்ய ஸமாச்ரயம் தே
விக்யாபயதே ஸகல ஜீவ ஸுகப்ர தத்வம்

எப்படி வேதத்தில் 'நமசிவாய' நடுநாயகமாக விளங்குகிறதோ அதுபோலவே தமிழ் மறையாகிய மூவர் தேவாரத்தில் இது நடுவில் காணபபடுகிறது. ''பழுத்தன ஐந்தும் பழமறையினுள்ளே'' என்பது திருமூலர் வாக்கு. ''வேத நான்கிலும் மெய்ப் பொருளாவது'' என்று சம்பந்தர் அருளியிருககிறார்.

திருஞான சம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரமூர்த்தி சுவாமிகள் மூவரும் இயற்றிய பாடல்கள் தேவாரம் எனபபடும். மூவர் தேவாரதநுள் இடை நிற்பது திருநாவுக்கரசர் தேவாரம். நான்கு, ஐநது, ஆறு திருமுறைகள திருநாவுக்கரசரால் அருளப் பட்டவை. இம் மூனறில நடுவிலுள்ளது ஐந்தாம திருமுறை.

இத் திருமுறையில் இடம் பெற்றிருக்கும் பதிகங்களின் எண் ணிக்கை 100. இறுதியில உள்ள 97-வது பதிகம் சித்தத் தொகை, திருக்குறுந தொகை. இரணடு பதிகங்களுக்குரிய பாடல்களைக் கொண்டது. இதனை இரண்டாகக் கொணடால் பதிகத் தொகை 101 ஆகும்.

இவ்வகையில் நடுப் பதிகமாக அமைவது 51-ம் பதிகமாகிய திருப்பாலைத்துறைப் பதிகம். இப்பதிகத்தில இடம் பெற்றுள்ள 11 பாடல்களில் இடை நிற்பதாகிய 6-ம திருப்பாட்டில் 'சிவாய' என்னும் சிவமூல மந்திரம் அமைநது விளங்குகிறது.

விண்ணினுர் பணித்தேத்த வியப்புறும்
மண்ணினுர் மறவாது சிவாயவென
றெண்ணினுர்க்கிட மா எழில் வானகம்
பண்ணினுரவர் பாலைத் துறையரே

பக்தியின் துணைகொண்டு தான், சமயத்தின் அனுபவத்தை நாம் பெற முடியும். எனவே மந்திரம் சைவத்திற்கு முக்கிய மாகிறது. நினைத்த பயனைக் கொடுப்பது மந்திரம். மந்திர ராஜாவாக இருப்பது 'நமசிவாய' என்னும் பஞ்சாட்சரம். இதில் 'நம' என்பது நாம் விலக்க வேண்டிய அகங்கார மமகாரங்களைக் குறிக்கிறது. 'சிவ' என்பது துணியப்படும் பொருளைக் குறிக் 'ய'

''சிவ'' என்ற வார்த்தை எப்படி ஏற்பட்டது? சிவ வை ச்+இ+அ என்று பிரிக்கலாம். இதில் இயங்கும் எழுத்து 'ச' காரமும், 'இ' காரமும். 'ச' என்பது சரண் என்கிற புகலிடத்தைக் குறிககும். இ-இவன் என்பதைக் குறிக்கும். ''இவனிடம் நீ சரணடைய வேண்டும்'' என்பதை இந்த ''சிவ'' குறிக்கிறது.

'வ' உயிரைக் குறிக்கிறது. 'ய' ஆருயிரைக் குறிப்பிடும் குறிப்பு எழுத்து. 'ந' மறையாற்றலைக் குறிக்கிறது. 'ம' மலம் மாயைகளைக் குறிக்கும். உயிர்கள் இறைவனை சரண் அடைந் தால் எல்லா கஷ்டங்களும் நீங்கி அவன் அருள் பெறலாம் என்பதே ''சிவாய நம'' என்ற சொல்லின் அர்த்தம்.

## பஞ்சாட்சரம்

பஞ்சாட்சரமே ஈசானம், தத்புருஷம், அகோரம், வாமதேவம், சத்யோஜாதம் என்னும் பஞ்ச பிரும்ம மத்திரங்களாகி அவை

ஒவ்வொன்றும் இருபத்தைந்தாக நூற்றிருபத்தைந்து பஞ்சாட்சர* மந்திரங்களாக விரிந்துள்ளன. இந்த விரிவு எல்லாம் ருத்திர யாமளம், ஆம்நாயம் முதலிய நூல்களில் விளககப்பட்டுள்ளன. (ஈசானம், தத்புருஷம் முதலிய ஐந்து சிவபெருமானின் ஐந்து முகங்களாகும்).

பஞ்சாட்சரம் ஓது முறையில் ஐந்து, வகைகள் கூறப் பட்டுள்ளன. அவை :—

ஐந்தெழுத்து ஸ்தூலம் சூக்ஷ்மம், காரணம், மகா காரணம், முக்தி என ஐந்து வகை.

'ந' காரம் முதலாக ஓதுவது மறை வழக்கு.

'சி' காரம் முதலாக ஓதுவது ஆகம வழக்கு.

அறிவால் சிவனே என்று போற்றப் பெற்ற மாணிக்கவாசகர் தன் சிவபுராணத்தில் நமசிவாய வாழ்க என்று தொடங்கியவர் சிவாய என்று முடிப்பது கவனிக்கத்தககது.

எட்டெழுத்து, பன்னிரண்டு எழுத்து மந்திரங்கள் பிரணவத் துடனேயே ஓதப்படும். இந்த பஞ்சாட்சரமும் ஷடாக்ஷரமும் பிரணவமின்றியே ஓதப்படும காரணம், இந்த மந்திரங்களுக்கும் பிரணவத்திற்கும வேற்றுமையில்லே. இந்த ஐந்தெழுத்தை 'தாரகம்' என்பர்.

பஞ்சாட்சர ஐந்து எழுத்துக்கள் குறிப்பிடும் பொருள்கள்:

பஞ்ச பூதங்கள் :—ஆகாயம், வாயு அக்னி, நீர், மண்.

டஞ்சதன் மாத்திரைகள்:—சப்தம், ஸ்பரிசம், ரூபம், ரசம், கந்தம்.

பஞ்ச கன்மேந்திரியங்கள்:—வாக்கு, சப்தம், கை, கால், உபஸ்தம்.

பஞ்ச ஞானேந்திரியங்கள்:—கண், காது, மூக்கு, வாய், மெய்.

அந்தக்கரண பஞ்சகம்:—புத்தி, அகங்காரம், சித்தம், மனம், உள்ளம்.

பஞ்ச கலேகள்:—நிவர்த்தி, பிரதிஷ்டை, வித்யை, சாந்தி, சாந்தியாதீதம்.

பஞ்ச சதாக்கியம்:—கன்மம், கர்த்துரு, மூர்த்தி, அமூர்த்தி, சிவம்.

பஞ்ச சக்தி:—பராசக்தி, ஆதி சக்தி, இச்சா சக்தி. ஞான சக்தி, கிரியா சக்தி.

---

* இந்த 125 பஞ்சாட்சரங்கள் கொண்ட பட்டியல் பின்னல் சேர்க்கப் பட்டுள்ளது.

பஞ்ச பிரும்மம்:—ஈசானம், தத்புருஷம், அகோரம், வாம தேவம், சத்யோஜாதம்.

பஞ்ச கர்த்தாக்கள்:—பிரும்மா, விஷ்ணு, ருத்திரன், மகேஸ்வரன், சதாசிவன்.

பஞ்ச கிருத்தியங்கள்:—சிருஷ்டி, ஸ்திதி, சம்ஹாரம், திரோதானம், அனுக்கிரகம்.

பஞ்ச வர்ணங்கள்:—அகாரம், உகாரம், மகாரம், விந்து, நாதம்.

பஞ்ச பக்ஷிகள்:—வல்லூறு, ஆந்தை, காகம், கோழி, மயில்.

பஞ்சாட்சர எழுத்துக்களை மாற்றி அமைத்து உருவேற்றி ஜபிப்பதன் மூலம் ஸ்தம்பனம், மோகனம், வசியம், ஆக்ருஷணம் உச்சாடனம், பேதனம், மாரணம், வித்வேஷணம் என்ற அஷ்ட கர்ம வித்தை சித்திகளைப் பெறலாம்.

## ஜபத்திற்கு ஏற்றவை

சிவபஞ்சாக்ஷரீ—ஓம் நம : சிவாய
சக்தி பஞ்சாக்ஷரீ—ஓம் ஹ்ரீம் நம : சிவாயை
ஸ்ரீ குரு தாரக பஞ்சாக்ஷரீ—ஓம் நம : சிவாய
ஓம் நகராய நம : சிவாய
ஓம் மகாராய நம : சிவாய
ஓம் சிகாராய நம : சிவாய
ஓம் வகாராய நம : சிவாய
ஓம் யகாராய நம : சிவாய
ஓம் நம : ஸ்ரீ குரு தேவாய
பரம புருஷாய ஸர்வ தேவதா வசீகராய,
ஸர்வாரிஷ்ட விநாசாய ஸர்வதுர் மந்திர சேதனாய
த்ரை லோக்யம் வசமானய ஸ்வாஹா ||

இந்தியாவின் மகிமையை உயர்த்திய யோக சாஸ்திரத்தின் நாயகன் சிவபெருமான். தக்ஷிணாமூர்த்தமே சிவன் யோகத்தில் இருப்பதை விளக்குகிறது. நாசித் துவாரங்களை சிவன்-சக்தி (வலம்-இடம்) என்று யோக சாஸ்திரம் கூறுகிறது. பஞ்சாட்சரத்தில் நம என்பதை உச்சரித்துக் கொண்டே மூச்சை உள்ளிழுத்து 'ஓம்' என்று சிறிது நேரம் நிறுத்தி 'சிவ' என்று சொல்லி வெளியிடும்போது 'ய' என்கிற அக்ஷரம் மந்திரத்தின் ஜீவனாக அமைந்து இந்த சுவாசத்தைப் பூர்த்தி செய்கிறது. கர்ம வினையால் ஏற்படும் பிறப்பு இறப்புக் காலத்தைக் குறுக்கி ஜீவன் மோக்ஷத்தையடைய சிவ பஞ்சாட்சர ஜபம் பெரிதும் உதவுகிறது.

யோகிகளின் மூச்சு, ஆகாரம் எல்லாம் இப்பஞ்சாட்சரமே. இந்த 'நமசிவாய'வில் சகல தத்துவங்களும் அடங்கியுள்ளன. அதனால்தான் சிவவாக்கியர்,

''சிவாய வென்னும் அக்ஷரம் சிவனிருக்கும் அக்ஷரம்
உபாயமென்று நம்புவோருக்கு உண்மையான அக்ஷரம்
கபாடமிட்ட வாயுவைக் கடந்துபோகும் வாயுவை
உபாயமிட்டழைக்குமே சிவாய என்றெழுத்துமே''
என்று பாடியுள்ளார்.

இந்த பஞ்சாட்சரமே பிருத்வி, அப்பு, தேயு, வாயு, ஆகாசம் என்கிற பஞ்ச பூதங்கள். இவ்வைந்துமே சுவாதிஷ்டானம், மணி பூரகம், அநாகதம், விசுத்தி, ஆக்ஞை ஆகிய யோகநிலை. சிவத்தை உபாசனை யோகமார்க்க மூலமாக அறிந்து வழிபட உதவுகிறது பஞ்சாட்சரம்.

அஞ்செழுத்திலே பிறந்து அஞ்செழுத்திலே வளர்ந்து
அஞ்செழுத்தை ஓதுகின்ற பஞ்ச பூத பாவிகாள்
அஞ்செழுத்தில் ஓர் எழுத்தை அறிந்து கூறவல்லீரேல்
அஞ்சலஞ்சலஞ்ச மென்று நாதன் அம்பலத்திலாடுமே

''நமச்சிவாய வாழ்க நாதன் தாள் வாழ்க''

என்று ஆரம்பமாகிறது மாணிக்கவாசகப் பெருமானின் சிவபுராணம். முதலில் வாழ்த்துக் கூறி, பின்னர் 'வெல்க' என்று பாராட்டி, அதன்பின் போற்றுகிறார். இம்மூன்றிலும் அவர் வாழ்த்திப் போற்றியது இறைவனின் திருவடிகளையே.

தான் எப்படி இச் சிவபுராணத்தைப் பாட நேர்ந்தது என்பதையும் மாணிக்கவாசகப் பெருமான்,

''சிவன் அவன் என் சிந்தையுள் நின்ற அதனால்
அவன் அருளாலே அவன் தாள் வணங்கி''ப் பாடுவதாகக் கூறுகிறார். சிவபெருமான் தன் நினைவின் உள்ளே நிலைபெற இருந்த அத்தன்மையினால் அவனது திருவருளாலே அவனுடைய திருவடிகளை வணங்கி இச் சிவபுராணத்தை இயற்றியதாக் கூறுகிறார்.

புல் முதல் மனிதன் வரை எவ்வளவோ ஜன்மம் எடுத்தாகி விட்டது. இந்த ஜன்மம் எடுத்து எடுத்து அலுத்துப்போய் விட்டது. அப்படி பிறந்த ஒவ்வொரு பிறப்பிலும் உன் நினைவு இருக்க வேண்டும் என்பதே அவர் பிரார்த்தனை.

புல்லாகிப் பூடாய் புழுவாய் மரமாகிப் பல்விருக்ஷம் ஆகிப்
பறவையாகி பாம்பாகி கல்லாய் மனிதராய் பேயாய்
கணங்களாய் வல் அசுரர் ஆகி முனிவராய்த் தேவராய்
செல்லா நின்ற இத்தாவர ஜங்கமத்துள்
எல்லாப் பிறப்பும் பிறந்து இளைத்தேன்

இப்படி எல்லாப் பிறப்புக்களையும் எடுத்து அல்லல்பட்டு அலுப்படைந்த எனக்கு 'பிறவா வரம் தரலாகாதா' என்று கெஞ்சுகிறார்.

அப்பர் சுவாமிகளோ குனித்த புருவத்தையும், குமிழ் சிரிப்பையும், எடுத்த பொற்பாதத்தையும் காண எத்தனை மனிதப் பிறவி வேண்டுமானாலும் எடுக்க தயார் என்கிறார்.

இறைவனின் ஐந்தொழில்களைக் குறிப்பிடுவதுடன் பஞ்சபூத ரூபத்தில் கலந்தும் நிற்கிறான் என்பதை,

அனைத்துலகும் ஆக்குவாய், காப்பாய்,
அழிப்பாய் அருள் தருவாய், போக்குவாய்

என்று குறிப்பிடுவது மூலம் சிருஷ்டி, ஸ்திதி, சம்ஹாரம், திரோதானம், அனுக்கிரகம் என்ற ஐந்தொழிலையும். குறிப்பிடுகிறார். நிறங்கள் ஐந்து உடையாய் என்பதன் மூலம் பஞ்ச பூதங்களுடன் இரண்டற கலந்து நிற்கிறான் என்பதையும் குறிப்பிடுகிறார். மண், புனல், அனல், காற்று, வான் என்கிற பொருளுடன் பிரிக்க முடியாதபடி கலந்து நிற்றலால் பொன்மை, வெண்மை, செம்மை, கருமை, புகைமை என்ற நிறங்களை இறைவன் பெற்றியிருக்கிறார்.

'நமசிவாய' என்பதற்குப் பொருள் சிவனுக்கு வணக்கம் என்பதே. ஆனால் அது சிவபெருமானுடைய நாமங்களில் ஒன்றாக கருதப்படுகிறது. ஞானசம்பந்தர் அவ்வாறே குறிப்பிடுகிறார்:

"நாதன் நாமம் நமசிவாயவே
நம்பன் நாமம் நமசிவாயவே
நல்லார் நாமம் நமசிவாயவே"

இந்த ஐந்தெழுத்தின் பெருமையை சம்பந்தர் பல இடங்களில் குறிப்பிடுகிறார்.

"நல்லவர் தீயரெனாது நச்சினர் செல்லல் கெடச்
சிவ முக்தி காட்டுவ......ஐந்தெழுத்துமே"

என்பதும்.

"மந்தரம் அன்ன பாவங்கள் மேவிய
பந்தனையவர் தாமும் பகர்வரேல்
சிந்தும் வல்வினை செல்வமும் மல்குமால்
நந்தி நாமம் நமச்சிவாயவே"

என்பதும் சம்பந்தர் தேவாரம்.

தன் நமசிவாயப் பதிகத்தில் அவர் நமக்குக் காட்டும் வழி.

காதலாகிக் கசிந்து கண்ணீர் மல்கி
ஓதுவார் தமை நன்னெறிக் குய்ப்பது
வேத நான்கினும் மெய்ப் பொருளாவது
நாதன் நாமம் நமசிவாயவே

ஊர் பேர் இல்லாத எம்பெருமானுக்கு 1000 பேர். ஆனால் அவருக்குகந்த மந்திரம் இதுவே என்று 'நமசிவாய வாழ்க' என்கிறார் மாணிக்கவாசகர்,

திருநாவுக்கரசர் சமணர் சூழ்ச்சியால் கல்லுடன் கட்டப்பட்டு கடலில் எறியப்பட்டபோது "நற்றுணையாவது நமசிவாயமே" என்று பாடி கரை ஏறினார். நமக்கும் பிறவிப் பெருங் கடலினின்றும் வெளியேற வழிகாட்டினார்.

சுந்தரர் ஐந்தெழுத்து ஓதும் முறையை நமக்குக் காட்டினார். நமசிவாய மந்திரத்தை நா சொல்லிச் சொல்லிப்பழக வைத்துவிட வேண்டும். பின் நான் மறந்தாலும் நா மறவாது. "நற்றவா உன்னை நான் மறக்கினும் சொல்லும் நா நமசிவாயவே" என்கிறார்.

> சிவாய நம என்று சிந்தித்திருப்போருக்குத்
> அபாயம் ஒரு நாளும் இல்லை—உபாயம்
> இதுவே மதியாகும் அல்லாத எல்லாம்
> விதியே மதியாய் விடும்

என்கிறது நல்வழி.

> சிறப்பு வனப்பு யாப்பு நடப்பு மறைப்போடு
> உறக்காண்பர் ஐந்தெழுத்தினுள்

என்கிறார் திருவள்ளுவர்.

மறை இரண்டு வகை :

(1) பொருள் மறை — மெய்ப் பொருள் உண்மையை விளக்குவது.

(2) புகழ் மறை — கருதியது கைகூட ஜெபிக்கும் கடவுள் புகழ்

பொருள் மறை, இறை, உயிர், தளை என்ற மூன்றையும் விளக்கும். இவை முறையே பதி, பசு, பாசம் எனப்படும். இம் மூன்றையும் முறையே குறிக்கும் எழுத்து சி ய ம. சிவய நம (பொருள் மறை, புகழ் மறை இரண்டும் கூடியது.)

இதை விளக்கும் பொருள்கள் சிவன், அருள், ஆன்மா, திரோதம், மலம், மாயை. இதை குறிக்கும் திருமூலர் பாட்டு,

> சிவன் அருள் ஆய சிவன் திருநாமம்
> சிவன் அருள் ஆன்மாத் திரோதம் மலம் மாயை
> சிவன் முதலாகச் சிறந்த நிரோதம்
> பவமதகன்று பரசிவனாமே.

ஓங்காரம் அ, உ, ம, விந்து, நாதம் என்ற ஐந்தெழுத்தின் தொகையின் வகையாகும்.

சிவயநம உய்த்துணரின் சிறப்பு, வனப்பு, யாப்பு, நடப்பு, மறைப்பு ஆகும்.

சிறப்பு — சிவத்தைக் குறிக்கும்
வனப்பு — அழகைக் குறிக்கும்
யாப்பு — பிணிப்பினைக் குறிக்கும்

நடப்பு — நடத்துதலைக் குறிக்கும். ஆவிகளை மலம், மாயை, கன்மங்களுடன் குழந்தைகளைக் கைப்பிடித்து நடத்துவது போல நடத்துதல் இத்திருவருளை ஆதி என்கிறார்கள் அதாவது பராசக்தி.

மறைப்பு — மாயை.

ஓயாது உலகியலில் உழலும் உயிர்கள் வீடுபேறு பெற வேண்டும். அதற்கு நடப்பாற்றல், வனப்பாற்றல் வேண்டும். இப்படி திகழ்வதே 'சிவயசிவ' இது முதல் நிலையில் சிவயநம முடிந்த நிலையில் 'சிவயசிவ' என்று ஆகும்.

இதை பட்டினத்தார்,

''தாயுடன் சென்று பின் தாதையைக் கூடி
பின் தாயை மறந்து ஏயுமதே நிஷ்டை''

என்று குறிப்பிடுகிறார்.

ஐம்பதெழுத்தும் ஐந்து எழுத்தில் அடங்கும் என்கிறார் திருமூலர்.

ஐம்பதெழுத்தே அனைத்து வேதங்களும்
ஐம்பதெழுத்தே அனைத்து ஆகமங்களும்
ஐம்பதெழுத்தின் அடைவை அறிந்த பின்
ஐம்பதெழுத்தே அஞ்செழுத்தாமே!

வேத ஆகமங்கள் ஐந்தெழுத்தில் அடங்கும். அவ்வெழுத்துக் களின் தோற்றமுறையை அறிந்தால் அவையனைத்தும் திருஐந்து எழுத்தில் அடங்கும். இந்த ஐந்து எழுத்தே ஸ்தூல பஞ்சாட்சரம். இதுதான் நமசிவாய. இவை முறையே மூர்த்தி, வாமை, ஆர்த்தி, பூரணி, ஈசானி என்ற ஐந்து சக்திகளை உணர்த்தும். இச் சக்திகள் சத்தியோ ஜாதம், வாமதேவம், அகோரம், ஈசானம், தத்புருஷம் ஆகிய ஐம்பெரு மறைகளால் உணர்த்தப்படும். இம் மறைகளுக்கு அ இ உ எ ஒ என்பவை பீஜங்கள்.

## பஞ்சாட்சர மந்திர மகிமை

★ திலகவதியார் திருநாவுக்கரசருக்கு திருநீற்றை ஐந் தெழுத்தை ஓதிக் கொடுத்தார். துடிதுடிக்கும் வயிற்றுவலி நீங்கியது.

★ மதுரை பாண்டிய மன்னன் நோயை சம்பந்தர் இந்த ஐந்து எழுத்தை கூறி விபூதி தடவி அகற்றினார்.

★ அமர்நீதி நாயனார் இந்த ஐந்தெழுத்தை ஓதி தராசுத் தட்டில் ஏறினார். தராசு சமநிலை அடைந்தது.

★ தண்டியடிகள் நாயனார் ஐந்தெழுத்து கூறி குளத்தில் மூழ்கி கண் பார்வை பெற்றார்.

★ ஆனாய நாயனார் ஐந்தெழுத்தை குழலில் ஊதி முக்தி பெற்றார்.

★ காரைக்காலம்மையார் ஐந்தெழுத்து மகிமையால் கைலாயம் சென்றார்.

★ புகழ்ச் சோழ நாயனார் தழலில் மூழ்கும்போது உச்சரித்தது இந்த ஐந்தெழுத்தே. நெருப்பு அவரை ஒன்றும் செய்ய வில்லை.

☆ மார்க்கண்டேயர் இந்த ஐந்தெழுத்தை ஜபித்தே யமனை வென்றார்.

★ ராவணன் இந்த ஐந்தெழுத்தைப் பாடியே பேறு பெற்றான்

அஞ்செழுத்தும் எட்டெழுத்தும் ஆறெழுத்தும் நால் எழுத்தும்
பிஞ்செழுத்தும் மேலே பெருவெழுத்தும்—நெஞ்செழுத்தில்
பேசும் எழுத்துடனே பேசா எழுத்தினையும்
கூசாமற் காட்டக் கொடி.

| | | |
|---|---|---|
| எட்டு எழுத்து | — | ஓம் அம உம் சிவாய நம |
| ஆறு எழுத்து | — | ஓம் சிவய நம |
| நாலெழுத்து | — | சிவ சிவ |
| பேசும் எழுத்து | — | வ |
| பேசா எழுத்து | — | சி |

ஆகையால் உலகியல், மோக்ஷ இயல் இரண்டையும் உள்ளவாறு உணர்த்தும் மாமந்திரம் ஐந்தெழுத்தே. முதலும் முடிவும் காட்டும் முதன்மை மறையாகும்.

பழமையான வேதங்களில் அதன் விழுப்பயனாக எழுந்தவை திருவைந்தெத்துக்கள். அவற்றை உணர்விற் கொண்டு வந்து அனுபவித்து அதன் பயனாகப் பரம் பொருளை உணர்நது இன்புறுவர் மிகச் சிலர். அறியாமையுடையவர்கள் எல்லா எழுத்தையும் அறிவோம் என்று கர்வமடைவர். உண்மையில் தலை எழுத்தைப் போக்கும் திருவைந்தெழுத்தின் அருள் நிலையை அவர்கள் அறியார். விதிப்பயனை வெல்வதற்கு திருவைந்தெழுத்து நெறி ஒன்றே எல்லா வேதங்களிலும் கூறப்பட்டுள்ளது.

சித்தத்தில் தித்திக்கும் மந்திரம் பஞ்சாட்சரம். சித்திக்கும் முக்திக்கும் அதுவே காரணம்.

ஒன்று கண்டீர் உலகுக்கு ஒரு தெய்வம்
ஒன்று கண்டீர் உலகுக்கு உயிராவது
ஒன்று கண்டீர் நமசிவாயப் பழம்
தின்று கண்டோற்கிது தித்தித்தவாறே —திருமூலர்.

வசிஷ்டர் ''தாரித்ரய துக்க தஹனாய நமச்சிவாய'' என்கிறார். தரித்திரமாகிய துக்கத்தை தகனம் செய்கிறது இம்மந்திரம் என்பது அர்த்தம்.

'ஆயிரம் எழுத்தா? நூறு எழுத்தா? ஐந்து எழுத்து தானே! இதைக்கூடவா உச்சரிகக முடியவில்லை' என்று கேட்கிறார் வள்ளலார் ராமலிங்க ஸ்வாமிகள்.

ஆயிர மன்றே நூறு மன்றே, ஈரைந்தன்றே
ஆயிரம் பேர் எநதை எழுத்து ஐந்தே காண்-நீயிரவும்
எல்லும் நினைத்தியென ஏத்துகினும் எத்தாய் வீண்
செல்லுமன் என் செய்கேன் செப்பு.

# சிவ வழிபாடு

மனோ புத்தி அகங்கார சித்தானி நாஹம்
ந சச்சோத்ர ஜிஹ்வே ந சக்ராண நேத்ரே
ந சவ்யோம பூமிர் ந தேவஜோ ந வாயுஸ்
சிதானந்த ரூப: சிவோகம் சிவோகம்

—ஆதிசங்கரர் (நிர்வாண ஷட்கம்)

சிவ வழிபாடு வேத காலத்திற்கும் முற்பட்டது. சிந்து வெளி நாகரிக மக்களிடையே இந்த வழிபாடு பரவியிருந்ததை மொகஞ்ச தாரோ, ஹரப்பா ஆராய்ச்சிகள் வெளிப்படுத்தியுள்ளன. கற்காலப் பொருள்களில் சிவலிங்கங்களும் கிடைப்பதால் வேத காலத்திற்கும் முற்பட்ட வழிபாடு என சரித்திராசிரியரான ஆர். ஜி. பந்தர்க்கார் கருதுகிறார்.

தொல்காப்பியத்தில் காணும் ''கந்தழி வழிபாடு'' சிவலிங்க வழிபாடே என்பது பல அறிஞர்களின் கருத்தாகும். எகிப்து, சிரியா, பாரசீகம், கிரேக்கம், இத்தாலி ஆகிய நாடுகளிலும் கூட சிவலிங்க வழிபாடு பரவியிருந்ததென்பதை பேராசிரியர் வெஸ்ட் ரோப் என்பவர் தன் நூலில் எழுதியிருப்பது குறிப்பிடத்தக்கது.

கிருஷ்ண பகவானின் அவதாரம் காரியம் முடிந்தது. இவ்வுலகை விட்டு நீங்க முடிவு செய்தபோது முனிவர்கள், சித்தர்கள் முதலியவர்கள் வந்து ''பகவானே! நீங்கள் எங்களை விட்டுப் போகிறீர்களே; வருவது கலியுகம். வெம்மையான அந்த யுகத்தில் எமக்கு உயர்வு யாது?'' என்று கேட்டார்கள்.

கண்ணபிரான் ''நீங்கள் வருந்த வேண்டாம். உங்களுக்கு ஐந்து பொருள்கள் உய்வைத் தரும். 1. சந்திரனை சடையில் தரித்த சிவபெருமானுடைய திருவடிக் கமலங்கள். 2. அத் திருவடியைப் பூஜிக்க நீர். 3. அர்ச்சிக்க மலர். 4. சிந்திக்க திரு ஐந்தெழுத்து. 5. பூசிக்கொள்ள திருநீறு. இந்த ஐந்து சாதனங்களும் உங்களுக்குத் துணை செய்யும்'' என்றார்.

சிவ வழிபாட்டின் சிறப்பை மிகவும் தெளிவான முறையில் முதன் முதலில் விளக்கம் தந்தவர் திருமூலரே. கோவில்களில் லிங்கங்களை ஒரு இடத்திலிருந்து மற்றொரு இடத்தில் பெயர்த்து வைக்கும் வழக்கம் இருந்திருக்க வேண்டும். அதை திருமூலர்,

தாவர லிங்கம் பறித்தொன்றில் ஸ்தாபித்தல்
ஆவதன் முன்னே அரசு நிலை கெடும்
சாவதன் முன்னே பெரு நோய் அடுத்திடும்
காவலன் பேர் நந்தி திட்டுரைதானே

என்று ஆட்சேபித்திருக்கிறார்.

அசோக மன்னர் கி.மு. 249-ல் தன் மகள் சாருமதியுடன் நேபாளம சென்றதாகவும், அங்கு பசுபதிநாதர் பெயரால் சைவ மடம இருந்ததாகவும், சாருமதி அம்மடத்தில் சேர்நது துறவி யானுள என்றும் வரலாறு கூறு

தென்னுட்டில் குடிமல்லம் (ஆந்திரா) குடுமியான் மலை (புதுக் கோட்டை தமிழ்நாடு) போன்ற இடங்களிலுள்ள சிவலிங்கங்கள் மிகத் தொனமை வாய்ந்ததாகும்.

கி.பி. ஆரும் நூற்ருண்டில் இயற்றப்பட்ட வராஹமிச்ரரின் 'பிருஹத் ஸம்ஹிதை' என்னும் நூலில் சிவவழிபாடு இடம் பெற்றுள்ளது.

ஞாயிறு வழிபாடே சிவ வழிபாடாக நாளடைவில் வந்த தென்று ஆராய்ச்சியாளர்கள் கூறுகின்றனர். சிவன் என்ருல் சிவந்தவன் என்று பொருள் கொண்டு இதை ஆதாரமாக இவர்கள் காட்டுகின்ருர்கள்.

சரித்திர காலத்திற்கு முன்பிருந்தே சிவ வழிபாடும், சக்தி வழிபாடும் இருந்து வந்திருக்கின்றன. இன்று இந்திய மக்களி டையே மதத்தில் நம்பிக்கை வளர அடிப்படையாக அமைந்தவை அந்த வழிபாடுகளே.

அவை அக்காலத்தில் பீதியை உண்டாக்கக் கூடியவையாக இருந்தன. அருவருப்பு கொண்டதான சடங்குகளும், அவைகளில் இடம்பெற்றிருந்தன. இவற்றிலிருந்து படிப்படியாக உயர்ந்து மிகச் சிரேஷ்டமான வேதாந்த நோக்குடன் மனித சமுதாயம் முழுவதையும் உய்விக்கும் ஐதிகங்கள் கொண்ட ஆத்மிக உணர்வு நிறைவு காணக்கூடிய ஆதர்ச வகைகள் வரையில் எத்தனையோ வித வழிபாடுகள்.

## சோமவித்யா

ஆதிநாள் சைவ சமய நூல்களில் யோகத்துடன் மந்திரம் மாந்ரீகம் இவையும் இடம் பெற்றிருந்தன. அவற்றுள் ஒன்று ''சோம வித்யா''.

சிவபெருமானுக்கு சோமன் என்ற பெயரும் உண்டு. பிரபாஸப்பட்டணம் (சோமநாதம்). சில யோகிகளின் கேந்திர ஸ்தானம். சோம வித்யா முறைப்படி திங்கட்கிழமை இவ்வழி பாட்டுக்கு மிகச் சிறந்த நாள். அதுவும் அன்று அமாவாஸை யாக இருந்தால் மிகவும் விசேஷம். திங்களும் அமாவாஸையும் கூடிய தினத்தில் சோமநாதத்தில் தங்கி பட்டினி விரதம் இருந்து இரவில் சரஸ்வதி நதி சமுத்திரத்தில் சங்கமமாகும் இடத்தில் நீராடி சேமநாதரை தரிசித்தால் கோடி கோடியாகப் பலன் என்று ஸ்காந்தம் கூறுகிறது.

பாராசீக யாத்திரிகர் ஆல் பெருனி சோம புராணம் என்று ஒன்று இருப்பதாகக் கூறுகிறார். ஆனால் இதுவரை அதை யாரும் பார்த்ததாகத் தெரியவில்லை. அகோரிகள் என்று ஒரு சைவப் பிரிவினர் இருக்கிறார்கள். சுடுகாட்டிலேயே வசித்து அங்குள்ள சாம்பலைப் பூசித் திரிபவர்கள். மண்டையோடுகளை மாலையாகவும் பாம்புகளை ஆபரணமாகவும் அணிபவர்கள். இவர்கள் சோம வித்யா முறையைப் பின்பற்றுபவர்கள்.

## சங்க காலத்தில்

தமிழ் நாட்டில் சங்க காலத்தில் சிவ வழிபாடு தலைதூக்கி யிருந்தது என்பது சங்க இலக்கியங்களிலிருந்து தெரிகிறது. இளங்கோவடிகள் தன் சிலபபதிகாரத்தில் ''ஆதியில்லாத முதல்வன், பிறவா யாக்கைப் பெரியோன், விடைக் கொடி யுடையவன். நுதல் விழி நாட்டத் திறையோன்'' என்றெல்லாம் சிவபெருமானைக் குறிப்பிட்டிருக்கிறார். மணிமேகலையில் சிவ பெருமானின் அஷ்ட மூர்த்தம்* புகழப்படுகிறது.

கலித்தொகையில் முதல் பாடலே சிவபிரானைப் பற்றியது. கொடிகட்டி, பாண்டுரங்கம், கபாலம் ஆகியக் கூத்துகளை சிவபெருமான் ஆடுவதை இப்பாடல் குறிப்பிடுகிறது. சிவனை வாழ்த்துவதுடன் ஆரம்பிக்கும் கலித்தொகை அவருடைய புகழைக் குறிப்பிட்டே முடிக்கப்படுகிறது.

உமையை ஒரு பாகத்தில் கொண்ட சிவபெருமானின் திருவடி நிழல் கீழ் மூவகை உலகமும் முறையே முகிழ்ந்தன என்று பெருந்தேவனார் ஐங்குறு நூறு காப்பில் குறிப்பிடுகிறார்.

பத்துப்பாட்டின் தொடக்கமே சிவமணம் கமழ்கிறது. மலைபடு கடாத்திலும், மதுரைக் காஞ்சியிலும் சிவபெருமானைப் பற்றிப் பல குறிப்புகள் காணலாம். காரியுண்டிக் கடவுள் என்கிறது. மலைபடுகடாம்,

நீரகம் பனிக்கும் அஞ்சுவரு கடுந்திறல்
பேச்சை நவிரம் மேயுறையும்
காரியுண்டிக் கடவுள் இயற்கையும்
(காரி என்றால் நஞ்சு)

## சிவ வழிபாட்டில் தலைசிறந்த ஆந்திரம்

பாரத புண்ணிய பூமியில் சிவ வழிபாட்டில் தலைசிறந்த பகுதி ஆந்திர மாநிலம் தான்.

ஆந்திர பாஷை, ஆந்திர லிபி இவைகளுக்கு தனி விசேஷம் உண்டு என்று காஞ்சி காமகோடிப் பெரியவர்கள் ஒரு சமயம் குறிப்பிட்டிருக்கிறார்கள்.

* விவரம் பின் பகுதியில விளக்கப்பட்டுள்ளது.

''பராசக்தியின் யந்திரத்தில் முத்திரைக்கு உபயோகமான லிபியாக ஆந்திர லிபி இருக்கிறது. பராசக்தி ஸ்திரீ ரூபம் ஆகையால் வாமாவர்த்தமான பூஜை அம்பிகைக்கு ஏற்பட்டிருக்கிறது. ஆந்திர லிபி தான் வாமாவர்த்தமானது (இடது பக்கமாக சுழித்து எழுதப்படுவது). மற்றவை தக்ஷிண வர்த்தமானவை. வர்த்தம் என்றால் சக்கரம். தெலுங்கு வட்டமான லிபியை யுடையது. அதிலும் இடது பக்கமாக எழுதப்படுவது. அதனால் தான் பரதேவதா யந்திரத்தில் ஆந்திர லிபி உபயோகிக்கப் பட்டிருக்கிறது.

''ஆந்திர பாஷை சிவப் பிரதானமானது. லிபி சக்தி ஸ்வரூபம், பாஷையையும் அர்த்தத்தையும் பார்க்கும்போது பாஷை சக்தி ஸ்வரூபம். அர்த்தம் சிவ ஸ்வரூபம்.

ஆந்திராவில் மகான்கள் பிரதிஷ்டை செய்த மூன்று லிங்கங்களே அம் மாநிலத்தின் எல்லையாக விளங்குகின்றன. அதனால் அதற்கு 'திரிலிங்க தேசம்' எனப் பெயர். அதுதான் தெலுங்கு தேசமாகிவிட்டது. தக்ஷிண எல்லை காளஹஸ்தி, மேற்கு எல்லை ஸ்ரீசைலம், வடக்கு எல்லை கோடிலிங்க க்ஷேத்திரம். (திராக்ஷாராமம்)

''ஆந்திராவில் வித்யாப்யாசத்தின் போது ''ஓம் நமசிவாய'' என்றுதான் சொல்லிக் கொடுக்கிறார்கள். இன்றும் அந்த வழக்கம் இருந்து வருகிறது.''

ஸ்ரீ அப்பைய தீக்ஷிதர் தமிழ் நாட்டில் அடையபலத்தில் பிறந்தவர். இவருக்குத் தெலுங்கு தேசத்தில் பிறக்கவில்லையே என்று ஒரு குறை. அங்கு சிவ சப்தம், சிவாத்மகமான வேதம், திரிலிங்க எல்லை, சிவ சம்பந்தமான பாஷை, சக்தி சம்பந்மான லிபி இவ்வளவும் ஆந்திராவில் இருப்பதால் அங்கு பிறக்க வில்லையே என்று அவர் குறைப்பட்டார்.

கி. மு. இரண்டாம் நூற்றாண்டில் சைவம் தனிச் சம்பிரதாயமாக பரவியிருந்தது. காந்தார நாடு இதன் நிலைக் களமாகத் திகழ்ந்தது.

சக வம்சத்து மன்னன் வெளியிட்ட செப்பு நாணயங்களில் நந்தியின் உருவம் பொறிக்கபட்டிருந்தது. கி. பி. முதல் நூற்றாண்டில் குஷான் மன்னனான விம்கதஃபிஸ் என்பவன் தான் பாரதத்திலேயே முதன்முதலாக தங்க நாணயம் வெளியிட்டான். இந்த நாணயத்தில் திரிசூலதாரியான சிவனும் நந்தியும் இடம் பெற்றிருந்தார்கள்.

சிவலிங்க பூஜை பற்றிய விவரம் மகாபாரதத்தில் வருகிறது.

சிவபெருமானே தனக்கு மிகப்பிரியமானது பூஜைதான் என்று சொன்னதாகவும் அதை முதன் முதலில் உலகுக்கு நடத்திக் காட்டியவர் அம்பிகைதான் என்றும் அதில் கூறப்பட்டுள்ளது.

## ஆகமம் உணர்த்துவது சிவபூஜையே தான்

ஆன்மாக்கள் மோக்ஷமடைய ஏற்பட்டது ஆகமம்*. வேதம், ஆகமம் இரண்டும் இறைவனே செய்தவை. ஆகமம் என்ற சொல்லுக்கு இறைவனிடமி[illegible] வந்தது என்று பொருள். ஆ—வந்து, க—அடைந்து, ம மதிக்கப்பட்டது. சிவனிடமிருந்து வந்து தேவியின் மனதை [illegible] மாலிஞல் கௌரவிககப் பட்டது என்று பொருள். அதாவது சிவன் ஆகமங்களைக் கூறினர். தேவி அதைக் கேட்டாள். விஷ்ணு அதை ஏற்று பரிபாலிததார்.

சிவபெருமான் ஆன்மாக்கள் மீதுள்ள கருணையால் அவை உய்யும்பொருட்டு சதாசிவ மூர்த்தியாய் வேதங்களையும் ஆகமங்களையும், சிருஷ்டி ஆரம்பத்திலேயே வெளிப்படுத்தினர். ஆகமங்கள் 28-ம் ஈசான முகத்திலிருந்து தோன்றின.

''வேதம் நீதிநெறியில் நிற்கும் உலகோர் பொருட்டு; ஆகமம் ஞான நெறியில் நிற்கும் சானமேரர் பொருட்டு'' என்பர். வேதம் சூத்திரம் போலவும், ஆகமம் அதன் வியாக்யானம் போலவும் ஒருவராலேயே அருளப்பட்டதால் இரண்டும் சமத்துமுடையவன.

''வேத நூல் சைவ நூல் என்றிரண்டே நூல்கள்
வேறுரைக்கு நூலினைறின் விரிந்த நூல்கள்
ஆதி நூல:நாதி யமலன் தருநூலிரணடும்
ஆரண நூல் பொது சைவ மருஞ் சிறப்பு நூலாம்
நீதியினைல உலகற்கும் சந்திநிபாதர்க்கும் நிகழ்த்தியது

—சிவஞான சித்தியார்

வேதத்தின் உண்மைப் பொருள், ஆகமம் என்ற கண் கொண்டு பார்ப்பவர்க்கே விளங்கும்.

---

*சிவாகமம், அம்பிகை ஆகமம், விஷ்ணு ஆகமம், குமார தந்திரம் என வெவ்வேறு இருக்கிறது. அந்தந்த தெய்வத்தை எப்படி பிரதிஷ்டை செய்து வழிபட வேண்டும் என அந்தந்த ஆகமங்கள் சொல்கின்றன. சைவாகமம் 28. அம்பிகை. ஆகமம் 64. ஒவ்வொர் ஆகமத்திலும் வாம பாகம், தக்ஷிண பாகம் என இரு பிரிவுகள். உபாசனைக் கிரமங்களைச் சொல்வதே ஆகமம், சைவ ஆகமம், பாஞ்சராத்ர ஆகமம் என இருவகை.

சிவனின் வந்தவை சைவ ஆகமங்கள். ஐந்து இரவுகளில் கூறப்பட்டது பாஞ்சராத்ர ஆகமங்கள். இந்த வைஷ்ணவ ஆகமத்தில் விகனஸர் என்ற ஸூத்திரக்காரர் ஸூத்திரத்திலேயே கோவில் பூஜா விதிகளைக் கூறியிருக்கிறர். ஆகவே ஆகமத்தைத் தழுவிய பூஜை, வைதீக பூஜை என்று இருவிதம் (சிதம்பரத்தில் வைதீக பூஜை).

ஆகமம் அருளிய சிவபெருமான் விரும்பியது எது?

எண்ணில் ஆகமம் இயம்பிய இறைவர் தாம் விரும்பும்
உண்மையாவது பூசனை என வுரைத்தருள
அண்ணலார் தமை அர்ச்சனை புரிய ஆதரித்தால்
பெண்ணின் நல்லவளாயின பெருந்தவக் கொழுந்து

—பெரிய புராணம்

சிவ பூஜை செய்வதையே இறைவன் விரும்புகிறார்.

ஆரண நூல் பொது சைவ மருஞ்சிறப்பு நூலாம்
நீதியினால் உலகர்க்கும் சந்திநிபாதர்க்கும் நிகழ்த்தியது

—சிவஞான சித்தியார்

வேதத்தின் உண்மைப் பொருள் ஆகமம் என்ற கண் கொண்டு பார்ப்பவர்க்கே விளங்கும்.

சிவ வழிபாட்டின் உன்னத நோக்கத்திற்கும், பயனுக்கும் ஆதிசங்கரர் அருளிய ''நிர்வாணஷ்டகம்'' என்னும் சுலோகங்களே சிறந்த சான்று.

## ஆனந்த நிலையின் ஆறு சுலோகங்கள்

1. மனமும் நானல்ல; புத்தியும் நானல்ல; நான் என்ற அகங்காரமும் நான் அல்ல; அறிவும், அறியும் சக்தியும் நானல்ல; காதும் நானல்ல; நாக்கு, மூக்கு, கண்களும் நானல்ல; ஆகாயம், பூமி, ஜோதி, காற்று நான் அல்ல; ஆனந்தமான சிவனே நான், நானே சிவன்.

2. உஸ்வாச நிஸ்வாச மூச்சினால் ஆனவன் நான் அல்ல. கபபித்தம் முதலிய ஏழு தாதுக்களாலும் ஆனவனுமல்ல; பஞ்ச கோசத்தால் ஆனவனும் நானல்ல; வாக்கு, கை, கால்கள் நான் அல்ல. ஆனந்த மயமான சிவனே நான், நானே சிவன்.

3. துவேஷம் எனக்கில்லை; ராகம் (அன்பு) எனக்கில்லை; லோபமும், மோகமும் எனக்கில்லை; மதமும், மாத்சரியமும் (சினமும்) எனக்கில்லை; தர்மத்துக்கும், சம்பத்துக்கும் சம்பந்தமில்லை. ஆனந்த மயமான சிவனே நான், நானே சிவன்.

4. புண்ணிய பாவம் எனக்கேது; ஓதுவது எனக்கேது; தீர்த்த தானம், வேதம், வேள்வி, சுகம், துக்கம் எனக்கேது; ஹவிஸ் நான் அல்ல; அனுபவிக்கிறவனும் நான் அல்ல. ஆனந்த மயமான சிவனே நான், நானே சிவன்.

5. மிருத்யுவிடம் (மரணத்திடம்) எனக்குப் பயமில்லை; ஜாதி வித்தியாசம எனக்கில்லை; தகப்பன், தாய் இல்லை; பிறவி இல்லை; பந்து சிநேகிதன் இல்லை; ஆசானும் சிஷ்யனும் இல்லை; ஆனந்த மயமான சிவனே நான், நானே சிவன்.

6. சஞ்சலம் இல்லாதவன்; உருவங்களால் கட்டுப்படா தவன்; இந்திரியங்கள் அனைத்தையும் ஜெயித்தவன்; பற்றை அறவே துறந்த எனக்கு முக்தியோ, பந்தமோ, விஷயமோ இல்லை. ஆனந்த மயமான சிவனே நான், நானே சிவன்.

## சிவ பூஜை செய்தவர்கள்

உமை காஞ்சி முதலிய இடங்களில் சிவபூஜை செய்தார். சிவபூஜை செய்ய வழி காட்டியவரே இவர்தான்.

விநாயகர் சிவபூஜை செய்த இடம் திருச்செங்காட்டாங்குடி. முருகன் வழிப்பட்ட இடம் திருமுருகன்பூண்டி. திருமால் சிவனை பூஜை செய்த இடம் திருவீழிமிழலை. பிரும்மா வழிபட்ட இடம் பிரம்மபுரம் (சீயாழி). இந்திரன் சிவபூஜை செய்த இடம் மதுரை. மைந்தன் அபிமன்யு மாண்ட அன்றிரவும், அர்ஜுனன் சிவபூஜை செய்தான் என்கிறது மகாபாரதம். இராமர் இராமேஸ்வரத்தில் சிவபூஜை செய்தார். சோமநாதத்தில் கிருஷ்ணர் வனை பூஜை செய்தார்.

## சிவத்துவேஷம் கூடாது

சிவத்துவேஷம் உடையவர்களிடம் அமங்கலமேதான் இருக்கும்; தாக்ஷாயணி தன் தகப்பன் தக்ஷனிடம் கூறுகிறார்:

யத் த்வய க்ஷரம் நாம கிரேரிதம் ந்ருணும்
ஸத்க்ருத் பிரஸங்காத க மாஸு ஹந்திதத் ।
பவித்திர கீர்த்திம் தமலங்கிய பாஸனம்
பவா நஹோ த்வேஷ்டி சிவம் சிவேதா ॥

"என்ன பாபம்! நீ சிவத்துவேஷம் செய்கிருய்; உனக்கு அமங்கலம் தான் வந்து சேரும்" என்கிருள். அது அம்பிகையின் வாக்கியம்.

வேண்டாம் என்று எவன் கூறுகிருனே தீண்டப்படாதவன் என்கிறது திருவாசகம். சிவம் என்றுலே அன்பு என்று தான் பொருள். அன்பையும், அகிம்சையையும் அடிப்படையாகக் கொண்ட சமயமாதலால் புலாலற்ற உணவைக் கூட சைவ சாப்பாடு என்கிறோம். மதத்தின் பெயரால் சாப்பாட்டைக் குறிப்பது உலகிலேயே சைவ சாப்பாடு ஒன்று தான். புலால் உண்பது சைவத்திற்கே விரோதமாகும்.

சைவத்தின் முதல் அங்கம் எளிமையும், தாழ்வும். "நான்" "நான்" என்று தன்னை முன்னே வைத்து ஆண்டவனை பின்னே தள்ளுபவன் சைவனாகமாட்டான்.

"சிவசொத்து குலநாசம்" என்பார்கள். அதனால் சிவன் கோவிலில் தரப்படும் பிரசாதத்தைத் தவிர வேறு எப்பொருளையும் சிவாலயத்திலிருந்து கொண்டுவரலாகாது,

குறைவிலா மங்கலக் குணத்தன் ஆதலின்
நிறைமலம் அநாதியின் நீங்கி நிற்றலின்
அறைகுவர் சிவனென அறிவின் மேலவர்

—காஞ்சி புராணம்

சைவம் என்றால் சிவ சம்பந்தம் உடையது என்று பொருள் படும். சிவ நெறி என்றும் பொருள்படும்.

சிவம் என்றால் மங்கலம், மங்கலத் தொடர்புள்ளது சைவம், ''நின்றதுவும் சரிப்பதுவும் சைவமேயாய்''
என்கிறா ஞானசம்பந்தர்;

சிவம் என்பது இறைவன் எத்தகைய மாறுதலுமின்றி தூயப் பேரின்பப் பொருளாய் அனுபவிக்கப்படும் தன்மையை உணர்த்துவதாகும்.

சைவம் என்பது ஒரு காலத்தில் ஒருவரால் நிறுவப்பட்டு நடந்து வருவதன்று. இதன் அடிப்படையாக உள்ள ஞான நெறியினை சிவபெருமான் முதன் முதலில் நான்கு முனிவர்களுக்கு ஒரு ஆலமர நிழலின் கீழ் இருந்து விளக்கியருளியதாக திருமுறைகள் கூறுகின்றன.

ஓர் ஆல் நிழல் ஒண்கழல் இரண்டும்
முப்பொழுது ஏத்திய நால்வருக்கு ஒளிநெறி காட்டினை

என்பது ஞான சம்பந்தர் வாக்கு.

ஆதியில் வியத்தகு ஆற்றல்களை தனித்தனிப் பல்வேறு தெய்வமாகக் கருதி வழிபட்டு வந்தனர். பின்னர் எல்லாவற்றையும் இணைத்து ஒரு முழு முதற் செம்பொருளாகக் கொண்டு வழிபடுவராயினர்.

இம் முழு முதற் கடவுளை 'ஏகம்' எனவும், 'சத்' எனவும் குறிப்பிட்டனர். (சத் என்றால் உள்ளது.) வேதம் உபநிஷத் இவைகளில் 'சத்' என்று வரும் இடங்களிலெல்லாம் இறைவனின் முழு முதல் தன்மை குறிக்கப்பட்டுள்ளது.

சிவபிரானை 'ஒருவன்' என்பது வேத வழக்கு. எனவே மாணிககவாசகர் ''ஒருவன் என்னும் ஒருவன் காண்க'' என்கிறார். 'சத்' என்ற சொல் சக்தியோடு இயைந்த சிவம் எனப் பொருள்படும்.

**சமயமல்ல நெறி**

சைவ சமயம் அக்காலத்தில் சமயம் என்று வழங்கப்படவில்லை. திருநெறி, மெய் நெறி, முன்னெறி, சிவமா நெறி என்று

தான் மகளாக அம்பிகை தாக்ஷாயணி பிறந்தாள்) அவன் பிரும்மாவிடம் இதைப்பற்றிக் கேட்டான்.

அவர் கூறினார்: ''படைக்கப்பட்ட தநு, கரண புவனபோகங்களாகிய உலகங்களை ஒடுக்குவது சம்ஹாரம். இச்செயலின் விளைவு ஆன்ம சுகம். தாமத குணத் தொழில்போல் தோன்றுவதால் அதை நிந்திக்கக்கூடாது. யமனுடைய தொழில் கொடும் தொழில் போலத்தான் தோன்றுகிறது. ஆனால் அவன் செய்வது நீதியின் சிகரமான செயல். சம்ஹாரத் தொழில் தாமஸ குணம்தான். ஆனால் அத்தொழிலைச் செய்யும் பரமேஸ்வரன் குணம் ஆகாது. இறைவன் நிர்க்குணன்.

படைத்தல், காத்தல், செய்பவர்கள் முக்குணவயப்பட்டவர்கள். அவர்களால் ஆன்ம சுகமான சம்ஹாரத்தைச் செய்ய முடியாது. முக்குணம் கடந்த பொருளே அதைச் செய்ய முடியும். கொலைத்தண்டனை என்று தீர்ப்புக்கூறுவதை உயர்நீதி மன்றமே வழங்க முடியும்.

இந்த பெருமைகளுடைய நிர்குணனை சிவபெருமானைக் குறித்து தவம் செய்து சகல போகங்களையும் பெற்று அவரையே தன் மருமகனாகவும் பெற்றான்.

ஙகார வெறி

வரமளித்த பரம்பொருளின் கருணையை மறந்து அவரை நிந்திக்கத் தொடங்கினான்.

''சம்ஹாரம் செய்பவர் தாமஸ குணத்தினர் அவரை வழிபடுவது சரியில்லை'' என்று முனிவர்களுக்கு தக்ஷன் உபதேசம் செய்ய ஆரம்பித்தான்.

தாக்ஷாயணி பிராணத் தியாகம் செய்ததும், சிவபெருமான் வீரபத்திரரை அனுப்பி யாகத்தைக் கலைத்ததும் எல்லோரும் அறிந்த கதையே.

பரம்பொருளின் பாதங்களை மறந்து ஆணவத்துடன் நடைபெறும் எச்செயல்களுமே தக்ஷயக்ஞம் தான்

வாகீச முனிவர் திருக்கைலையைப் பெயர்த்த ராவணனுக்காகப் பச்சாதாபப்பட்டார். சிவபெருமானின் கருத்தை விசாரியாது இரங்கினார். அதனாலேயே திருநாவுக்கரசராக பிறவி எடுக்க வேண்டியவரானார். பரமபதியின் கருத்தை விசாரியாமல் இரங்கியதும் தக்ஷயக்ஞமாயிற்று.

தக்ஷயக்ஞம், இரககம் முதலிய போர்வைகளுக்குள் மறைந்து வாழுவதை திருநாவுக்கரசர் கண்டுபிடித்து விலாப்புடைக்கச் சிரிக்கிறார்.

கள்ளனேன் கள்ளத் தொண்டாய்
காலத்தைக் கழித்துப் போக்கி

தெள்ளியேறுகி நின்று தேடினேன் நாடிக்கண்டேன்
உள்குவாருள் இற்றெல்லாம் உடனிருந்தறிதி யென்று
வெள்கினேன் வெள்கி நானும்
விலாவிறச் சிரித்திட்டேனே

"நல்லது என்று எண்ணிச் செய்தோம் இவ்வாறு முடிந் என்று வருத்துபவர்கள் நம் நாட்டில் பலர். அவர்கள் செயலனைத்தும் தக்ஷயக்ஞமே.

சிவபெருமான் சம்ஹாரக் கடவுள் என்றாலும் அருள்பாலிப்பதில் எவருக்கும் குறைந்தவரில்லை.

சைவ சமயத்திலுள்ள சமரசப் பான்மை கொண்டே தாயுமான சுவாமிகள் இச்சமயத்தை ராஜாங்கத்திலமர்ந்தது என்றும், அதுவே 'சமயம்' என்றும் அதில் ஜகத்தவர் அனைவரும் சேரவேண்டும் என்றும் பாடியிருக்கிறார்.

அன்பு சமயம் என்றும் கூறலாம். சமரசச் சமயத்தில் அன்பே ஒழுகுதல் வேண்டும். இதைத்தான் திருமூலர்,

அன்பும் சிவமும் இரண்டென்பர் அறிவிலார்
அன்பே சிவமாவதாருமறிகிலார்
அன்பே சிவமாவதாருமறிந்தபின்
அன்பே சிவமாயமர்ந்திருப்பாரே

என்று குறிப்பிட்டுள்ளார். எல்லா உயிர்களிடத்திலும் அன்பு செலுத்துவோரே சைவர் எனப்படுவர். உயிர்களை வழிபடும் காலத்தில் சாதி பேதம் முதலியன பாராட்டலாகாது என்று சைவ சமயம் கூறுகிறது,

ஜீவாத்மா, பரமாத்மாவுடன் கலந்து அனுபவிக்கும் சுத்த ஆனந்தத்தையும் மங்களத்தையும் அருளும் சிவத்தையடைய சைவம், எனும் வழிபாட்டு முறை ஆதிசங்கரர் நமக்கருளிய வரப் பிரசாதமாகும்.

## சைவத்தில் பல பிரிவுகள்

மகாபாரதத்திலும் மற்ற ஆகம நூல்களிலும் சிவபெருமானையே பரம்பொருளாகக் கொண்டு விளங்கும் சைவ மதம் நானகு பிரிவுகளாகக் காணப்படுகிறது.

அவை பாசுபதம், காலாமுகம், காபாலிகம், சைவம். இவற்றுக்கு ஆதாரமான நூல்கள் சைவ ஆகமங்கள். இவை இருநூற்றுக்கும் மேற்பட்டவை.

வீர சைவம் என்ற பிரிவு 12-ம் நூற்றாண்டில் தீவிரமாக தலைதூக்கியிருந்தது. பாலும் நெய்யும் கூட தள்ளுபடி செய்யும் ஆகார நியமங்களைக் கொண்டவர்கள் வீர சைவர்கள்.

கி.பி. முதல் நூற்றுண்டில் பாரத நாட்டில் ''லகுலீச பாசுபதம் என்ற ஒருவகைச் சைவம் ஓங்கியிருந்தது. லகுலீசர் என்பவர் சிவபெருமானின் அவதாரம் என்றே கருதப்பட்டார். இவருக்கு குசிகர், கார்க்கர், மித்திரர், கௌருஷர் என்ற சீடர்கள் இருந்தார்கள். வாயு, கூர்ம, சிவபுராணங்களில் இந்த வழிபாடு பற்றிய விவரங்களைக் காணலாம்.

லகுலீசருடைய உபதேசங்களை 'பாசுபத ஸூத்ரம்' 'பஞ்சார்த்த பாஷா' 'சர்வதர்சன ஸங்க்ரஹம்' என்ற நூல்களில் காணலாம்.

காபாலிகம், காலாமுகம், கௌலம், வாமாசாரம் இவை போன்ற ஒரு பிரிவே லகுலீசம். உத்கலம் கலிங்கம் பகுதிகளில் லகுலீச பாசுபதம் என்ற பெயரில் கி.பி. 7-ம் நூற்றுண்டில் பிரபலமாக இருந்தது.

லகுலீசம் (பாசுபதம்) காலாமுகம் சிவபெருமானின் ருத்திர அம்சத்தை வழிபடுபவை. இவைகளின் நெறி முறைகள் கடுமை யானவை, பயங்கரமானவை. இவைகளின் ஆதிக்கத்தைக் குலைக்க ஆதிசங்கரர் சைவமதத்தை சாத்வீக வழிபாடுகளுடன் பரப்பினுர். கி.பி 11-ம் நூற்றுண்டில் இந்த அத்வைத மதத்திற்கு எதிராக லிங்காயதம் அல்லது வீர சைவம் என்கிற சைவ மதப் பிரிவைக் கர்நாடகத்தில் பஸவேசர் நிறுவினுர். இதற்கு சித்தாந்தப் பெயர் சக்தி விசிஷ்டாத்வைதம்.

பின்காலத்தில் சைவத்தின் எல்லாப் பிரிவுகளுமே பிரபல மடைந்து வந்தன. சைவ சித்தாந்தம் தமிழ் நாட்டில் தழைத்தது. பாசுபதம் ராஜஸ்தானிலும், குஜராத்திலும் பிரபலமடைந்தது.

பாசுபதத்திற்கு மூல நூல் பாசுபத ஸூத்திரம். காச்மீர சைவத்திற்கு சிவ ஸூத்திரம், சிவ திருஷ்டி முதலிய கிரந்தங்கள் ஆதார நூல்கள். வீர சைவத்திற்கு ஆகம நூல்கள், ஸ்ரீகர பாஷ்யம், சித்தாந்த சிகாமணி முதலியவை.

## வீர சைவம்

இம்மதம் பலன்தர பெருமுயற்சிகள் செய்தவர் பஸவேசுவரர் (பஸவண்ணு). இம் மதத்தத்துவங்களையும் சித்தாந்தத்தையும் பரப்பி மக்களுக்கு ஒருபுதிய வழியைக் காட்டி அருள் பெற்றவர்கள் பலர், இவர்களை சிவசரணர் என்றும். 'பவி'கள் என்றும் குறிப்பது வழக்கம்.

இவர்களில் ஒரு பகுதியினர் லிங்கத்தை கயிற்றில், கட்டி கழுத்தில் அணிவது வழக்கம். இவர்களை லிங்காயத்துக்கள் என்றழைப்பர்.

வீர சைவத்தின் தருமசாரம் :—''இறைவன் ஒருவன், பெயர்கள் பல. 'ஐயனே' என்றால் சுவர்க்கம் 'அடே' என்றால் நரகம் 'திருடாதே, கொல்லாதே, பொய் சொல்லாதே, சினங் கொள்ளாதே, மற்றவரை வெறுக்காதே. தன்னையே புகழாதே, அந்நியரை இகழாதே—இதுவே அகத்தூய்மை. இதுவே புறத்தூய்மை.

கொன்றாலும் உன் அருளை விடமாட்டேன். சிவனின் பொருளை சிவனுக்கே கொடுத்துவிடு.''

## சைவ சித்தாந்தம்

வேதத்தின் ஞான காண்டப் பகுதியை மெய்கண்ட தேவர் 'சிவஞான போத'த்தில் விளக்கியிருக்கிறார். இதுவும் மற்ற சந்தானக் குரவர்கள் அருளிய நூல்களும் 'சைவ சித்தாந்த சாஸ்திரங்கள்' எனப்படும். சைவ சித்தாந்தம் உபநிஷதங்களைப் பிழிந்து கொடுக்கப்பட்டுள்ளது என்கிறார் உமாபதி சிவம்.

சைவ சித்தாந்தம் நான்கு வேதங்களுடன் 28 சிவாகமங் களையும் பிரமாணமாகக் கொள்கிறது.

சைவ சித்தாந்தம் பதி, பசு, பாசம் என்னும் முப்பொருள்களை ஆராய்கின்றது.

பலகலை ஆகம வேதம் யாவையினும்
கருத்தும் பதி பசு பாசம் தெரித்தல்

(சிவப்பிரகாசம் 13)

(பதி—இறைவன். பசு—ஆன்மா, உயிர்; பாசம்—ஆணவம் கன்மம் மாயை ஆகிய மும்மலங்கள்)

## சைவமும் அத்வைதமும்

இன்றெனக்கருளி இருள் கடிந்துள்ளத்து
எழுகின்ற ஞாயிறே போன்று நின்ற நின்றன்மை
நினைப்பற நினைந்தேன் நீயலால் பிறிது மற்றின்மை
சென்று சென்றணுவாய்த் தேய்ந்து தேய்ந்தொன்றாந்
திருப் பெருந்துறை யுறை சிவனேஒன்றுநீயல்லை
யன்றி யொன்றில்லை யாருனை யறியகிற்பாரே

—மாணிக்கவாசகர்

''நீயாலாற் பிறிது மற்றின்மை ஒன்று நீயல்லை யன்றி யொன்றில்லை'' என்பன சிறந்த அத்வைதக்கொள்கைகளை விளக்கு கின்றன.

உமாபதி சிவம் தன் சங்கற்ப நிராகரணத்தில் மேற்கண்ட திருவாசகத்தைக் கூறி மாணிக்கவாசகர் அத்வைதி என்று குறிப்பிடுகிறார்.

''ஏகம் ஏவா அத்வித்யம் ப்ரம்மம்'' என்பது வேத வாக்கு. இதன் பொருள் ஒன்றேதான், இரண்டாவது இல்லை. இதைக் கொண்டு ஆதிசங்கரர் பிரும்மம் தவிர வேறு ஒன்றில்லை என்றார்.

ந—த்வைதம் என்ற சொற்கள் சேர்ந்து அத்வைதமாயிற்று.

''ந'' என்ற சொல்லுக்கு அன்மை, இன்மை, மறுதலை என்று சப்த கல்ப தருமம் பொருள் கூறுகிறது.

இன்மை என்ற பொருளில் இரண்டல்ல எனக்கொண்டு ஒன்றே தான் என்றார் சங்கரர்.

மறுதலைப் பொருளிலே அநீதி அதர்மம் எனக்கொண்டு இரு பொருள்கள் (துவைதம்) என்றார் மத்வர்.

இறைவன் உலகம் ஒன்றி நிற்பதால் ஒன்றாகியும், பொருள் தன்மையால் வேறாகியும் உலகத்துக்கு உதவும் பொருட்டு உடனாகியும் நிற்கிறான்.

உடலும் உயிரும் போல் ஒன்றாகியும்
கண்ணொளியும் கதிரொளியும் போல வேறாகியும்
கண்ணொளியும் உயிரறிவும் போல உடனாகியும்
ஒன்று பட்டு அருள்புரிவன்.

இதை மெய்கண்டார்

''அவையே யாய், தானேயாய் அவையே தானேயாய்''
நின்று அருள் புரிகிறான்'' என்றார்.

ஈறாய் முதல் ஒன்றாய் இருபெண் ஆண், குணம் மூன்றாய்
மாறா மறை நான்காய், வருபூதம் அவை ஐந்தாய்
ஆறார் சுவை, ஏழோசையோடு எட்டுதிசை தானாய்
வேறாய் உடன் ஆனான் இடம் வீழிமிழலையே

என்று ஞானசம்பந்தர் இறைவனை விளக்குகிறார்.

சைவ சாஸ்திரத்திற்கு முதல் நூலான சிவஞான போதமே அத்வைதத்தைக் கூறுகிற நூல்தான். இதன் ஆசிரியரான மெய்கண்டாரை, தாயுமானவர்.

''பொய் கண்டார் காணாப் புனிதமெனும் அத்துவித
மெய்கண்ட நாதனருள் மேவுநாள் எந்நாளோ

என்கிறார்.

மெய்க்கண்டார் தன் சிவஞான போதத்தில், 8-ம் ஸூத்திரத்தில்,

ஐம்புல வேடரினயர்ந்தனை வளர்ந்தெனத்
தம்முதல் குருவுமாய்த் தவத்தினி லுணர்த்த
விட்டன்னிட மின்மையின் அரன்கழல் செலுமே

என்று இன்மைப் பொருளையே கொண்டிருக்கிறார்.

# வேதங்களில் குறிப்பிடப்படும் சிவபெருமான் 4

*ஶிவே ஶாநதத் பூருஷா கோர வாமாதிபிர்*
*பிரும்மபிர் ஹ்ருந்முகை ஃ ஷட் பிரங்கை ஃ |*
*அநௌபம் யஷட்திரிம்ஶதம் தத்துவ வித்யாம்*
*அதீதம் பரம் தவாம் கதம் வேத்தி கோவா ‖*

—ஸ்ரீ சிவபுஜங்க ஸ்தோத்திரம், ஆதிசங்கரர்.

*சிவம்—ஈசானம், தத்புருஷம், அகோரம், வாமதேவம், சத்யோஜாதம் என்ற ஐந்து முகங்களுடன் ஹ்ருல்லேகா முதலிய ஆறு அங்கங்களுடன் கூடியவரும் 36 தத்துவ ரூபமான தத்துவ வித்யாதீதமானவருமான உம்மை எப்படி யார் அறிவார்?*

ஃ ஃ ஃ

எல்லா உலகங்களுக்கும் தானே தலைவனாகி முத்தொழில்களையும் நடத்துபவன் எவனோ அவனே சிவபெருமான். நீங்கள் விரும்பும் தத்துவப் பொருளும் அவனே.

—ருக் வேதம்.

பாசுரங்களாலும், யோக உலகத்தில் உள்ளோரால் துதிக்கப்படும் பொருளாயுள்ளவன் எவனோ அவனே சிவபெருமான். நீங்கள் விரும்பும் தத்துவப் பொருளும் அவனே.

—யஜுர் வேதம்.

எவன் மூன்று உலகங்களையும் இயக்குகின்றவனோ, எவன் யோக நிஷ்டையில் இருக்கும் முனிவர்களால் துதிக்கப்படுகின்றானோ, எவன் தன் ஒளிப்பிழம்பால் எல்லாப் பொருள்களையும் விளக்குகின்றவனோ அவனே சிவபெருமான். நீங்கள் விரும்பும் தத்துவப் பொருளும் அவனே.

—சாம வேதம்.

ஆனந்த பாஷ்பம் சிந்தவும், உரோமம் சிலிர்க்கவும், மனம் நெக்குவிட்டுருகி அன்பினால் எக்காலத்திலும் தன்னை உணரும் உணர்வுடையவர்கள் தியானித்து துதிக்க தனது திருவருளால் தன்னையறியச் செய்பவன் எவனோ அவனே சிவபெருமான். நீங்கள் வினவும் தத்துவப் பொருளும் அவனே.

—அதர்வண வேதம்.

ருக் வேதத்தில் ருத்திரன் என்று குறிப்பிடப்படுகிறார். அழச்செய்பவன் என்பது ருத்திரன் என்ற சொல்லின் அர்த்தம்.

அழுகையின் மூலம் ருத்திரன் உயிர்களைப் பண்படுத்துகிறான். அத்யாத்மிக அமைப்பில் மனிதனுடைய அந்தராத்மா ருத்ர சொரூபமாக இருக்கிறது. சில சூழ்நிலைகளை உண்டு பண்ணி அந்தராத்மா மனிதனை கதறிப்பதறி அழச்செய்கிறது. அத்தகைய அழுகையின் மூலம் மனிதன் ஆத்ம பரிபாகம் அடைகிறான்.

''அக்னி சயனம்'' என்ற சடங்கில் ருத்ரனுக்குத் தான் முக்கியத்துவம். வேதங்களில் ருத்ரன் என்ற வார்த்தை சிவபெருமானையே குறிக்கும். ரிக் வேதத்திலுள்ள 1028 ஸூக்தங்களில் ருத்ரனை குறிப்பது மூன்றுதான். ஆனால் யஜுர் வேதத்தில் ஸ்ரீ ருத்ரமே அடங்கியுள்ளது.

ச்வேதாஸ்வர உபநிஷத் சிவனின் மகிமையைப் பற்றியே கூறுகிறது. ருத்ரன் என்பது பரமசிவனே என்கிறது இது. பிறப்பு; மோக்ஷம் என்ற இரண்டையும் ஒன்றன்பின் ஒன்றாக உயிர்களுக்கு வழங்கி அவற்றை துன்பத்தினின்றும் கடத்துவதால் வந்த காரணப் பெயர் ருத்ரன். ருதம் த்ராவயதி—துன்பத்திலிருந்து கடப்பிக்கிறவன்.

''சத் எனப்படும் ருத்திரனே உனக்கு வணக்கம்'' என்று யஜுர் வேதத்திலும் தைத்ரீய ஆரண்யஹத்திலும் வருகிறது.

சத் என்றால் சக்தியோடு இயைந்த சிவன் என்று நீலகண்ட சிவாசாரியார் பொருள் கொள்கிறார்.

யஜுர் வேதத்தின் சதருத்ர அத்யாயம், தைத்திரீய ஆரண்யகம், அதர்வசிரஸ் உபநிஷதம் இவை எல்லாம் சிவபெருமானே, எல்லாக் கடவுளுக்கும் முதல்வர் 'பரமேஸ்வரன்' என்று போற்றியுள்ளன.

சைவ புராணங்களும், சைவாகம நூல்களும் சிவநேசச் செல்வர்களான நாயன்மார்கள் பாடிய தேவார திருமுறைகளும் சிவபிரானைப் பாடுகின்றன.

வேதங்களில் முக்கியமாகப் போற்றப்படும் தேவதை அக்னி, எல்லா உயிர்களுக்கும் முன்னால் தோன்றியவன். வேள்வியில் முன் நின்று நலமளிப்பவன். இந்த அக்னிக்கும் ருத்ரனுக்கும் நெருங்கியத் தொடர்புண்டு.

தெய்வம் என்பது நல்லதிற்கே உதவும். தீயதற்கு உதவாது. எனவே தெய்வத்தை ''ஸு இஷ்டக்ருத்'' என்றனர். அக்னிக்கு ஹவிஸ் அளிக்கும்போது ''அக்னயே ஸ்விஷ்டக்ருதயே ஸ்வாஹா'' என்று சொல்லப்படுகிறது.

இந்த ஸ்விஷ்டகிருத் அக்னி யார்? ருத்ரன் என்றே வேதம் பதிலளிக்கிறது. எனவே அக்னியில் அர்ப்பணிக்கும் ஆஹுதி ருத்ரனையே சேரும்.

சைவ சித்தாந்தம், ''சிவபெருமான் ஒருவனே பதி என்கிறது. உயிர்கள் அனைத்தும் பசுக்கள். அவன் ஒருவனே தலைவன்; மற்ற, அனைவரும் அவனுக்குக் கீழ்ப்பட்டவர்கள்'' என்கிறது. சித்துப் பொருளாகிய உயிர்களை எல்லாம் தன் அடிமைகளாகவும், ஜடப் பொருள்களை எல்லாம் தன் உடைமையாகவும் கொண்டு சிவபெருமான் விளங்குகிறார் என்கிறது.

சிவநெறியில் முதற் கடவுளுக்கு பிறப்பு அல்லது அவதாரம் கூறப்படுவது இல்லை. கடவுளுக்கு உபசாரமாகக்கூட 'பிறப்பு உண்டு என்று கூறுவது சைவ மரபு அன்று. ஆனால் ஆழ்வார்கள் கடவுளுக்கு பத்து அவதாரங்கள் உண்டு என்பதற்கு உடன் பட்டவர்கள்.

## நவ வ்யூஹ ஸ்வரூபி

பரமேஸ்வரனுக்கு நவவ்யூஹ ஸ்வரூபி என்று ஒரு பெயர். இதனால் அவருக்கு நவாத்மா என்ற பெயரும் உண்டு.

*கால வ்யூஹோ குலவ் வ்யூஹோ நாம வ்யூஹஸ்ததைவச*
*ஞானவ்யூஹோஸத்தா சிததவ்வ்யூஹ*
*ஸ்யாத்த தநம்தரம |*
*நாதவ்யூஹஸததா பிந்து வ்யூஹஸ்யாத்த தநம் தரம்*
*காளவ் வியூஹ ஸத்தா ஜீவ வயூஹாஸ்யாதி திதேநவ ||*

*காலவ்யூஹம் குலவ்யூஹம் நாமவ்யூஹம்*
*ஞானவ்யூஹம் சித்தவ்யூஹம் நாதவயூஹம்*
*பிந்துவ்யூஹம் கலாவ்யூஹம் ஜீவவ்யூஹம் என ஒன்பது.*

1. நிமிஷம் முதல் ப்ரார்த்தம் முடிய சொல்லப்படும் காலம் சிவனின் உருவம். எனவே காலம் பரமசிவனின் சரீரமாகிறது. ஆகவே கால வ்யூஹம்.

2. குலம் என்றால் ஸ்ரீவித்யா சந்திரகலா ஸித்தாந்தப் பிரகாரம் பராம்பிகையினுடைய க்ரஹ கோணங்களாக சொல் லப்படும். இந்த க்ரஹ கோணங்களில் பரமசிவனின் கோணங்கள் அடக்கம். ஆகவே குல வ்யூஹம்.

3. நாமா முதல் பூமா வரை பூமவித்யா பிரகரணத்தில் சொல்லப்பட்ட தத்வங்கள் சிவனது ஸ்வரூபம். ஆகவே நாம வ்யூஹம்.

4. ஞானத்திற்கு பரமசிவன் அதிதேவதை. பதார்த்த ஞானமோ, வைதீ ஞானமோ, லௌகீக ஞானமோ வாக்யார்த்த ஞானமோ சகலவிதமான ஞானங்களும் சிவனுக்கு சரீரம். ஆகவே ஞான வ்யூஹம்.

5, அஹம்காரம் என்று சொல்லப்படும் சித்தங்களுக்கு காமேஸ்வரன் அபிமான தேவதையானதினால் சித்த வ்யூஹமும் பரமேஸ்வரன் ஸ்வரூபமே.

6. பிராணாயாமத்தின் போது சரீரத்தினுள் ஏற்படும் விசேஷ நாதங்கள் ஈஸ்வர ஸ்வரூபமே. ஆகவே நாத வ்யூஹம்.

7. பாதி சந்திரகலை ரூபமான இரண்டு ரேகைகளை சேர்ப்பதே பிந்து. அந்த பிந்துவில் ஒரு பாதி ரேகை சதாசிவ தத்வமானதினால் பிந்து வ்யூஹமும் சிவனின் சரீரமே.

8. ஷோடச கலைகளும்—பிராணன் சிரத்தை பிருத்வி அப்பு தேயு வாயு ஆகாசம் இந்திரியம் மனஸ் அன்னம் வீர்யம் மந்திரம் கர்ம, தபஸ் லோகம் நாம என்று பிரச்ன உபநிஷத்தில் கூறப்பட்டிருப்பது ஈஸ்வர ஸ்வரூபமாகும். அந்த உபநிஷத்தில் பரமேஸ்வரனுக்கு ஷோடச கலா புருஷன் என்று பெயர் தரப்பட்டுள்ளது. ஆகவே கலா வ்யூஹம்.

9. ஜீவன்கள் எல்லாமே ஈஸ்வரன் ஸ்வரூபமாகும். ஆகவே ஜீவ வ்யூஹம்.

## தென்னாடுடைய சிவன்

'தென்னாடுடைய சிவனே போற்றி' என்பதிலிருந்து தென்னாட்டுக்கு உரிய கடவுள் இவர் என்பதை தமிழ் மறைகள் குறிப்பிட்டுள்ளன.

சிவ பூஜையை பாரதமெங்கும் பிரபலப்படுத்திய பெருமை நாக வம்சத்து மன்னர்களான பாராசிவர், கூட்டு நாகர், மகா நாகர் முதலியவர்களையே சாரும். ஆர்யாவர்த்தத்திற்கு தெற்கே வாழ்ந்த இந்த நாக வம்சத்தார்களின் அபிமானதேவதை சிவன். ஆகவே அவருக்கு தக்ஷிணாபதி என்ற பெயர் ஏற்பட்டது. தென்புலத்தை "தக்ஷிணாபதம்" என்று ரிக்வேதம் குறிப்பிடுகிறது.

பாரசிவர்களுக்குப்பின் வந்த வாகாடர்கள் பரம சைவர்கள். இவர்கள் தென்னிந்தியாவில் சைவம் தழைக்க வழி செய்தார்கள். தேவாலயங்களை நிர்மாணித்தார்கள்.

பாரதத்தில் முதன் முதலில் சிவாலயத்தைக் கட்டி சிவலிங்க மூர்த்தத்தை பிரதிஷ்டை செய்தவர்கள் பாரசிவர்கள் தான் என்று குறிப்பிடப்படுகிறது.

சிவன் என்னும் நாமம் தனக்கேயுரிய செம்மேனியம்மான் என்று திருநாவுக்கரசர் கூறுகிறார். இப்பெயரும் காரணப்பெயரே என்பது இந்த அத்யாயத்தின் ஆரம்பத்திலுள்ள காஞ்சிப் புராணச் செய்யுளால் அறியலாம்.

இதனால் மங்கள குணங்களையுடையவர், உயிர்களை அனாதியே பிணித்திருக்கும் 'மலம்' நீங்கி நிற்பவர் என்பது சிவன் என்ற பொருள்.

# அஷ்டமூர்த்தி தத்துவம்

''அஷ்டமூர்த்தி அநேகாத்மா'' என்று சிவநாம அஷ்டோத்திரத்தில் ஒரு நாமா. இந்த நாமாவின் அர்த்தம் சிவபெருமான் எட்டு மூர்த்தமாகவும அநேக உருவத்துடனும் இருக்கிறார் என்று அர்த்தம். அஷ்ட வீரட்ட ஸ்தலங்கள் சிவபெருமானின் வீரத்தை விளக்குவன.

ஜடமான பஞ்ச பூதங்களைக் கொண்டு ஸ்தூல தேகமும், சைதன்யமான புருஷ சக்தியைக் கொண்டு ஸூக்ஷ்ம தேகமும் அமைக்கப்பட்டிருக்கிறது.

இதை விளக்கும் தக்ஷிணாமூர்த்தி அஷ்டக சுலோகம்:
பூரம்பாம்ஸி அநலோ அநிலோம்பரக்
அஹர்நாதோ ஹிமாம்ஸு: புமான்
இத்யாபாதி சராசராத்மக மிதம்
யஸ்யைவ மூர்த்யஷ்டகம் |
நான்யத் கிஞ்சன வித்யதே விம்ரு ஸதாம்
யஸ்மாத் பரஸ்மாத் விபோ:
தஸ்மை ஸ்ரீ குருமூர்த்தயே நம
இதம் ஸ்ரீ தக்ஷிணாமூர்த்தயே ||

இந்த மகேஸ்வரனுக்கு, பூமி, ஜலம், நெருப்பு, காற்று, ஆகாசம், சூர்யன், சந்திரன், யாகம் செய்த புருஷன் என்று அசையும் பொருள் அசையாப் பொருளுமான எட்டு சரீரம் பிரகாசிக்கிறதோ அந்த குரு வடிவான தக்ஷிணாமூர்த்திக்கு நமஸ்காரம்.

பரமசிவன் 36 தத்துவங்களுக்கு அப்பாற்பட்டவர். அவரைப் பூஜிக்கும்போது 36 தத்துவ அதிபர்களையும், அஷ்டமூர்த்த அதிபர்களையும் முதலில் பூஜிக்கப்படுகிறது. இதற்கு தத்துவார்ச்சனை என்று பெயர்.

இறைவன் இவ்வாறே உள்ளான் என்பதை திருநாவுக்கரசர்,

இரு நிலனாய்த் தீயாகி நீருமாகி
இயமானனாய் எரியும் காற்றுமாகி
அருநிலைய திங்களாய் ஞாயிறாகி
ஆகாசமாய் அஷ்டமூர்த்தியாகிப்
பெரு நலமும் சுற்றமும் பெண்ணும் ஆணும்
பிறருருவும் தம் முருவும் தாமேயாகி
நெரு நிலையாய் இன்றாகி நாளையாகி
நிமிர்ப்புன் சடை அடிகள் நின்றவாறே

ஈஸ்வரன் எங்கும் எல்லா ரூபமாக இருந்தாலும் இந்த எட்டு மூர்த்திகளில் ஈஸ்வர சான்னித்யம் மிக அதிகமாகும். வித்யுத் சக்தி (மின்சக்தி) உலகமெலாம் பரவியிருக்கிறது. ஆனால் மேலே இருந்து கீழே விழும் நீர் வீழ்ச்சியிலிருந்து அதிகமாக மின் சக்தியை

உண்டு பண்ணுவது சுலபம். அதேபோல இந்த எட்டிலும் சிவசாந்நித்யம விசேஷமானது.

## எட்டின் முக்கியத்துவம்

பூமி, ஜலம், வாயு, அக்னி ஆகாசம், சந்திரர், சூரியர், யாகம் செய்த புருஷர் இவ்வெட்டும் லோகோபகாரத்திற்காகவே இருக்கின்றன. உலகில் உண்மையை விசாரித்தால் இந்த எட்டைத் தவிரவேறு எதுவுமில்லை

நம் வாழ்க்கையுடன் எட்டு ஒன்றியுள்ளது.

| | |
|---|---|
| ஓர் எட்டில் ஆடாத ஆட்டமும் | — 8 வயதிற்குள் |
| ஈரெட்டில் கலலாத கல்வியும் | — 16 வயதிற்குள் |
| மூவெட்டில் ஆகாத திருமணமும் | — 24 வயதிற்குள் |
| நான்கெட்டில் பிறக்காத பிள்ளையும் | — 32 வயதிற்குள் |
| ஐயெட்டில் சேர்க்காத செல்வமும் | — 40 வயதிற்குள் |
| ஆரெட்டில் சுற்றாத ஊரும் | — 48 வயதிற்குள் |
| ஏழெட்டில் எடுக்காத ஓய்வும் | — 56 வயதுக்குமேல் |
| எட்டெட்டில் ஏற்படாத மரணமும் | — 64 வயதுக்குமேல் பயனில்லை. |

ஸ்ரீ அப்பைய தீக்ஷிதர் என்ற மகான் செய்தது எட்டு வேள்விகள். கட்டியவை எட்டு சிவன் கோவில்கள். தானம் கொடுத்தவை எட்டு கிராமங்கள். வெட்டியவை எட்டு குளங்கள். அவருககு எட்டு பிள்ளைகள். எல்லோருமே சர்வ சாஸ்தி-பராங்கதர்கள்.

## மூன்று தத்துவங்கள்

சிவபெருமான் ஆன்மாக்களுக்கு அருள் செய்ய மேற்கொண்ட தத்துவங்கள் மூன்று. அவை சிவ தத்துவம், சாதாக்கிய தத்துவம் மகேசுவரத் தத்துவம்.

இம் மூன்றில் அருவத் திருமேனியுடை சிவம் ஒன்று

அருவுருவத் திருமேனியுடைய சாதாக்யமானது, சிவ சாதாக்கியம், மூர்த்தி சாதாக்கியம், அமூர்த்தி சாதாக்கியம், கர்த்திரு சாதாககியம், கர்ம சாதாக்கியம் என்ற ஐந்து பேதங் களைக் கொண்டது.

உருவத் திருமேனி:—சந்திரசேகரர், உமா மகேஸ்வரர், ரிஷபாரூடர், நடராஜர், தக்ஷிணாமூர்த்தி, கல்யாணசுந்தரர், பிக்ஷாடனர் முதலியவர்கள். ஆக 25 மூர்த்தங்கள் மொத்தம் 31.

## நிஷ்கள சிவம (அருவம்)

சர்வ வியாபியாய் பராசக்திக்கு காரணமாயிருக்கும் உண்மைப் பொருள். இதிலிருந்து தோன்றியது நிஷ்கள சக்தி. இது திரோதான சக்தியாக நின்று இச்சா சக்தி, கிரியா சக்தி, ஞான சகதியாக செயல்படும்.

சாதாக்கியம் என்பது எப்போதும் புகழப்படுவது.

பராசக்தியிடம் சிவ சாதாக்கியம் தோன்றியது (சதாசிவன்)

ஆதி சக்தியின் அம்சமாய் அமூர்த்தி சாதாக்கியம்
(லிங்க வடிவம்) (ஈசன்)

இச்சா சக்தியின் அம்சமாய் மூர்த்தி சாதாக்கியம் (பிரமீசர்)

ஞான சக்தியின் அம்சமாய் கர்த்திரு சாதாக்கியம்
(ஞானலிங்கம்) (ஈஸ்வரன்)

கிரியா சக்தியின் அம்சமாய் கன்ம சாதாக்கியம் (ஈசானன்)

ஐந்தியற் சக்திகளாயினோர் தமைத்தந்தது
மருவுருத் தாங்கி யவ்வழிச்
சிந்தனை அருச்சினை செய்து யாவருமுயர்ந்திட
சதாசிவ உருவைந் துள்ளதுமே

| | | | | |
|---|---|---|---|---|
| சிவ சாதாக்கியம் | + | சதாசிவன் | = | ஈசானம் |
| அமூர்த்தி சாதாக்கியம் | + | ஈசன் | = | சத்யோஜாதம் |
| மூர்த்தி சாதாக்கியம் | + | பிரமீசன் | = | வாமதேவம் |
| கர்த்திரு சாதாக்கியம் | + | ஈசுவரன் | = | அகோரம் |
| கர்ம சாதாக்கியம் | + | ஈசானன் | = | தத்புருஷம் |

இந்த ஐந்தும் சிவபெருமானின் ஐந்து முகங்கள்.

## சிவம், சாந்தம், சுந்தரம்

வாழ்க்கையில் சிவம் (மங்களம்), சாந்தம் (அமைதி), சுந்தரம் (அழகு) மிக அத்யாவசியம். வாழ்வு என்பது,

ைசந்தது இன்பம்
ரபத்தோடு ைசந்தது வாழ்வு

என்று விளக்குகிறார் சுந்தரமூர்த்தி சுவாமிகள்.

தன்னடக்கமற்ற வாழ்க்கையில் உ
ஏற்படுவதில்லை. உள்ளத் தெளிவு ஏற்படும்போது துன்பங்களும்

"சிந்தையுந் தெளிவுமாகி தெளிவினுட் சிவமாகி"

என்று இதைக் குறிப்பிடுகிறார்கள்.

சமய பேதங்கள் பசு போன்றவை. (பசு பல நிறமுள்ள பல இருப்பதுபோல) அவற்றின் பாலாக இருப்பது சிவம். அப்பாலைப் பருகினால் சாந்தம் பிறக்கும்.

## பரமசிவன் சுடுகாட்டில் ஆடுகிறான், ஏன்?

எப்போதும் ஒரே மாதிரியான சூட்டுடன் இருப்பது சுடுகாடு. அதுதான் நமது உடல். உயிரற்ற உடலைச் சுடும் இடமே சுடுகாடு

எல்பர். ஆனால் இந்த சுடுகாட்டிற்கு இடையாது. நம் உடலில் எப்போதும் இயற்கையாக 98'4 டிகிரி உஷ்ணம் இருந்துக்கொண்டே யிருக்கிறது (தெர்மா மீட்டர் வைத்துப் பார்த்தால் தெரியும்.) அதனால்தான் இந்த உடல் சுடுகாடு. இதில்தான் சிவபெருமான் நடனமாடுகிறான்.

''கோயில் சுடுகாடு கொல்புலித்தோல் நல்லாடை
தாயுமிலி தந்தையுமிலி தான் தனியன் என்னே''

என்கிறார் மாணிக்கவாசகர்.

ஜீவராசிகளின் உடலாகிய சுடுகாட்டைத் தான் ஆடும் அரங்க மாகக் கொண்டார் பரமசிவன்.

றவன் ஆட தேர்ந்தெடுத்த இடம் சுடுகாடு. சுடுகாட்டில் ஏன் ஆட வேண்டும்? அங்கேதான் மக்களுக்கு யாமை புலப்படும். எங்கே அவர்கள் நிலையாமையை உணருகிறார்களோ அந்த இடத்திலே ஆண்டவன் அருள் தோன்றும். அதனால்தான் சுடுகாடு இறைவனுக்கு ஏற்ற இடமாகிறது.

சுடுகாட்டில் இறந்துபோன சுற்றத்தாருடைய சவ அடக்கத் திற்குச் செல்லும்போது தன் கதியும் ஒருநாள் இதுதான் என்று தெரிந்துக்கொள்கிறார்கள். அதுவும் ஒருவித ஞானம் தானே.

சுடுகாட்டில் இந்த உடம்பின் நிலையாமை தோன்றுகிறது. உயிர் போகும் என்பது நிச்சயமாகும்போது ஆண்டவனை நினைக்கத் தோன்றுகிறது. யத்துக்குப்பின் எழும் பக்தி சிறப்பாக நிற்கும். பயபக்தி சுடுகாட்டில் எழுகிறது.

## கொல்புலித் தோல் உடை

புலி இறந்த பிறகு அதன் தோல் நல்ல உடையாக ஆகிவிடு கிறது எம்பெருமானுக்கு. குரோதம் நிறைந்தது புலி. அதன் குரோதம் ஒழிந்ததும் தூய்மையாகி விடுகிறது. பரமசிவனுக்கு அத்தோல் மிகவும் பிரியமாம். புலித்தோல் குரோதமின்மையைக் குறிக்கிறது. காம குரோதங்களை அழித்த மகா யோகிகள் இதன் காரணம் பற்றியே புலித்தோலை ஆசனமாக உபயோகிக்

''நான்'' என்று உறுமும் புலியைக் கொன்றுவிட்டால் உலக மெல்லாம் தான் என்ற உணர்ச்சி பெறலாம். அப்படி உலகமெல் லாம் தான் என்ற உணர்ச்சி பெற்ற ஜீவன் சிவஸ்வரூபமாகி

மாப்பிள்ளையாக ஊர்வலம் வரும் சுந்தரரை ஒரு கிழவர் வழிமறித்து ''நீ என் அடிமை; என் அனுமதியின்றி நீ எப்படி

மணம் செய்துக்கொள்ளலாம்'' என்று கேட்டபோது, ''அந்தணனுக்கு அந்தணன் அடிமையாவதாவது? நீர் என்ன பித்தனு?'' என்று கேட்டார் சுந்தரர்.

பின்னர் வந்தவர் சிவபெருமான் என்று அறிந்தபின் 'உங்களை அறிந்து எப்படி பாடப்போகிறேன்?' என்று சுந்தரர் வருந்த இறைவன், ''என்னை பித்தன் என்றுயே. அதையே வைத்து பாடு'' என்கிறுர்.

''பித்தா பிறைசூடி'' என்ற பதிகத்தை சுந்தரர் பாடினுர்.

பித்தன் என்ன செய்வான்? காலிலே போட்டு மிதித்த பொருளை தலையில் தூக்கி வைத்துக்கொள்வான், தக்ஷ யாகத்தில் கலந்துகொண்ட தேவர்களை எல்லாம் தண்டித்தான் இறைவன். சந்திரனை காலால் தேய்த்தான். பின் அவனையே தன் தலையில் தூக்கி வைத்துக்கொண்டான்.

கருணையாகியப் பித்து பிடித்தவன் இறைவன். தன் காலடியில் வந்து விழுந்தால் அவன் என்ன அபராதம் செய்தவனு யினும் அதை எல்லாம் எண்ணுமல் அவனுக்கு உயர்ந்தப் பதவி கொடுத்துவிடுவான்.

பித்தனுன நிலையிலும் இறைவனுடைய பெருமை விளங்கு

''ஆத்திச் சூடி'' என்று இறைவனுக்கு ஒருபெயர். ஆத்திப் பூ சந்திர கலை போன்றிருக்கும். மற்றொரு மலர் கொன்றைப்பூ. இதற்கு 6 தளங்கள். பஞ்சாக்ஷ மந்திரத்துடன் பிரணவத்தையும் சேர்த்தால் ஆறு அக்ஷரம். கொன்றை மலரின் ஆறு தளங்களுக்கு ஆறு அக்ஷரம் மிகவும் பொருத்தம். ஈஸ்வரனுக்குக் கொன்றை மலர் மிகவும் பிரியமானது.

இந்தக் கொன்றைப்பூ ஒன்றை சிவபெருமானுக்கு சாத்திய வர்கள் சாலோகப் பதவியையும், இரண்டைச் சாத்தினவர்கள். சாமீப பதவியையும் மூன்றை சாத்தியவர்கள் சாரூப பதவி யையும் நான்கை சாத்தியவர்கள் சாயுஜ்ய பதவியையும் அடைவார்கள் என்று புஷ்ப பலன் என்ற நூல் கூறுகிறது.

செழுமலர்க் கொன்றைப் பூவை சிவன் தனக் கேற்றினேர்கள்
அழகமர் உருவராகி அருளொடு பொருளும் ஆர்ந்தே
பழையவல் வினைகள் போக்கிப் பத்திய ராகிப் பண்பார்
விழை சிவலோகத்தின் கண்மேவி முன் முத்தி சேர்வார்.

—புஷ்ப பலன்

# லிங்கத் திருவுருவம்

லிங்கமதாவது யாரும் அறியார்
லிங்கமதாவ தெண்டிசை எல்லாம்
லிங்கமதாவ தெண்ணெண் கலையும்
லிங்கமதாக எடுத்த துலகே

—திருமூலர்

சிவம் என்பது இறைவன். லிங்கம் என்பது அடையாளம். கடவுளைக் காட்டும் ஒரு குறி. லி-லயம்; கம்-தோன்றுதல். ஆன்மாக்களும் உலகெங்கிலும் ஒடுங்குவதற்கும் தோன்றுவதற்கு மான இடம் லிங்கம்.

சிவாகமத்தில் பீடம் சக்தி. லிங்கம் சிவம். இவை முறையே பிந்து நாதம் எனப்படும்.

சிவலிங்கத்தின் கீழ் பீடம் 'ந'
,, நடுப் பாகம் 'ம'
,, மேற் பீடம் 'சி'
,, நாதக் குழி 'வ'
,, லிங்கம் 'ய'

லிங்கத்தின் பாகங்களை நிவர்த்திக் கலை, பிரதிஷ்டைக் கலை, வித்தியாக் கலை, சாந்திக் கலை, சாந்தியாதீதக் கலை என்ற பஞ்சகலா சக்தி ரூபம் என்பர்.

பிரமன், திருமால், ருத்ரன் மகேஸ்வரன்—உருவத் திருமேனி கள் சிவம், சக்தி, நாதம், விந்து—அருவத் திருமேனிகள். சதாசிவம் உருவ அருவத் திருமேனி. இந்த ஒன்பதையும்,

''நவந்தரு பேதங் கொண்டு
நடிப்பவன் நாதன் தானே''

என்கிறது சிவஞான சித்தியார்.

சிவம் பேரொளி பிழம்பாகத் திகழ்கிறது. ஒளியின் தன்மை மேல் நோக்குவது. சிவ ஜோதியும், மேல் நோக்கித் திகழ்வதைக் குறிப்பிடுவதே பாணம்.

சிவ வழிபாட்டில் லிங்கம்தான் முக்கிய இடம் பெறுகிறது. காஷ்மீரம் முதல் கன்னியாகுமரி வரை நாடெங்கும் லிங்க வழிபாடு பரவியுள்ளது. லிங்கம் இல்லாமல் மூர்த்தி பேதம் உள்ள சிவன் கோவில்கள் கிடையாது.

சிவனின் அஷ்ட மூர்த்தங்களான பஞ்ச பூதங்கள், சூரியன், சந்திரன், ஜீவாத்மா; இவைகளில் முதல் ஏழும் ஜடப் பொருள்கள். ஜீவாத்மா ஒன்றே சித்துப் பொருள். சித்துப் பொருளான ஜீவனில்

சிவனே வணங்குவதே முக்கிய வழிபாடு. அதைக் காட்டவே சிவாலயங்களில் சிவலிங்கமாக இறைவன் இருக்கிறுர்.

சிவலிங்கம் ஜீவனைக் குறிக்கும். ஆவுடையார் இதய கமலத்தைக் குறிக்கும். இதைத்தான் திருமூலர் ''தெள்ளத் தெளிந்தார்க்கு சீவன் சிவலிங்கம்'' என்று குறிப்பிடுகிறுர்.

லிங்கம் பதியினைக் குறிக்கும். எதிரிலுள்ள நந்தி பசுவைக் குறிக்கும். பலிபீடம் பாசத்தைக் குறிக்கும்.

பலிபீடமான பாசத்தைப் பின்னே தள்ளி பதியாகிய இறைவன் முன் பசு (நந்தி) ஒரு முருமுகமாகக் கிடப்பது, மக்கள் ஆசாபாசங்களை விடுத்து ஒரு முகமாக இறைவனை வழிபட்டு அவன் பேரருளுக்குப் பாத்திரமாக வேண்டும் என்பதை உணர்த்தவே.

தியானத்திற்கு முதலில் ஈஸ்வரனின் உருவம் (நம்மை போன்றது) அவசியம். இதில் பக்குவப்பட்டுவிட்டால் அருவுருவம் அதாவது ஒரு சின்னத்தை இறைவனுக வழிபடுவது. அடுத்தபடி மூன்ருவது நிலை அருவ தியானம். இரண்டாவது நிலை வழிபாடே சிவலிங்க வழிபாடு. சிவபெருமான் எல்லா ஆலயங்களிலுமே லிங்க ரூபமாகவே கர்ப்பக்கிரகத்தில் விளங்குகிறுர்.

புலன்களுக்கு புலப்படாத பரம்பொருளை நாம் பெயர்கள் மூலமாகவும் மூர்த்திகள் மூலமாகவும் மனதில் நிச்சயித்துக் கொண்ட பல வடிவுகள் மூலமாகவும் தியானம் செய்து வழிபடுகிறோம். இவைகளை எல்லாம் நாம் தியானத்திற்கு உதவும்படியான லிங்கங்களாக (சின்னமாக) அமைத்துக்கொண்டு ஆஸ்திக வழியில் வாழ்க்கை நடத்துகிறோம். நம்முடைய ஆலயங்களில் உள்ள மூர்த்திகள் லிங்கங்கள் எல்லாம் நம் பக்தியினுலும், மந்திர சக்தியினுலும் பரம்பொருளின் அவதாரங்களாகின்றன. இவற்றை ஸ்திரமான அர்ச்சாவதாரமாக சொல்வது முறை.

சில லிங்கங்கள் ஸ்வயம்பூ (அதாவது மனிதனுல் ஆக்கப்படாமல்) வாக தோன்றியவை. லிங்கம் என்பது புலனுக்கு எட்டாத பரம்பொருளுக்கு சின்னமாக அமைந்தது. மனதில் தியானத்தின் போது உண்டாகும் வடிவத்திற்குக்கூட லிங்கம் என்ற பெயர் தான் உபநிஷதங்களில் சொல்லப்படுகிறது. லிங்க பூஜை அத்வைத அறிவுக்கு மிக நெருங்கிய சாதனம். அருணகிரியார் கூறியபடி ''அருவாய் உருவாய் குருவாய்'' வந்தது சிவலிங்கம்.

உருவமாகவும், அருவுருவமாகவும், அருவமாகவும் படிப் படியே தியானம் செய்த பிறகு சிவோகம் (நானே சிவம்) என்ற பேதமற்ற ஞானம் ஏற்படுகிறது.

உலகம் தோன்றியபோதே தோன்றியது சிவலிங்கம். அது மனிதனுல் ஆக்கப்பட்டதல்ல. அது இயற்கையோடு இசைந்த தத்துவம். நாதமும் பிந்துவும் அதாவது ஒலியும் ஒளியும் கலந்த மூலமந்திரத் தத்துவம்.

சைவம் விஞ்ஞான ரீதியான மதம். சைவத்தில் சிவன் தனிப் பட்டக் கடவுளாகக் கருதப்படவில்லை. சக்தியுடன் சேர்ந்திருப் பதே சிவத் தத்துவம். நடராஜ வடிவத்தில் வலக்கால் இயக்கமற்ற சக்தி (static energy) இடக்கால இயங்கும் சக்தி (kenetic energy)

ஆகமங்கள் ஆதி சிவனைப்பற்றிப் பேசுகின்றன. இவன் நிஷ்கள மாக இருக்கிறுன் (அருவம்). வழிபாட்டுக்குரிய பல மூர்த்திகளாக மாறும்போது அவன் சகளமாக (உருவம்) இருக்கிறுன். லிங்க வடிவில் அருவமாகவும் உருவமாகவும் காட்சி அளிக்கிறுன்.

நாசிகேத சயனம் என்ற வேதிகையின் வடிவம் சிவ லிங்கத் தைப் போன்றது. தைத்ரீய ஸம்ஹிதையில் குறிப்பிடும் சக்ரசதி முதலிய சில வடிவங்களும் சிவலிங்கம் போன்றவையே. சிவபெருமானை லிங்க வடிவில் வழிபடும் முறையை வேதங்களில் காணலாம்.

இந்த லிங்கம் நம்மை நாம் அறிய உதவும் தத்துவமூர்த்தி லிங்கத்திலே சிருஷ்டி காலத்திலே தோற்றமும், சம்ஹார காலத் திலே ஒடுக்கமும் தோன்றுகின்றன. அதனுல் லிங்கம் எனப் பெயர் ஏற்பட்டது என்று சுப்பிரபோதாகமம் கூறுகிறது.

லிங்கம் என்ற சப்தமானது சித்தரித்தல் எனப் பொருள்படும். (லிங் என்ற தாதுவினிலிருந்து பிறந்தது)

சிவலிங்கத்தின் மேல் நோக்கிய வடிவம். சிவஜோதி. அதனைச் சூழ்ந்து ஆன்மாவையே நோக்கியுள்ளது அருள் ஜோதி. அடியிலுள்ள வட்டவடிவமான வடிவமே ஆன்ம ஜோதி.

இம்மூன்றையும் குறிப்பிட்டே வள்ளலார் ஸ்ரீராமலிங்க ஸ்வாமிகள், ''ஜோதியுட் ஜோதியுட் ஜோதி'' என்று குறிப்பிட் டிருக்கிறுர். ''அருள் ஜோதி தெய்வம் என்னை ஆண்டுகொண்ட தெய்வம்'' என்று அவர் பாடிப் பரவசமடைகிறுர்.

லிங்கம் ஞானசக்தி, ஆவுடையார் (கோமுகம் உடைய வட்ட வடிவம்). கிரியாசக்தி பரவெளியைக் குறிக்கும். சிவலிங்கத்தில் எப்போதும் ஒரு அசைவு உண்டு. அதுவே பராசக்தி. ஆன்மாக் களின் பாசத்தைக் கெடுப்பதற்கான அசைதற் சக்தி சிவலிங் கத்தை சுற்றிக்கொண்டிருக்கிறது. இந்த அசைவு லிங்கத்தில் உண்டென்பதை உணர்த்துவதற்காக ஆவுடையார் லிங்கத்தைச் சுற்றியிருக்கிறது. ஆவுடையாரின் ஒரு பக்கத்தில் நீண்டிருக்கும் கோமுகி ஆன்மாக்களை திருநோக்கம் செய்கின்ற குறிப்பாக

லிங்கத்தில் பிரும்ம பாகம், விஷ்ணு பாகம், ருத்ர பாகம் உண்டு. ருத்ர பாகம் புல்லிங்கம் (புருஷன்). விஷ்ணு பாகம் ஸ்திரீ லிங்கம். பிரும்ம பாகம் நபும்ஸக லிங்கம். அவன், அவள், அது என இருக்கும் உயர்திணைப் பொருளும், அஃறிணைப் பொருளும்

தம்மிடத்தில்தோன்றி லயமாகின்றன, என்பதை உணர்த்துகிறது. லிங்கத்தின் பீட அடி அகன்றும், இடை குறுகியும் மீண்டும் ஆவுடையார் பகுதி அகன்றும் இருப்பது இதைக் குறிக்கும்.

சிவலிங்கம் மூன்று பிரிவுகளையுடையது. அடிப் பாகம் நாற் கோண வடிவமாய் பூமிக்கு அதிபதியும் சிருஷ்டி கர்த்தாவுமான பிரும்ம பாகத்தை குறிப்பதாகும்.

மத்ய பாகம் எட்டு பட்டையுடைய அஷ்ட கோண வடிவமாய் வாமை, ஜ்யேஷ்டை ரௌத்ரி, காளி, கலவிகரணி, பலவிகரணி, பலப்ரதமனி சர்வபூததமனி என்னும் மகாவிஷ்ணுவின் எட்டு சக்திகளும் அதனோடுபொருந்தியிருக்கும் ஆவுடையார் எனப்படும். மனோன்மணியாகிய ஒன்பதாவது சக்தியும் சேர்ந்து நவசக்தி களாகி நீருக்கு அதிபதியான, காத்தல் எனப்படும் ஸ்திதிகர்த்த ரான விஷ்ணு பாகத்தை உணர்த்துவதாகும்.

அரன் என்பதன் பெண்பாலே அரி. அதனாலேயே ''அரியல் லால் தேவியில்லை, ஐயன் ஐயாறனார்க்கே'' என்று திருநாவுக்கர சரும், ''மாதாய மாலவனை மாயவனை'' என்று திருமழிசை ஆழ்வாரும் குறிப்பிட்டுள்ளனர்.

அதற்கு மேலுள்ள பாகம் நெருப்பிற்கு அதிபதியும் அழித்தல் எனப்படும் சம்ஹாரம், மறைத்தல் எனப்படும் திரோதானம், அருளல் எனப்படும் அனுக்கிரஹம் ஆகிய முத்தொழிலுக்கும் அதிபதியான சிவ பாகமாகும்'

பூமிக்கு அதிபதியான பிரும்ம பாகம் பூமிக்குள் மறைந்து ஒடுங்கியுள்ளது.

நீருக்கு அதிபதியான விஷ்ணு பாகம் அபிஷேக நீரைத் தாங்கி நிற்கிறது.

நெருப்புக்கு அதிபதியான சிவ பாகம் மேலோங்கி ஜோதி போன்று ஜ்வலித்துக் கொண்டிருக்கிறது.

இம் மூன்றும் கலந்த அருவமும் உருவமுமற்ற ஜோதி வடிவே சிவலிங்கம்.

சிவலிங்கத்தை வழிபட்டால் பிரும்மாவை வழிபட்ட பலனும், மகாவிஷ்ணுவின் பத்து அவதாரங்களை வழிபட்ட பலனும், சிவபெருமானின் 25 மூர்த்தங்களை வழிபட்ட பலனும் உண்டு என்று வேதாகமங்கள் கூறுகின்றன.

பரமுத்தி நிலையாகிய இன்புறு நிலையில் உயிருக்கோ, கடவு ளுக்கோ உடம்பு உண்டு என்ற கொள்கை சைவத்தில் இல்லை. ஆனால் ஆழ்வார்கள் கொள்கை முக்தியில் உயிர்கள் பரமபதத்தில் திவ்ய சரீரத்துடன் நித்திய சூரிகளாய் பகவானது திருமேனியைப் பார்த்த வண்ணமே கண்டு நிரந்தர இன்பத்தில் ஆழ்ந்திருக்கும் என்பதாகும்.

சிவம் என்றால் செம்பொருள் என்று அர்த்தம். தூயப் பேரின்பப் பொருள் என்பதே அதன் சரியான பொருள்.

குறைவிலா மங்கலக் குணத்தன் ஆதலின்
நிறைமலம் அநாதியின் நீங்கி நிற்றலின்
அறைகுவர் சிவனென அறிவின் மேலவர்

என்கிறது காஞ்சி புராணம்

இறைவன் உயிர்களின் அறிவாற்றல்களுக்கு அப்பாற் பட்டவன். மெய்யுணர்வு நிலையில் தூய பேரின்பப் பொருளாய் அவனை அனுபவிக்க முடியும். அத்தகைய உண்மை அனுபவத்தை இம்மையிலேயே அனுபவிக்கமுடியும்.

லிங்கே ஸர்வம் சமுத்பன்ன மலய ஃ சோச்யதே
சிருஷ்டி ஸம்ஹார மேவோக்தம்
லிங்கம் நாமாஸ்ய சோத்யதே

லிங்கத்திலிருந்தே எல்லாம் உண்டாயின. அதேபோல் எல்லாம் லிங்கத்திலேயே அடங்குகின்றன. படைப்பு, காப்பு, அழிப்பு ஆகிய முத்தொழிலும் அதில் அடங்கியதால் 'லிங்கம்' எனப் பட்டது. சேக்கிழாரும்,

''காணாத அருவினுக்கும் உருவினுக்கும் காரணமாய்
நீநாக மணிந்தார்க்கு நிகழ் குறியாம் சிவலிங்கம்''

என்கிறார். பரம்பொருள் உருவமுள்ளது, உருவமற்றது என்பதை எடுத்துக் காட்டுகிறது லிங்க ஸ்வரூபம். திருமூலர் அன்பே சிவம் என்கிறார்.

## லிங்க வகைகள்

லிங்கம் நான்கு வகை: சமகண்டம். வர்த்தமானம், சைவா திக்யம், திரிராசிகம்.

சிவ பாகம், விஷ்ணு, பாகம், பிரும்ம பாகம் மூன்றும் சமமாக இருந்தால் 'சமகண்டம்'.

பிரும்ம பாகத்தைவிட விஷ்ணு பாகமும், விஷ்ணு பாகத்தை விட ருத்திர பாகமும் ஒவ்வொரு பங்கு அதிகமாக இருந்தால் வர்த்தமான லிங்கம்.

பிரம்ம விஷ்ணுபாகம் சமமாகவும், ருத்திர பாகம் அதிக மாகவும் காணப்படுவது சைவாதிக்யம். லிங்கத்தின் உயரத்தை ஒன்பது பாகம் செய்து அதற்கேற்றாற் போல மற்ற பாகங்கள் அமைதல் திரிராசிகம்.

லிங்கம், சுவாயம்புவம், தேவிகம், திவ்யம், மானுஷம், ராக்ஷஸம், ஆர்ஷம், பாணலிங்கம் என ஏழு வகைப்படும்.

இவைகளில் பாண லிங்கமே உயர்ந்தது. இது உளுந்து அளவு முதல் ஒரு முழ அளவுள்ளது வரை காணப்படுகிறது. நாவற் பழம், தேன், நீலம், பச்சை வர்ணங்களுடையதாகவும், பசுவின்

மூலைக்காம்பு போன்றதாயும் கோழிமுட்டை போன்ற வடிவுடைய தாகவும் மழமழப்பாக இருக்கிற பாண லிங்கம், போகம், மோக்ஷம் இரண்டையும் தரும்.

பாணம் எந்த வர்ணமோ, அந்த வர்ணத்தில் பீடம் இருக்க வேண்டும்.

ரத்னலிங்க அங்க பூஜை மிகவும் சிறந்தது.

| | |
|---|---|
| மரகத லிங்கம் | — புஷ்டி |
| பத்மராக லிங்கம் | — தனம் |
| வைடூர்ய லிங்கம் | — ஆயுள் |
| ஸ்படிக லிங்கம் | — மக்கள் பேறு |
| புஷ்பராக லிங்கம் | — ஸ்தம்பனசக்தி |
| பவழ லிங்கம் | — வசியம் |
| வைர லிங்கம் | — ஆகர்ஷணம் |
| மாணிக்க லிங்கம் | — சர்வசித்தி |
| இந்திரநீல லிங்கம் | — மோக்ஷம் |

உலோகங்கள் :

| | |
|---|---|
| சுவர்ணம் | — புக்தி முக்தி |
| செம்பு | — புத்திர பாக்கியம் |
| வெள்ளி | — சோபை |
| இரும்பு | — சத்ருநாசம் |

மூன்று உலோக லிங்கங்களை வைத்து பூஜித்தல் கூடாது. பொதுவாக இரட்டைப்படையில் லிங்கங்களை வைத்துப் பூஜிக்கக் கூடாது.

ஆன்மார்த்த பூஜைக்கு மட்டும் உபயோகமுள்ள லிங்கம் 12 ஆகும். அவை,

மணல், அரிசி, அன்னம், ஆற்று மண், சாணி, வெண்ணெ, ருத்ராக்ஷம், சந்தனம், கூர்ச்சம், புஷ்பமாலை வெல்லம், மாவு. பூஜிக்கப்பட்ட இறைவனை மனதில் ஸ்தாபித்துக் கொண்டு தண்ணீரில் விட்டுவிட வேண்டும். இந்த லிங்கங்களுக்கு அளவு கிடையாது.

சிவலிங்கம் பிரணவப் பொருள். அ-சிவம், உ-சக்தி, ம-கலை வடிவம். அகரம்-பாணம், உகரம்,கோமுகம், மகரம் வட்டவடிவம் பிரணவம்),

அகார முதலாவனைத்துமாய் நிற்கும்
உகார முதலா உயிர்ப்பெய்தி நிற்கும்
அகார உகார இரண்டும அறியின்
அகாரம் உகாரம லிங்கம தாமே

என்கிறார் திருமூலர்.

## கலைகள்

ஸத்யோ ஜாதம்...ஈசானம் மற்றிய ஐந்து மந்திரங்களும் சிவனுடைய சரீர அவயங்களாகும். ஈசான மந்திரம் சிரஸ்; தத் புருஷம் முகம். அகோரம்-ஹிருதயம், வாமதேவ மந்திரம் குஹ்யம். ஸத்யோஜாதம்-பாதம்.

இந்த ஐந்து பிரும்ம மந்திரங்களுக்கும் 38 கலைகள் (கலை என்றால் அம்சம் அல்லது சக்தி)

சிவத்யான பத்ததியில் ஸ்ரீ அப்பய்ய தீக்ஷிதர் குறிப்பிட்டுள்ளதாவது:

ஈசானம் : ஓம்காரத்திலிருந்து உண்டாகியது. 5 கலைகள் சதா சிவஸ்வரூபம். ஆகாச தத்துவம்.

தத்புருஷம் : காயத்ரீயில் உதித்தது. 3 கலைகள், ஈஸ்வர ரூபம். வாயு தத்துவம்.

அகோரம் : அதர்வ வேதத்தில் தோன்றியது. 8 கலைகள் ருத்ர ஸ்வரூபம். தேஜஸ் தத்துவம்.

வாமதேவம் : சாம வேதத்தில் உண்டானது. 14 கலைகள். ஹரி ஸ்வரூபம். ஜல தத்துவம்.

ஸத்யோஜாதம் : யஜுர் வேதத்தில் தோன்றியது. 8 கலை பிரும்ம ஸ்வரூபம். பிருத்வீ தத்துவம்.

சிவலிங்கத்தின் சாந்தியா தீதக் கலை திருமுடி. சாந்தி கலை முகம். வித்யா கலை மார்பு, பிரதிஷ்டக்கலை வயிறுநி, வர்த்திகலை கால்.

லிங்க ஸ்வரூபம் சிவசக்தி, ஐக்ய ஸ்வரூபமாக விளங்குவதால் ஆனந்தமயமானதும் மங்களத்தை அளிப்பவருமான சிவனை துதிப்பவர்களுக்கு சக்தியின் அருளும் எளிதில் கிடைத்து விடும்.

சிவபெருமான் சம்புரிஷி உருவில் ராமரைக் காண வந்தார். அவரை வரவேற்று ராமர் சிவலிங்க பூஜையின் மகிமை பற்றிக் கேட்டார் (இவ்வரலாறு பத்ம புராணத்தில் உள்ளது).

சம்புரிஷி என்ற சிவமுனிவர் கூறியதாவது:

''சிவனின் வடிவம் என்ன என்று அறிய முடியாதது. ''ஸ்தாணு'' என்று மேல் நோக்கின தேஜஸ் (ஒளி) அதைக் குறிப்பது. அதுதானே லிங்க (அடையாள) வடிவமாக எழுந்தருளி உலகுக்கு அதை உணர்த்தியதுடன் தன்னை வழிபட ஒரு உருவத்தைத் தானே உண்டாக்கிக்கொண்டது. மகாலிங்க மூர்த்தியை தரிசனம் செய்வதால் ஒருவன் தன் ஆன்ம ஸ்வரூபத்தை தெரிந்துக்கொள்கிறான். ஆத்ம ஸ்வரூபமாக எல்லா உயிர்களிலும் அமைந்துள்ள ஈஸ்வரனேதான், எல்லாமாகி நின்றதை உணர்த்திய காட்சி இது. மகாலிங்கத்தை வழிபட்டால் எல்லா தெய்வங்களையும் வழிபட்டதாக ஆகும்.

சிவலிங்கத்தின் மகிமை பற்றி யஜுர்சாகை கூறுவதாவது:

| | | | |
|---|---|---|---|
| நிதநபதயே | நம: | நிதனபதாந்திகாய | நம: |
| ஊர்த்வாய | ,, | ஊர்த்துவ லிங்காய | ,, |
| ஹிரண்யாய | ,, | ஹிரண்ய லிங்காய | ,, |
| சுவர்ணாய | ,, | சுவர்ண லிங்காய | ,, |
| திவ்யாய | ,, | திவ்ய லிங்காய | ,, |
| பவாய | ,, | பவ லிங்காய | ,, |
| ஸர்வாய | ,, | ஸர்வ லிங்காய | ,, |
| சிவாய | ,, | சிவ லிங்காய | ,, |
| ஆத்மாய | ,, | ஆத்ம லிங்காய | ,, |
| பரமாய | ,, | பரம லிங்காய | ,, |

ஏதத் ஸோமஸ்ய ஸர்வலிங்கம் ஸ்தாபயதிபாணி மந்த்ரம்.

## ஜோதிர் லிங்கங்கள்

இமயம் முதல் ராமேஸ்வரம் வரையில் 12 இடங்களில் சிவபெருமான் ஜோதிர் லிங்கமாக விளங்குகிறார்.

சௌராஷ்டிரத்தில் சோமநாதர்; ஸ்ரீசைலத்தில் மல்லிகார்ஜுனர்; உஜ்ஜயினியில் மகா காளர்; நர்மதா நதிக்கரையில் ஓம்காரேஸ்வரர்; பனி மூடிய கேதாரத்தில் கேதாரேஸ்வரர்; டாகினி என்ற இடத்தில் பீம சங்கரர்; வாரணாசியில் காசி விஸ்வேஸ்வரர்; கோதாவரிக் கரையில் திரியம்பகேஸ்வரர் சிதாபூமி என்ற இடத்தில் வைத்யநாதர். தாருகாவனத்தில் நாகேசர்; ராமேஸ்வரத்தில் ராமலிங்கர்; குஸ்ருணேஸ்வரத்தில் குசுமேசர்.

இந்த ஜோதிர் லிங்கங்கள் பற்றிய சுலோகமாவது :

சௌராஷ்ட்ரே ஸோமநாதம் ச ஸ்ரீ சைலே மல்லிகார்ஜுனம்
உஜ்ஜயின்யாம் மகா காளம் ஓங்காரம் மமலேஸ்வரம்
டாகின்யாம் பீம சங்கரம் ஸேது பந்தே து ராமேசம் நாகேசம் தாருகாவனே

வாரணாஸ்யாம் து விஸ்வேஸம் த்ரயம்பகம் கௌதமீதடே
ஹிமாலயே து கேதாரம் குஸுமேஸம் ச சிவாலயே
ஏதாநி ஜ்யோதிர் லிங்கானி ஸாயம் பிராத: படேந்நர
ஸப்த ஜன்ம க்ருதம் பாபம் ஸ்மரணேன விநச்யதி.

ராமேஸ்வரம் அக்னி தீர்த்தக் கரையிலுள்ள சங்கர மடத்தில் இந்த 12 ஜோதிர் லிங்கங்களையும் ஏக காலத்தில் தரிசிக்கலாம்.

## ஆதி சங்கரர் கொண்டுவந்த பஞ்சலிங்கங்கள்

ஆதிசங்கரர் கைலாயத்தில் இறைவனிடம் சென்று பஞ்சலிங்கங்களையும் சௌந்தரியலஹரி என்கிற சுவடியையும்

கொண்டு வந்தார். துவாரபாலகன் என்ன கொண்டு போகிருய் என்று பிடுங்கிப் பார்க்கவே அவன் கையில் கடைசி 51 பாடல்கள் சிக்கின. விட்டுப்போனவைகளை தேவியின் ஆக்ஞையால் சங்கரரே பாடிஞர்.

நேபாளத்தில் பசுபதிநாதர் கோயிலில் வரலிங்கத்தை ஸ்தாபித்து மகா திரிபுரசுந்தரியையும் பிரதிஷ்டை செய்தார்.

பஞ்ச லிங்கங்களில் இரண்டாவதான முக்தி லிங்கத்தை ஜோதிர்லிங்கத் தலமான கேதார்நாத்தில் ஸ்தாபித்தார்.

மூன்ருவதான போக லிங்கத்தை சிருங்ககிரியில் பிரதிஷ்டை செய்தார்.

யோக லிங்கத்தை காஞ்சியிலும், மோக்ஷ லிங்கத்தை சிதம்பரத்திலும் ஸ்தாபித்தார்.

நிர்க்குணமான இரகசியத்தையும் சகுணமான சபாபதியையும் இணைக்கும் இந்த லிங்கம் 'புவனத்திரய சுந்தரம்' என்று மார்க்கண்டேய புராணத்தில் கூறப்பட்டிருக்கிறது. 'அழகிய திருச்சிற்றம்பலம் உடையார்' என்று இந்த லிங்கம் பெயர் பெற்றுள்ளது. இன்று சிதம்பரம் ஆலயத்தில் ஆறுகால பூஜையைப் பெறுவது இந்த ஸ்படிக லிங்கம் தான்.

பக்தனுக்கு அருள் செய்யும் பரமேஸ்வரன் அநேக உருவங்களை எடுத்து நம்மை ரக்ஷிக்கிருன். விஷ்ணுவைப்போல பல அவதாரங்கள் எடுக்காவிட்டாலும் அநேக ரூபங்களை எடுத்து பக்தர்களின் ஹிருதயத்தை ஆகர்ஷித் திருக்கிருர்,

## சிவபெருமானின் இதர உருவங்கள்*

சிவபெருமான் மந்திர யந்திர தந்திர ரூபனுய், நீலகண்டனுய், உமையொரு பாகனுய், சகல தேவர்களுக்கும் தேவனுய், எங்கும் நிறைந்தவனுய், சகலலோக குருவாய் பரிபூர்ண சச்சிதானந்த ரூபியாக விளங்குகிருர்.

சாந்த மூர்த்தியும், சத்குரு ஸ்வரூபியுமாக இவர் விளங்கும் போது தக்ஷிணுமூர்த்தி எனப்படுகிருர். சாது மிரண்டால் காடு கொள்ளாது என்பார்கள். அதுபோல இவர் ருத்ரன் எனப் பெயர் கொண்டு கண்டார் நடுங்கும்படி காட்சி அளிக்கிருர். இதனுல்தான் ருத்திரத்தில் ஆரம்பத்திலேயே ''உன் கோபத்திற்கு ஒரு நமஸ்காரம்'' என்று பிரார்த்திக்கப்படுகிறது.

---

* 'சிவமூர்த்தங்கள்' என்ற தலைப்பில் தருமபுரம் ஆதீன மாத ஏடான ஞானசம்பந்தத்தில் இப்பொழுது தொடர் கட்டுரை வந்துக்கொண்டிருக்கின்றன. அது பின்னர் புத்தகமாக வெளிவரும். ஆகவே இந்த அத்யாயத்தில் இம்மூர்த்தங்கள் பற்றி விளக்கப்படவில்லை.

. . . மூர்த்தங்களில் வீரபத்திரர், பைரவர் இவைகளும் இவருடைய உக்கிர ஸ்வரூபங்களே. இதே இறைவன் ஆண்டியாகவும் அருள் கடாக்ஷிக்கிறான். உடலெங்கும் விபூதியணிந்து சுடலையாண்டியாக பவவினை எல்லாம் நீக்கும் வைத்தியநாதனாகவும் விளங்குகிறார்.

## மோகன ரூபங்கள்

ஆடை ஆபரணம் எதுவுமின்றி பிக்ஷாண்டவராகி நம் பக்தியை யாசிக்கிறார் சிவபெருமான். அழகே உருக்கொண்ட சுந்தரேஸ்வரராக மாறி தமிழ் பெண்ணான மீனாக்ஷியை மணந்து கல்யாண சுந்தரனாகிறார். தேவர்கள் விரும்பிய ஆனந்தத்தைக் கொடுக்க அவரே சிற்சபையில் நடனமாடுகிறார்.

தத்துவ ரீதியாக உலகெல்லாம் அவனேயாகும். பரமேஸ்வரன் அண்டமும் அதிலிருந்து பிரிந்தபின் உலகங்களும் அவன் இச்சையாலேயே திகழ்கின்றன என்பதை எடுத்துக்காட்ட நடராஜனாக நாட்டியமாடிக் கொண்டிருக்கிறான். எந்த நேரமும் ஆட்டம், அவன் ஆடாவிட்டால் உலகம் இயங்காதே.

ஆண்டவன் ஆடும் அரங்கு பக்தர்களின் மனமாகும்.

## இதர மூர்த்தங்கள்

சிவலிங்க மூர்த்தியின் 'ஈசான' முகத்தின் அம்சம் பெற்றவர், சோமாஸ்கந்தர் நடராஜர், சந்திரசேகரர், ரிஷபாரூடர், கலியாண சுந்தரர்.

'தற்புருட' முகத்தின் அம்சம் பெற்றவர் பிக்ஷாடனர், காமாரி, காலாந்தகர், திரிபுராரி, க்ஷேத்ரபாலகர்.

'அகோர' முகத்தின் அம்சம் பெற்றவர்கள் : கஜசம்ஹாரர், வீரபத்திரர், தக்ஷிணாமூர்த்தி, கிராதர், நீலகண்டர்.

'வாமதேவ' முகத்தின் அம்சம் பெற்றவர்கள் கங்காளர், கஜமுகானுக்ரகர், சண்டே சானுக்கிரகர், ஏகபாதர், சக்ரானர்.

சத்யோஜாத முகத்தின் அம்சம் பெற்றவர்: சுகாசனர், உமாமகேஸ்வரர், அர்த்த நாரீஸ்வரர், அரியத்தர் ஆக 25 மஹா மூர்த்திகளாவர்.

## பஞ்சானந்தப் பெருமான்

சிவபெருமான் ஒரு முக்கிய கிராம தேவதையாக மேற்கு வங்காளத்தில் வழிபடப்படுகிறார். பெயர் பஞ்சானந்தப் பெருமான். மிகவும் உக்கிரமானவர். இவரை 'அப்பன்சாமி' என்றும் அழைக்கிறார்கள். இவருக்கு வாகனம் கரடி. வைதீக ரீதியான புராணங்களில் இவரைப் பற்றித் தகவல்கள் எதுவும் இல்லை. இவருக்கு சனி, செவ்வாய்க் கிழமைகளில் விசேஷ பூஜை நடைபெறுகிறது. இந்த பஞ்சானந்தப் பெருமானைப்பற்றி ஹௌரா கெஜெட்டீரில் தகவல்கள் இருக்கின்றன.

# சிவனுக்கு உகந்த இரவு 7

''சொல்லும் அவன் பொருளும் போல இணைபிரியாத, ஜகத்திற்கே தாய் தந்தையராக விளங்கும் பார்வதி பரமேஸ்வரரை நான் வணங்குகிறேன். சொல்லும் அதன் பொருளும் நான் நன்றாக அறிவதற்கு அருள வேண்டும்.

—காளிதாசன்

ஊழிக்காலம், அண்ட சராசரங்களில் உள்ள உயிரினங் களுக்கும் ஜடப் பொருள்களுக்கும் அழிவு நெருங்குகிறது.

வலிமை கொண்ட வாயுதேவன் பிரும்மாண்டமான விருக்ஷங் களை எல்லாம் வேரோடு சாய்க்கிறான். அவனது விளையாடல் களுக்கு தப்பிய இடங்களில் அக்னி பொசுக்குகிறான். அவனை ஊக்குவிக்கிறான் வாயு. வருணன் தன் சக்தியெல்லாம் காட்டி கடலைக் கொந்தளிக்கச் செய்கிறான். அண்ட சராசரங்கள் எல்லாம் சிதறிப் போய்விடுகின்றன. மாமலைகள் எல்லாம் தவிடுபொடி யாகின்றன.

இதுதான் பிரளயம்.* அழிவு தவிர வேறு பேச்சில்லை.

எந்த சக்தி இந்த அண்ட பிண்டங்களை எல்லாம் உண்டாக் கியதோ அந்த சக்தி இப்போது யோகத்தில் ஆழ்ந்துள்ளது. இந்த சக்தியின் யோக நிலை கலைந்ததும் மீண்டும் சிருஷ்டி ஆரம்பமாகிவிட்டது. உலகம் மீண்டும் உருவான அந்த இரவே ''சிவராத்திரி''.

''நான் உம்மை ஆராதித்து மீண்டும் இந்த சராசரங்களைப் பெற்றெடுத்தது போலவே இந்த சிவராத்திரியில் நான்கு ஜாமங் களிலும் வழிபடுபவர்களின் விருப்பங்களும் நிறைவேற அருள் புரிக'' என்று அம்பிகை இறைவனை வேண்டினாள்.

''விருப்பங்களையும் நிறைவேற்றுவேன், அத்துடன் விருப்பங் களே எழாத உயர் நிலையையும் அளிப்பேன்'' என்று இறைவன்

---

* **பிரளயம்:**—ஸ்தூலத்திலிருந்து பிரபஞ்சம் சூக்ஷ்ம நிலைக்கு மாறுவதே பிரளயம். இது நான்குவகை.

**பிரகிருத பிரளயம்;**—படைக்கப்பட்ட யாவும் ஊழிகுள் அடங்கி பரத்துடன் ஒன்றுவது

**நைமித்திகப் பிரளயம்:**—சூரியன் நக்ஷத்திரங்கள் தடுமாறி முடிவுறுதல்.

**நித்யப் பிரளயம்:**—ஒவ்வொரு விநாடியும் உலகமும் அதன் பொருள் களும் மாறுவதான நிலை.

ஆத்யாதிகப் பிரளயம்: ஜீவன் முக்தியை அடைந்து மீண்டும் பிறவாமை.

அனுக்கிரஹித்தார். நம் எல்லோருக்குமாக தேவி வரம் வாங்கித் தந்த இரவு இந்த சிவராத்திரி.

எல்லா ராத்திரிகளையும் போன்ற இருட் போது அல்ல சிவராத்திரி. இந்த உலகத் தோற்றம் இருளில் மறைந்து அதற்கு ஆதாரமாக உள்ள மெய்ப்பொருள் மட்டும் உணர்வில் தோய்ந்து ஒளிரும் காலம் இது.

''எல்லோரும் விழித்துக்கொண்டிருக்கும்போது ஞானி உறங்குகிறான், எல்லோரும் உறங்கும்போது ஞானி விழித்துக் கொண்டிருக்கிறான்'' என்று கண்ணன் கீதையில் கூறியிருக்கிறார். அந்த வாக்கியத்தின் சத்தியத்தை நுகரவேண்டிய காலமே சிவராத்திரி.

விஷ்ணுவும், பிரும்மாவும் சிவபெருமானின் அடிமுடி தேட முயன்று அவர்கள் காண முடியாமல் இறைவனை பூஜித்த இரவு சிவராத்திரி.

எல்லா ஜீவராசிகளுக்கும் அடைக்கலமாகும் ஈசனுடைய திருநாளே சிவராத்திரி. உருவமற்ற முழுமுதற் கடவுள் பக்தர்களின் பிரார்த்தனைக்கு இணங்க அரூபத்துக்கும் ஸ்வரூபத்துக்கும் இடையேயுள்ள ஜோதிர்லிங்கமாக காட்சி அளித்தார். லிங்கோத்பவராக திருவுருவத்தை எடுத்துக்கொண்ட நன்னாளே சிவராத்திரி. ஆதியும் அந்தமும் இல்லாத பராபர வஸ்து ஜோதி ஸ்வரூபத்திலிருந்து லிங்கமாக வெளிவந்து பின்னர் லாவண்ய ரூபத்தையடைந்த இந்த புண்ணிய தினமே பிரார்த்தனைக்கும், தியானத்திற்கும் ஏற்ற நாள். நடு நிசியில் பரமசிவன் தரிசனம் தருகிறார். சரியாக இந்த திருநாளுக்கு 180 நாட்களுக்கு முன் தக்ஷிணாயனத்தில் மகாவிஷ்ணு அஷ்டமியில் நடுநிசியில் பூர்ணாவதாரமான கிருஷ்ணாவதாரம் செய்தது குறிப்பிடத்தக்கது.

## சிவனும் சிவையும்

ராத்திரி என்ற பெயருடன் விளங்குவது சிவராத்திரியும் நவராத்திரியும் தான்.

கிருஷ்ணன் இரவில்தான் தோன்றினார். ஆனால் கிருஷ்ண ராத்திரி என்று நாம் சொல்வதில்லை.

சிவனும் சிவையும் இரவு போல எல்லா ஜீவராசிகளுக்கும் ஓய்வு கொடுத்து இன்பமுருகின்றனர்.

இரவில் ஐம்புலன்களும் மனதில் ஒடுங்க, மனம் ஜீவனில் ஒடுங்க, ஜீவன் நம் உடலில் தூங்காமல் உண்ணாமல் ஸ்வயம் பிரகாசமாகவுள்ள ஸ்வரூபத்தை அடைகிறது. காலையில் எழுந்தவுடன் இரவில் நன்றாக தூங்கினோம் என்கிறோம். உறக்கத்திற்கு இயற்கை வரமளிப்பவர்கள் சிவனும் சிவையும்.

நடு இரவுடன் கூடிய மாசி மாதத்திய கிருஷ்ணபக்ஷ சதுர்த்தசியில் சிவராத்திரி விரதமனுஷ்டித்தால் அசுவமேத யாகம் செய்த பலன் உண்டு.

பூர்வேத்யுர் வாபரேத்யுர்வா மஹாநிசி சதுர்த்தசீ |
வ்யாபத்தாச திருச்யதே யஸ்யாம் தஸ்யாம்
குர்யாத் வ்ரதம் ||
—சிவராத்ரி நிர்ணயம்

முதல் தினமாயினும் மறு தினமாயினும் என்று மகாநிசியில் சதுர்த்தசி வியாபித்திருக்கிறதோ அந்த சதுர்த்தசியில் சிவார்ச்சனை செய்ய வேண்டும்.

ஆதித்யாஸ்தமயே காலே அஸ்திசேத்யா சதுர்த்தசீ |
தத்ராத்ரௌ சிவராத்ரிச்யாத் ஸாப வேதுத்த மோத்தமா ।
—விமலம்

சூரியன் அஸ்தமிக்கும் காலத்தில் சதுர்த்தசியானது இருக்குமாகில் அந்த சிவராத்திரி உ...

## மகா சிவராத்ரி

மாசி மாதம் தேய் பிறை சதுர்த்தசி தினம் மகா சிவராத்திரி எனப்படும்.

சுவஞ்ச பூஜயித்வாத யோஜா கரீத்தி சதுர்த்தசீம் |
மாது: பயோதர ரஸம் ந பி பேச்ச கதாசன ||

சதுர்த்தசியில் சிவனைப் பூஜித்து இரவு முழுவதும் கண் விழித்திருப்பவர் மறுமுறை தாயின் ஸ்தன்னியபானம் ஒருபொழுதும் செய்யமாட்டார்கள். (அதாவது மறுபிறப்பு இல்லை)

ராத்ரௌ யாமத்யாதர்வாக் கடிகைகா மஹாநிசா |
தஸ்யாம் சதுர்த்தசீ யஸ்மாத்தத் ராத்ரிச் சிவராத்ரிகா ||

—குமார தந்திரம்

இரண்டு இரண்டு ஜாமத்திற்கு மேல் ஒரு நாழிகை மகாநிசி காலம். அந்த காலத்தில் சதுர்த்தசி இருப்பின் அவ்விரவு சிவராத்திரியாகும்.

மஹா நிசயா: பரத: திரயோதசி யுதந்து சேத் |
அமா சதுர்த்தசீ பூஜா ந தோஷமிதி கீர்த்திதநம் ||
—காமிகம்

முதல் நாள் மகா நிசிக்குப் பிறகு திரயோதசி இருப்பின் மறுதினம் அமாவாசையோடு கூடிய சதுர்த்தசியில் சிவராத்திரி பூஜை செய்தல் தோஷமில்லை.

அமாவாஸ்யா யுதாவாபி திரயோதசி யுதாபிவா |
சதுர்த்தச்யதி காராத்ரி: சிவராத்திரி நிதஸ்ம்ருதா ||

—சுயாம்புவம்

மஹா சிவராத்திரிக்கு உரியதான சதுர்த்தசியானது அமாவாசையோடு கூடியதாக இருப்பினும் அல்லது திரயோதசியுடன்

கூடியிருப்பினும் சதுர்த்தசி அதிக நாழிகை இருக்கும் தினத்தில் சிவராத்திரி பூஜை செய்ய வேண்டும்.

*அர்த்தராத்ர யுதாயத்ரமாக க்ருஷ்ணு சதுர்த்தசீ |*
*சிவராத்ரி வ்ரதம் தத்ர சாச்வமேதபலம் லபேத் ||*

—நாரதீய ஸம்ஹிதை

## சிவராத்திரி க்ஷேத்ரம்

தமிழ் நாட்டில் சிவராத்திரி க்ஷேத்திரம் என மிகப் பிரபலமாக உள்ளது தஞ்சாவூர் மாவட்டத்திலுள்ள திருவைகாவூர். சிதிலமடைந்திருந்த இக்கோவிலை ஜீர்ணோத்தாரணம் செய்து கும்பாபிஷேகம் செய்தவர் திருப்பணி திலகம் சிரோன்மணி ஸ்ரீ ஏ. எஸ். ரங்கநாதாச்சாரியார் அவர்கள்.

ஒரு காலத்தில் இது வில்வ வனமாக இருந்ததால் வனம் என்றும் பெயர். சுவாமியின் பெயர் வில்வவன நாதர். இவ்வனத்தில் ஒரு முனிவர் தவம் செய்துகொண்டிருந்தார். வேடன் ஒருவனால் துரத்தப்பட்ட மான் அம்முனிவரைச் சரணடைந்தது. மானை தன்னிடம் ஒப்படைக்காவிட்டால் முனிவரையே கொன்று விடுவதாக வேடன் மிரட்டினான். அச்சமயத்தில் எங்கிருந்தோ ஒரு புலி பாய்ந்து வந்து வேட... துரத்தியது. வேடன் அங்கிருந்த வில்வ மரம் ஒன்றில் ... கொண்டான். அவனுக்குப் பசி ஒருபுறம். பயம் ஒருபுறம். அயராமல் இருக்க ஒவ்வொரு இலையாகப் பறித்து கீழே போட்டுக் கொண்டிருந்தான். புலியாக வந்த அந்த சிவபெருமான்மீது அந்த வில்வ இலைகள் விழுந்தன. அந்த வேடன் மரத்தின் மீது கழித்த இரவு மகா சிவராத்திரி தினம். எனவே வேடனுக்குச் சிவபதம் கிடைத்து விட்டது. இவ்வரலாற்றை விளக்கும் சித்திரங்களை இக்கோவிலில் காணலாம்.

## சிவனுக்குப் பிரியமான பிரதோஷ வேளை

**ஸந்த்யாரம்ப விஜ்ரம்பிதம் சுருதிசிர: ஸ்தானந்தா திஷ்டிதம்**
ஸப்ரேம பிரமராபி ராமம் அஸக்ருது ஸத்வாவஸனு ஸேவிதம்
யோகீ நித்ரா பரணம் ஸமஸ்த ஸுமன:
பூஜ்யம் குணாவிஷ்கிருதம் ஸேவே ஸ்ரீகிரி மல்லிகார் ஜுன
மகாலிங்கம் சிவாலிங்கிதம்

—ஆதிசங்கரர் சிவானந்தலஹரி

லஹரியில் நடுநாயகமான 50—வது ஸ்லோகம்)

சந்தியா காலம் என்னும் பிரதோஷ காலத்தில் ஆனந்த தாண்டவமாடி புஷ்பம் போல மலர்கின்றவரும், வேதங்களுக்குச் சிகரமாக விளங்கும் உபநிஷதங்களில் தங்கியிருப்பவரும், பிரமராம்பிகையினால் ஆலிங்கனம் செய்யப்பட்டவரும் பாம்பை

ஆபரணமாகப் பூண்டவரும், எப்போதும் சத்துவ குணத்துடன் விளங்குபவரும், சிவா எனப் பெயர் பூண்ட அம்பிகையால் கடாக்ஷிக்கப்பட்டவருமான ஸ்ரீ சைல மல்லிகார்ஜுன மஹா ... ந்தை வணா ...

காலையில் ஸ்ரீமந் நாராயணனையும், மாலையில் சிவபெருமானையும் தியானிக்க வேண்டும் என்று பெரியவர்கள் ஏற்படுத்தியி ருக்கிறார்கள். உலகத்தை பரிபாலிப்பவரை நினைத்து அன்றைய காரியங்களை ஆரம்பிக்க வேண்டும். உலகம் ஒடுங்கும் இரவு வேளை வரும்போது பரமேஸ்வரனை ஸ்மரிக்க வேண்டும்.

தோஷம் என்றால் இரவு வருவதற்கு முற்பட்ட மாலை வேளை. ப்ர— பிரதோஷ கால...ல் பரமேஸ்வரனை தியானிப்பதற்கு ஏற்றவர்.

சிவ தரிசனத்திற்கு ஏற்ற காலம் பிரதோஷம். திரயோதசி ஏற்பட்ட காலத்தை பிரதோஷம் என்பர். மாசி மாதம் வரும் திரயோதசி மகா சிவராத்திரி. பகல் இரவு சந்திக்கும் நேரத்தில் இயற்கையில் ஒருவித மின்சார சக்தி உலகெங்கும் பரவுகிறது. நம் தேகத்திலும் பிராண சக்தி ஒடுக்கத்தால் மின்சாரம் பாய்கிறது. அந்த சமயத்தில் நம் உடம்பிலுள்ள குண்டலினிசக்தி எழ சாதகமான சூழ்நிலை. இந்த சமயத்தில் சிவபிரான் நடனமாடுவதாகக் கூறும் தத்வம் இடகலை வழியாக காற்றைத் தூக்கி (இடது காலை தூக்கி) சூரிய நாடியில் மூச்சு சஞ்சரித்தால் பரப்பிரும்ம நிலையை எய்தலாம் என்பதை உணர்த்தினர் நம் யோகிகள். யோகிகளுக்கெல்லாம் யோகியாக (ஸம்யமி) சிவபெருமான் விளங்குகிறார்.

பிரதோஷம், நித்யப் பிரதோஷம், மாதப், பிரதோஷம், மகா பிரதோஷம் என மூவகைப்படும். தினமும் சூர்யாஸ்தமனத்திற்கு முன் $3\frac{3}{4}$ நாழிகை பின் $3\frac{3}{4}$ நாழிகை தினப் பிரதோஷம். பிரதி மாதம் வளர்ப்பிறை, தேய்பிறை, திரயோதசி, திதி யன்று சூரியஸ்தமனத்திற்கு முன்னும் பின்னும் $3\frac{3}{4}$ நாழிகை. சித்திரை வைகாசி, ஐப்பசி, கார்த்திகை வளர்பிறை திரயோதசியுடன் சனிக்கிழமை வந்தால் உத்தம மகாப் பிரதோஷம் என்பர்.

பாற்கடலை தேவர்களும் அசுரர்களும் கடைந்தபோது முதலில் வெளிப்பட்ட ஆலகால விஷத்தை சிவபெருமான் அருந்தியது கார்த்திகை சனிக்கிழமை பிரதோஷ சமயத்தில் என்று கூறப்படுகிறது.

ஆலகால விஷத்தைக் கண்டு அஞ்சிய தேவர்கள் சிவபெருமானிடம் சென்று இடமாகவும் வலமாகவும் இடவலமாகவும் ஓடி ரிஷப தேவனின் அண்டத்தில் ஒளிந்துக்கொண்டனர். சிவபெருமான ரிஷப தேவரின் கொம்பின் நடுவில் தோன்றி விஷத்தை அருந்தி தேவர்களைக் காப்பாற்றினார்.

தேவர்களால் துதிக்கப்பட்ட சிவபெருமான் ரிஷப தேவரின் கொம்பின் நடுவிலேயே நடனமாடினார். இவ்வரலாறு கடம்ப வன புராணமென்னும் மதுரை ஸ்தல புராணத்தில் கூறப்பட்டுள்ளது. ஆந்திர தேசத்தின் நஞ்சுண்ட சிவ க்ஷேத்திர புராணத்தில் வைகாசி மாத சனிப்பிரதோஷத்தில் சிவபிரான் நஞ்சுண்டதாகக் கூறப்பட்டுள்ளது.

## சோம சூத்திர பிரதக்ஷிணம் விசேஷமானது

இது தேவர்கள் பயந்து ஓடி ஒளிந்த விதத்தை ஞாபகப் படுத்துவதாக உள்ளது. முதலில் ரிஷப தேவரை தரிசித்து அங்கிருந்து அப்பிரதக்ஷிணமாக சண்டிகேஸ்வரர் வரை சென்று அங்கிருந்து திரும்பி பிரதக்ஷிணமாகப் போகும் வழியில் நந்தி தேவரை தரிசித்து விட்டு கோமுகியை அடைய வேண்டும். மீண்டும் கோமுகியினிடமிருந்து புறப்பட்டு அப்பிரதக்ஷிணமாகப்போகும் வழியில் நந்தியை தரிசித்து விட்டு சண்டேஸ்வரரை அடைய வேண்டும். திரும்பவும் சண்டேஸ்வரரிடமிருந்து பிரதக்ஷிணமாகப் புறப்பட்டு நந்தியை தரிசிக்காமல் சென்று கோமுகியை அடைந்து அங்கிருந்து திரும்பி அப்பிரதக்ஷிணமாக நந்தியை தரிசிக்காமல் வந்து சண்டேஸ்வரரை அடையவேண்டும். இறுதியில் பிரதக்ஷிணமாக ரிஷப தேவரிடம் வந்து அவரை தரிசித்துவிட்டுப் பின் சிவபெருமானைத் தரிசிக்கவேண்டும். இவ்வாறு சோமசூத்திர பிரதக்ஷிணம் செய்தால் ஆனந்தமான பலன்கள் உண்டென்று கூறப்பட்டுள்ளது.

விருஷபம் பூஜயேத் பூர்வம்
பஸ்சித் சிவம் மதார்ச்சயயேத்

என்று காரணாகமத்தில் கூறப்பட்டிருப்பதால் முதலில் ரிஷப தேவருக்குப் பூஜை செய்துவிட்டு பிறகுதான் சிவபெருமானுக்கு பூஜை செய்யவேண்டும்.

விருஷஸ்ய வ்ருஷ்ணே சைவ சர்வ தீர்த்தஞ சந்திவே
தசாதத் வ்ருஷணம் ஸ்பிருஷ்ட்வா த்ருங்க மத்யே சிவம்
தரிசதே

சர்வ தீர்த்தங்களும் அடங்கிய ரிஷபத்தின் அண்டத்தைத் தொட்டுக்கொண்டு இரண்டு கொம்புகளின் நடுவே சிவபெருமானை தரிசித்தால் கடன், வறுமை, நோய், கிலேசம், மரண வேதனை இவை நீங்கப்பெறும்.

பரமேஸ்வரனைத் தரிசிக்க எல்லாத் தெய்வங்களும் பிரதோஷ காலத்தில் வந்து சேருகிறார்கள். அதனால் பிரதோஷகாலத்தில் சிவனை தரிசித்தால் எல்லா தேவதைகளையும் தரிசித்த பலன் உண்டு.

ரகு வம்ச காவியத்தில் கவி காளிதாசன் ''வாகர்த்தா விவ'' என்ற சுலோகத்தை மங்கள சுலோகமாக எழுதியிருக்கிறார். அதன் கருத்து:

சப்தமும் அர்த்தமும் வேறாகத் தோன்றினாலும் இரண்டும் எப்படி இணை பிரியாமல் ஒன்றாக இருக்கின்றனவோ அப்படியுள்ள பார்வதி பரமேஸ்வரனை வணங்குகிறேன்.

சென்னை மயிலாப்பூரில் ஸ்ரீ கபாலீஸ்வரர் பிரும்மோத்ஸவத்தின்போது எட்டாம் நாள் (அன்று திரயோதசி) பிரதோஷ வேளையில் இறைவன் 63 அடியார்களுக்கும் தரிசன மளிக்கிறார்.

## சிவனுக்குப் பிரியமான சோமவார விரதங்கள்

''விஷயங்களை நினைத்துக்கொண்டே இருப்பதால் மனிதனுக்கு அவற்றில் பற்று உண்டாகிறது. இந்த விஷய வாஸனையை விடுவதற்கு பெரும்பாலும் மனிதன் சக்தியற்றவன் ஆதலால் கர்மமயமான பூஜை மனிதனுக்கு காமதேனுவாகும்'' என்று வியாஸர் கூறுகிறார் ஸ்காந்தத்தில்.

இந்த பூஜைக்கு அனுகுணமாக இருப்பது சில விரதங்கள். அதில் சிவபெருமானுக்கு மிகப் பிரியமானது கார்த்திகை சோம வாரம்.

சிவபெருமான் ஒளிப்பிழம்பாக காட்சி அளித்தது கார்த்திகை மாதத்தில்தான். எனவே, கார்த்திகை மாதம் சிறப்புடையதாகிறது. சிவ விரதங்களுள் சோமவார விரதம், திருவாதிரை விரதம், பிரதோஷ விரதம், சிவராத்திரி விரதம் முதலியன முக்கியமானவை. சிவத்தைக் குறிக்கும் பல பெயர்களுள் சோமன் என்பதும் ஒன்று. அதற்கு உமா தேவியுடன் வீற்றிருப்பவன் என்பது பொருள். எனவே சோமனுக்கு உரிய வாரம் சோமவாரம் ஆயிற்று.

சந்திரனும் அச்சோம வார விரதத்தை அனுஷ்டித்தான். சோமன் என்ற பெயரைப் பெற்றான். சிவபெருமானுக்கு அபிஷேகப் பிரியர் என்ற பெயரும் உண்டு. எனவே, இச்சோம வாரத்தில் அவருக்கு உகப்பான அபிஷேகம் செய்து தீபமிட்டு வழிபடுதலும் இயன்றவரை விரதம் காத்தலும் சிறந்தபலன்களைத் தருவதாகும்.

தருமை ஆதினத்தைச் சேர்ந்த திருக்கடவூரில் சோம வாரம் ரொம்ப விசேஷம்.

சித்திரவர்மாவுக்கு சீமந்தினி என்ற பெண் பிறந்தாள். 14-ம் ஆண்டில் இவள் பதியை இழப்பாள் என்று ஜோஸ்யர் கூறினார். அரசன் பெரும் கவலையுடன் இவ்விஷயத்தை பெண்ணுக்குத் தெரியாமலேயே வளர்த்து வந்தான். ஆனாலும் அவளுக்குத் தெரிந்துவிட்டது.

சீமந்தினி யாக்யவல்கியரின் தர்ம பத்தினியான மைத்ரேயிடம் சரண் புகுந்தாள். ''நியமத்துடன் ஸோம வாரத்தில் சிவனையும் கௌரியையும் பூஜிப்பதே இதற்கு பரிஹாரம்'' என்று மைத்ரேயி கூறி பூஜா விதியையும் கூறினாள்.

## பூஜையின் பயன்

| | |
|---|---|
| அபிஷேகத்தால் | —பாவம் அகலும் |
| பீட பூ | —ஸாம்ராஜ்யமளிக்கும் |
| கந்தம் | —ஸகல ஸௌபாக்கியத்தை அளிக்கும் |
| புஷ்பம் | —சௌக்கியம் தரும் |
| தூபம் | —நல்ல வாசனையை தரும் |
| தீபம் | —தேஹ காந்தியை உண்டுபண்ணும் |
| நைவேத்தியம் | —மஹாபோகத்தைத் தரும் |
| தாம்பூலம் | —லக்ஷ்மியை அளிக்கும் |
| நமஸ்காரம் | —நான்கு புருஷார்த்தங்களையும் கொடுக்கும் |
| ஜபம் | —அஷ்டைச்வர்யமளிக்கவல்லது |
| ஹோமம் | —ஸர்வமாக ஸ்மிருத்தியைத் தரும் |
| அன்னதானம் | —ஸர்வவேத திருப்திகரம் |

பூஜை செய்யச் செய்ய சீமந்தினிக்கு அழகும் பாக்கியமும் வளர்ந்தன. துன்பமும் இளைப்பும் சிறிது சிறிதாக அகன்றன. பதினாங்காம் ஆண்டு பிறந்தது. தமயந்திக்கும் நளனுக்கும் பௌத்திரனும் இந்திரஸேனனுடைய புதல்வனுமான சந்த்ராங்கதனை அழைத்து அவனுக்கு சீமந்தினியை அளித்து விவாகம் சிறப்பாக நடந்தது. ஜோஸ்யரது கூற்று மன்னனது மனத்தை உறுத்திக்கொண்டே இருந்தது. அழகான தம்பதிகள்; சமமான சம்பந்தம். அரசனை இருவரும் வந்து வணங்கினர். அந்தணர் ஆசி கூறினர். எங்கும் ஒரே உத்ஸவம். ஸௌமாங்கல்யத்தை நாடி, தந்தை ஆடை ஆபரணங்களை அளித்தார். அரசனது விருப்பப்படி, சிலமாத காலம் சந்திராங்கதன் மனைவியின் மாளிகையிலேயே தங்கினான். ராஜகுமாரர்களுடன் சென்று வேட்டையாடிக் காலத்தைக் கழித்தான்.

ஜோஸ்யரது சொல் பலனைத் தர சந்திராங்கதன் தோணியிலேறி காளிந்தியைக் கடக்கச் சென்றான். திடீரென்று தோணி சுழலில் சிக்கியது. சிலர் இறந்தனர். சிலர் மறைந்தனர். இந்தச் செய்தி மன்னன் மாளிகையில் பேரிடிபோல செவியைப் பிளந்தது; மனத்தை முறித்தது; உடலை பிரக்ஞையை அகற்றியது. எங்கும் ஒரே அழுகை; ஒரே துக்கம். அனைவரும் சோகக்கடலில் ஆழ்ந்தனர். தீயில் விழுந்த புழுப்போல் துடித்தாள் சீமந்தினி. அவள் தீப்பாய முயன்றாள். தந்தை அதைத் தடுத்தார். முறை தவறாமல் மூன்று ஆண்டுகள் அவள் ஸோமவார பூஜையை நிறுத்தாமல் செய்தாள்.

யமுனைச் சுழலில் சிக்கிய சந்திராங்கதனோ ஆயுள்பலம் பலமாக ...ல் மூர்ச்சையாகிப் பாதாளத்துக்குச் சென்றான். அங்கு ஜலக்கிரீடையில் ஈடுபட்டிருந்த நாக கன்னிகைகள் இவன் உருவத்தைக் கண்டு வியந்தனர். தங்கள் அரசனான தக்ஷகன் முன்னே கொண்டு நிறுத்தினர். நாகராஜனது உருவம் ராஜ குமாரனுக்குப் பயத்தைத் தரவில்லை; வியப்பைத்

அவனியில் வீழ்ந்து அவனை நமஸ்கரித்தான். அவன், ''நீ யார்?'' என்று வினவ, தன் குலத்தையும் தனக்கு நேர்ந்த சம்பவத்தையும் கூறினான். நள தமயந்திகளின் பவித்திரமான சரித்திரம் பாதாளம் வரை பாய்ந்திருந்தது. அவர்களுடைய பௌத்திரன் இவன் எனக் கேட்டுச் சந்தோஷமடைந்த தக்ஷகன் இவனைத் தன் அருகில் ஆஸனத்தில் அமரச் செய்தான்.

''நீங்கள் பூஜிக்கும் தெய்வம் யாது?'' என வினவினான் தக்ஷகன். ''எங்குமுள்ளவனும், பாதாளத்தில் ஹாடகேச்வரன் எனப் பெயர் பெற்றவனுமான சதாசிவனையே நாங்கள் பரம்பரையாகப் பூஜிக்கிறோம்'' என்றான் ராஜபுத்திரன்.

இதைக் கேட்ட பன்னகாதிபன் பதின்மடங்கு ஆதரவு காட்டி, ''உனக்கு என்ன வேண்டும்?'' என்றான். என் பெற்றோரும் மற்றோரும் நான் இறந்ததாக எண்ணி வருந்துகின்றனர். அவர்களுடைய துயரத்தைத் துடைப்பதே தனயன் தருமல்லவா?'' என்றான் சந்திராங்கதன்.

அவனது பித்ரு பக்தி தக்ஷகனைப் பரவசமாக்கியது. அவன் ராஜகுமாரனுக்கு அழகிய ஆடை ஆபரணங்களை அளித்ததுடன், இஷ்டப்படி செல்லக்கூடிய ஒரு குதிரையையும் தந்தான். ''நீ நினைத்தபோது நாம் உன்முன் தோன்றுவோம்'' என்றான்.

குலமும் பக்தியுமே சந்திராங்கதனுக்குச் சிறப்பளித்தன. திவ்ய ஆபரணங்கள் பூண்டு, தெய்வீகக் குதிரையில் ஏறிவந்த அவன், வெளியில் வந்த இடம் யமுனா தீரம்.

சோமவார பூஜைக்காக அங்கு ஸ்நானம் செய்ய வந்த சீமந்தினி அவனைக்கண்டு மூன்று ஆண்டு ஆனதால், 'இவன் யாரோ அந்நிய புருஷன்' என்றெண்ணி, இயற்கையான அச்ச நாண அடக்கங்களுடன் தலை குனிந்து சென்றாள். அரசகுமாரனே தனக்கு மாலையிட்ட மகிஷியே இவள்; தன்னை இழந்ததால் வேறு வேஷத்துடன் ஆடை ஆபரணமின்றியும் கவலையுடனும் இருக்கிறாள் என்று ஊகித்தறிந்தான். எனினும் சகிகளைக் கேட்டறிந்து, தனது ஸ்வரூபத்தைக் கூறாமல், ''உன் பதி உயிருடன் இருக்கிறான். எங்கோ அவனைக் கண்டேன். இரண்டு மூன்று நாளில் உன் துன்பம் அகலும்'' எனக் கூறி தந்தையைத் தேடிச் சென்றான் அவன்.

சீமந்தினியின் செவியில் தேவாமிருதம் பாய்ந்தது. அவள் பன்மடங்கு பக்தியுடன் சோமவார பூஜை செய்தாள். துக்கக் கடலிலிருந்து கரையேற்றிப் பெற்றோரை ஆனந்தக் கடலில் மூழ்க வைத்தாள். எங்கும் சோமவார பூஜை மகிமைபற்றியே பேச்சு. 'கணவன் வருவான்' என்ற பேச்சே பேரானந்தமளித்தது. முடிவில் கணவன் உயிருடன் வந்தே விட்டான். சீமந்தனியின் சோமவார விரதம் பலித்தது.

## அபிஷேகப் பிரியர் சிவன்

சிவபெருமானுக்கு அபிஷேகம் என்றால் மிகவும் பிரியம். அவர் இருப்பது பனியடர்ந்த இடம். அணிவதோ ஜில்லென்றிருக்கும் பாம்பு. தலையில் குளிர்ச்சியான கங்கை. இவ்வளவும் போதாது என்று மார்கழி மாதம் விடியற்காலையில் குளிர அபிஷேகம்.

ஸ்ரீ அப்பைய தீக்ஷிதர் இந்த அபிஷேகத்தை சிதம்பரம் ஆலயத்தில் மார்கழி திருவாதிரையன்று தரிசித்துக்கொண்டிருந்தார். இந்த குளிரில் இப்படி அபிஷேகம் நடைபெறுகிறதே. உனக்கு குளிர் காய ஒரு இடம் இருக்கிறது. தாபத்தினால் என் ஹிருதயம் கொதித்துக் கொண்டிருக்கிறது. நீ அங்கு தங்கி விட்டால் இந்த குளிருக்கு மிக இதமாக இருக்கும் என்று ஹிருதயத்தில் வாசம் செய்ய வேண்டும் என்று வேண்டுகிறார்.

ருத்ரம் சொல்லி அபிஷேகம் செய்வதுதான் மிகவும் பிரியம். இதில் ருத்ராபிஷேகம் என்பது மிகவும் விசேஷம். இந்த ருத்ராபிஷேகம் தருமபுரம் ஆதினத்தால் திருச்சி மலைக் கோட்டை தாயுமானவருக்கு ஆனி மாதத்தில் நடததி வைக்கப் படுகிறது.

## ருத்திராபிஷேகம்

பதினொரு கலசங்கள் 11 அந்தணர்கள். ஒவ்வொருவரும் 11 முறை ருத்திர ஜபம் செய்ய வேண்டும் அக்னியில் 11 முறை ருத்திர ஹோமம் செய்து முடிவில் வசோத்தாரையுடன் (நெய் இடைவிடாமல் அக்னியில் விழுந்துக்கொண்டிருப்பது) யாகத்தை பூர்த்தி செய்ய வேண்டும்.

பதினொரு திரவியங்களால் (தைலம், பஞ்சகவ்யம், பஞ்சாமிர்தம், நெய், பால், தயிர், தேன், கரும்பஞ்சாறு, பழச் சாறு, இளநீர், சந்தனம்) சேர்ந்த ஸ்னபன கலச நீரை சுவாமிககு அபிஷேகம் செய்து தூப தீப நெய்வேத்திய கற்பூர ஆரத்திக்குப் பின் பதினொரு கலச நீர்களையும் அபிஷேகம் செய்ய வேண்டும்.

இவ்வாறு 11 நாட்கள் தொடர்ந்து ஏகாதச ருத்திர அபிஷேகம் நடத்தினால் அது மகா ருத்திராபிஷேகம் 121 அங்கத்தினர்கள ஒவ்வொருவரும் 121 முறை ஜபம் செய்ய 121 கலசம் வைத்து ஹோமம் செய்பவர் 121 முறை ஹோமம் செய்து அபிஷேகத்துடன் பூர்த்தி செய்வது அதிருத்திரம் எனப்படும்.

அபிஷேகத்தின்போது ருத்திரம் முழுவதும் செய்ய முடியாமல் போனால் பஞ்சாக்ஷரம் உள்ள அனுவாகத்தை மட்டுமாவது சொல்ல வேண்டும்.

## ஸ்ரீ ருத்ரம்

நமஸ்தேஸ்து பகவான் விஸ்வேஸ்வராய மகாதேவாய திரயம்பகாய திரிபுராந்தகாய திரிகாலக்னிகாலாய காலாக்னி

ருத்ராய நீலகண்டாய மிருந்யுஞ்சயாய சர்வேஸ்வராய சதாசிவாய ஸ்ரீமந் மகாதேவாய நம:

யஜுர் வேதத்தில் 4-வது காண்டமாகிய நடு காண்டத்தில் ஸ்ரீ ருத்ரம் இடம் பெற்றிருக்கிறது. ஸ்ரீ ருத்ரப் பாராயணம் சகலவிதமான கஷ்டங்களுக்கும் நிவாரணமளிக்கிறது. இப்பாராயணத்தினுல் அபிஷேகம் செய்தால் சிவபெருமான் பரமானந்தமுற்று எந்த வரமும் தருவதற்குத் தயாராக இருக்கிருனும். அதனுல் இதையடுத்து வரும் 'சமகம்' இது வேண்டும் அது வேணடும் என்று பிரார்த்தனை கோரிக்கையாகவே அமைந்துள்ளது.

எல்லா வேதங்களையும் விட ஸ்ரீ ருத்ரம் மிகச் சிறந்தது என்பது கூர்ம புராணத்தில் விவரிக்கப்பட்டிருக்கிறது. இந்த ருத்ர ஜபத்திற்கு சமமானது வேதத்திலும் ஸ்மிருதியிலும் இல்லை என்று ஸூத ஸம்ஹிதையில் கூறப்பட்டுள்ளது. இந்த ஸ்ரீருத்ரத்திற்கு சாயனர், பட்டபாஸ்கரர், அபிநவசங்கரர் என்று மூன்று பெரியவர்கள் பாஷ்யம் செய்துள்ளனர்.

ஸ்ரீ ருத்ரத்திற்கு 'சதருத்ரீயம்' ருத்ரோபநிஷத் என்ற பெயர்களும் உண்டு. சதருத்ரீயம் என்பதற்கு மூன்று விதமாகப் பொருள் கூறலாம்.

1. பல ருத்ரர்கள் இங்கு வருணிக்கிறபடியால் சதருத்ரீயம்.

2. ருத்ரனைத் சேர்ந்த இந்த ருத்ரோப நிஷத்தில் பல வேத சாகைகளில் படிக்கின்றபடியால் இது சதருத்ரீயம்.

3. ருத்ரனின் நாமாக்கள் அனந்தமாக இங்கு வருணிக்கப் பட்டுள்ளபடியால் 'சதருத்ரீயம்'

ஜாபாலோபனிஷத்தில் ''எதை ஜபித்தால் மோக்ஷத்தை அடையலாம்?'' என்ற கேள்விக்கு ''சதருத்ரீயத்தை ஜபித்தால் மோக்ஷத்தை அடையலாம்'' என்று காணப்படுகிறது.

வேதம் முழுதும் ஒரு தடவை ஜபம் செய்தால் அப்பகலிலே எல்லா பாபங்களும் போய்விடுகின்றன. ஸ்ரீ ருத்திரத்தை ஜபம் செய்தால் அதே க்ஷணத்தில் பாபங்கள் பறந்து விடுகின்றன. ஸூத சம்ஹிதை ''ருத்ரஜபம் செய்கிறவன் மகாபாதகம் என்ற கூண்டிலிருந்து விடுதலையடைந்து விடுவான். ஆத்ம ஞானத்தை அடைவான். வேதத்திலும் ஸ்மிருதியிலும் இதற்கு சமமான ஜபம் வேறு ஒன்றுமே இல்லை'' என்கிறது.

ஸ்ரீ ருத்ரனின் திரிசதி என்ற நாமாக்கள் வேத மந்திரங்களின் தொகுப்பாக ஸ்ரீ ருத்திரத்தில் அடங்கியுள்ளது. பாராயண மாத்

---

* ஸ்ரீ ருதரம் பற்றி பூரண விளக்கங்களும் பாராயணமும் பரதிபாவின் ''பாராயண மாலா''வில் காணவும்.

திரத்திலேயே பலனை அளிக்கக்கூடிய நிலையில் அமைந்திருப்பதால் ஸ்ரீ ருத்ரம் சிவ பூஜையில் பிரதான இடம் பெறுகிறது.

*அனுவாகங்கள்:*—ஸ்ரீ ருத்திரத்தில் மொத்தம் 19 அனுவாகங்கள் உள்ளன. முதல் அனுவாகத்தில் கோபாவேசமுள்ள ருத்திரனை சமாதானம் செய்யப்படுகிறது.

இரண்டாவது முதல் ஒன்பது அனுவாகம் வரை ஸ்ரீருத்ரனைப் பலவாறுப் புகழ்ந்து வணங்கப்படுகிறது. கடைசி இரு அனுவாகங்களில் வேண்டுகோள். ஸ்ரீ ருத்ரனுக்கு கோரமாயும் சாந்தமாயுமுள்ள பல உருவங்கள் உண்டு. அவற்றுள் கோரமான உருவத்தை சமாதானப்படுத்துவதற்காக அவருடைய கோபம், ஆயுதம் எல்லாவற்றிற்கும் நமஸ்காரம் செய்யப்படுகிறது. எல்லா வித துக்கங்களுக்கும் கோபமே மூல காரணமாதலால் முதன் முதலாக அதற்கு நமஸ்காரம் செய்யப்படுகிறது. பரமேஸ்வரன் கோபம் கொண்டதும் அவருடைய அம்பு முன் வந்து நிற்கும். பிறகு வில்லை நோக்குவார். பின்பு அவ்விரண்டையும் எடுக்க இரு கைகளும் முன்வரும். ஆகவே அந்த வரிசையிலேயே கோபம், பாணம், வில், கைகள் இவைகளுக்கு நமஸ்காரம் செய்யப்படுகிறது.

ஒவ்வொரு மந்திரத்தின் ரிஷி, சந்தஸ், தேவதை முதலியவற்றை அறிந்துகொள்ள வேண்டியது மிக அவசியம். (அபிநவ சங்கரபாஷ்யத்தில் இவை விரிவாகக் கூறப்பட்டுள்ளன.

## எப்பிறவியாயிருந்தால் என்ன ?

''புழுவாய் பிறக்கினும் புண்ணியா உன்னடி
என் மனத்தே வழுவாதிருக்க வரந்தர வேண்டும்''

இக்கருத்தை வெளியிடும் சிவானந்தலஹரி* சுலோகம்:—

நரத்வம் தேவத்வம் நக வந ம்ருகத்வம் மசகதா
பசுத்வம் கீடத்வம் பவது புஹகத்வாதி—ஜனனம் |
ஸதாத்வத் பாதாப்ஜ ஸ்மரண பரமானந்த லஹரீ
விஹாராஸக்தம் சேத் ஹ்ருதய மிஹ கிம் தேந வபுஷா ||

மனிதப் பிறவியோ, தெய்வப் பிறவியோ, மிருகம், கொசு, பசு, பறவை, புழு எப்பிறவி வேண்டுமானாலும் ஏற்படட்டும். உள்ளம் எப்போதும் உன் திருவடி தியானத்தில் ஏற்பட்டிருந்தால் எப்பிறவியாயிருந்தால் என்ன?

---

* ஆதிசங்கரர் அம்பிகையைப் பற்றி 'சௌந்தரியலஹரி' என்ற 100 சுலோகங்களையும், சிவனைப் பற்றி 'சிவானந்தலஹரி' என்ற 100 சுலோகங்களையும் இயற்றியிருக்கிறார்.

# சிவச் சின்னங்கள் ४

## i. தெய்வ மூலிகை வில்வம்

வான சாஸ்திர ஆராய்ச்சியாளர்கள் திருவாதிரையை எரி நட்சத்திரம் (ஜோதி) என்றும், திருவோணத்தை குளிர்ச்சியான நட்சத்திரமென்றும் கூறியிருக்கிறார்கள். திருவாதிரை சிவனுக்கும், திருவோணம் விஷ்ணுவுக்கும் உகந்த நட்சத்திரங்கள். அதனால் தான் நமது முன்னோர்கள் சிவனுக்குக் குளிர்ச்சி பொருந்திய வில்வத்தையும், அதிக குளிர்ச்சியில் இருக்கக்கூடிய மகாவிஷ்ணுவுக்கு வெப்பத்தைக் கொடுக்கும் துளசியையும் அர்ச்சிக்கக் கூடிய பச்சிலைகளாக வைத்தார்கள் போலும்.

வில்வத்தில் 3, 5, 7, 9, 11 இதழ்களைக் கொண்ட தளங்கள் சிவபூஜைக்கு சிறந்ததாகக் கருதப்படுகிறது. காசியில் முள் இல்லாத வில்வம் அதிகம்.

வில்வம் (சங்கோசனகாரி) அதாவது சரீரத்தை ரத்தம், சீழ் முதலியவை வெளிப்படாமல் சுருக்கி வத்தலாக்கக்கூடிய தன்மையுடையது. அதனால்தான் சமாதி கிரியைகளில் விபூதியுடன் வில்வத்தையும் கலக்கிறார்கள்.

இந்த மனித சரீரத்திற்கு உஷ்ணத்தால் அல்லது குளுமையாலதான் வியாதிகள் வருகின்றன. அதிக உஷ்ணத்தால் ஏற்படும் வியாதிகளுக்கு வில்வம் சேர்ந்த மருந்துகளால் பரிகாரம் செய்யப்படுகின்றன.

இனிப்பு, துவர்ப்பு, வீரியம், வெப்பம், கார்ப்பு ஆகிய குணங்கள் வில்வத்திற்கு உண்டு. கண் எரிச்சல், கபால வலி, தேக அழற்சி, மூளையைப் பற்றிய ரோகம் இவைகளை நீக்குவதுடன் உடலுக்கு அழகையும், புஷ்டியையும், வன்மையையும் உண்டாக்குகிறது. சிவனுக்கு வில்வத்தினால்தான் பூஜை செய்யவேண்டும். மகாலக்ஷ்மிக்கும் அப்படியே. இதற்கு நிர்மால்ய தோஷம் கிடையாது. பூஜித்த வில்வங்களை அலம்பிவிட்டு மீண்டும் பூஜை செயயலாம்.

## ii. ருத்ராக்ஷ மகிமை

சிவபெருமான் திரிபுரத்தை எரித்தபோது அவர் உடலிலிருந்து ஏற்பட்ட வியர்வை பூமியில் பட்டு ஒரு விருக்ஷம் உண்டாகியது. இதன கனி வகைகள் புசிக்கக்கூடியதாகவும் இல்லை. இதைப்பற்றி ஈசனே கூறியதாக பத்மபுராணத்தில் உள்ளதாவது: "இம்மரம்

என் அம்சமானது. இக்கனிகளை அணிபவரின் பாபத்தை நான் போக்குகிறேன்''. இக்கனி தான் ருத்ராக்ஷமெனப்படும்.

ருத்ராக்ஷம் சிவபெருமானது திருக்கண்கள். உலகத்தில் விளையும் காய்களில் துளையுடன் தோன்றும் காய் ருத்ராக்ஷம்

இந்த ருத்ராக்ஷ மாலையைக்கொண்டு ஒரு மந்திரத்தை ஜபித்தால் ஓர் உரு ஒரு கோடி உருவாகும். ருத்ராக்ஷ மாலையில் இருக்கவேண்டியது 27 மணிகள்; அல்லது 54; அல்லது 108.

ஒரு முகம், ஐந்து முகம், பதினொரு முகம், உத்திராக்ஷங்கள் பூஜை செய்யத்தக்கவை.

ருத்ராக்ஷம் தரிப்பவர்கள் சிவபெருமானுக்கு ஒப்பாவார்கள் என்று,

உரைத்த மாமணியணிந்தவர் எம்பிராற்குகந்தோர்
இரைத்த கங்கையஞ் சடையவர்க்கு
இரு விழி அணையார் திரைத்த வார்கடல் நெடுநிலத்து
இம்மணிச் சிறப்பை நிரைத்த நூன்முறை கேட்பவர்
அவர் தம்மை நிகர்ப்பார்

என்கிறது உபதேசக் காண்டம்.

ஏகமுக ருத்ராக்ஷம் கிடைப்பது அரிது. ''கௌரீ சங்கம்'' எனப்படும் இரு பாகங்களைக் கொண்டு ஒரே துவாரத்தைக் கொண்ட ருத்ராக்ஷ வகை மிகமிக உயர்ந்தது.

ருத்ராக்ஷம் ஜாவாத் தீவிலும், நேபாளத்திலும் விசேஷமாக விளைகிறது. பாலித் தீவிலுள்ள மக்கள் ருத்ராக்ஷம் அணிகின்றனர்.

## ருத்ராக்ஷம் அணிதல்

கழுத்தில் 32, தலையில் நாற்பது, காதில் ஆறு, புஜத்தில் 14, சிகையில் ஒன்று, மார்பில் 108.

ருத்ராக்ஷம் ஞான சாதனம். சிகையில் தரிப்பது தாரக தத்துவம். இரு காதுகளில் தரிபபது பார்வதி, பரமேஸ்வரன். பூணூலில் தரிபபது பிருமம ஸ்வரூபம். கரங்களில் தரிப்பது தேவதா ஸ்வரூபம.

சகலவிதமான பாபமும் ருத்ராக்ஷம் தரிப்பதால் அகலும். சூர்ய வடிவான கண்ணிலிருந்து கபில வர்ணமான 12 வகை ருத்ராக்ஷங்கள் தோன்றின. சந்திர மயமான கண்ணிலிருந்து வெண்மையான 16 வகை ருத்திராக்ஷங்கள், அக்னி மயமான நெற்றிக் கண்ணிலிருந்து 10 வகை உண்டாயின.

## ருத்ராக்ஷ வகைகள், பலன்கள

| | | | |
|---|---|---|---|
| ஒரு | முகம் | சிவ ஸ்ரூபம | பிரும்மஹத்தி நிவர்த்தி. |
| 2 | ,, | சிவன், சக்தி | இருவகை வினை நீங்கும். |
| 3 | ,, | சிவனின் முக்கண் அகனி ஸ்வரூபம் | ஸ்திரி ஹத்தி தோஷம் நீங்கும். |

(சிவஞானத்தை விரும்புகிறவர்கள் அணியவேண்டியது)

| | | | |
|---|---|---|---|
| 4 | | பிரும்மமயம் | நரஹத்தியை ஒழிக்கும். |
| 5 | ,, | காலாக்னி ருத்ர ஸ்வரூபம் | தகாததை உண்டது, தகாததை புணர்ந்த பாவம் நீங்கும். |
| 6 | ,, | கார்த்திகேய ஸ்வரூபம் | பிரும்மஹத்யாதி தோஷம் நீங்கும் |
| 7 | ,, | அனந்தன் (ஆதிசேஷன்) ஸ்வரூபம் | பிரும்மஹத்யாதி தோஷம் நீங்கும். |
| 8 | ,, | கணபதியின் அம்சம் | திருடிய பாபம், ஸ்திரீ சங்க தோஷம் நீங்கும். |
| 9 | ,, | கால பைரவ ஸ்வரூபம் | புத்தி, முக்திகளைக் கொடுக்கும். |
| 10 | ,, | ஜனார்த்தன ஸ்வரூபம் | பூதப் பேய் பிசாசுகளை விரட்டும். |
| 11 | ,, | ஏகாதச ருத்ர ஸ்வரூபம் | பல அஸ்வமேத யாக பலன். |
| 12 | ,, | துவாதசாதித்யர் ஸ்வரூபம் | கோடி சோதான பலன். |
| 13 | ,, | ஷண்முக ஸ்வரூபம் | ரஸ ஸித்தி, ரஸமான ஸித்தி |

பதினான்கு முகம் :—இதைத் தலையில் மட்டும்தான் தரிக்க வேண்டும.

ருத்ராக்ஷத்தின் முகம் பிரும்மா. த்வாரம் ருத்ரன். அடிபாகம் விஷ்ணு. இப்படி தியானம் செய்து தரிக்க வேண்டும். ருத்ராக்ஷம் முகம் மற்றொரு ருத்ராக்ஷ முகத்துடனும், அடி அடியுடனும் சேர்த்து கோர்க்கவேண்டும். நடுவில் ஒன்றை மேல் முகமாக வைக்கவேண்டும். இது மேரு எனப்படும்.

இமாலயத்தில் வளரும் ருத்ராக்ஷ மரத்தின் கொட்டை தான் இது. நான்கு நிறங்கள் உண்டு. வெள்ளை அதிக விலை உள்ளது. அதற்கடுத்தது சிவப்பு. மூன்றாவது சொர்ண மஞ்சள். நான்காவது கருப்பு. சிவப்பு கருப்பு நிற உத்திராக்ஷங்களே அதிகம்.

ருத்ராக்ஷம் என்பது சம்ஸ்கிருதச் சொல். ருத்திர, அக்ஷ என்ற இரண்டும் இணைந்து சிவனின் கண் என்று அர்த்தம்.

# திருநீறு (விபூதி)

மந்திரமாவது நீறு, வானவர் மேலது நீறு
சுந்தரம் ஆவது நீறு, துதிக்கப்படுவது நீறு
தந்திரம் ஆவது நீறு, சமயத்திலுள்ளது நீறு
செந்துவர் வாயுமைபங்கன் திருவாலவாயன் திருநீறே

—சம்பந்தர் (திருநீற்றுப் பதிகம்)

விபூதி என்பதற்கே ஐஸ்வரியம் என்று பொருள். விபூதி, பூதி, வர்யம், பஸ்மம், பஸிதம் முதலான சொற்கள் திருநீற்றைக் குறிக்கும். எட்டுவித ஸ்நானங்களில் பஸ்ம ஸ்நானமும் ஒன்று.

விபூதி எப்படி தயாரிப்பது? எப்படி அணிவது? அதன் பலன் என்ன? முதலியவைகள், சிவாகம நித்ய அனுஷ்டானத்திலும், யாஜீஷி காலாக்னி ருத்ரோப நிஷத்திலும், அதர்வணீ பஸ்மஜாப லோப நிஷத்திலும் கூறப்பட்டுள்ளது. கன்றோடு கூடிய பசுவின் சாணம் அக்னியில் பஸ்மமாவதே சிறந்தது.

திருநீறு அளப்பரிய பெருமையுடையது. குமார தந்திரம், சிவ தருமோத்திரம், பதுமசாங்கிதை, நீலபத்திரம், மருங்கம் முதலிய சிவாகமங்களும், மனுஸ்மிருதியும் இப்பெருமையை விளக்குகின்றன.

இந்த விபூதியைக்கொண்டே பாண்டிய அரசனின் வெப்பு நோயை தீர்த்தார் சம்பந்தர். இந்த திருநீற்றைப் பூசியே வயிற்று வலி தீர்க்கப்பட்டார் அப்பர்.

திருநீறு தன்னைப் பூசுவோரைப் புனிதப்படுத்துகிறது. ''பூசுநீறு போல் உள்ளும் மனிதர்கள்'' என்பது சேக்கிழார் வாக்கு. இதில் ஆகமங்களின் உண்மை அடங்கியிருப்பதால் 'தந்திரமாவது நீறு' என்று சொல்லப்பட்டது. இது பிருஹாதரண் யோபநிஷத்தில் ''பஸ்மம்'' என்றும், தைத்ரியோபநிஷத்தில் ''பூதி''என்றும், முண்டகோபநிஷத்தில் ''சிரோவிரதம்'' என்றும் குறிப்பிடப்பட்டுள்ளது.

''நீற்றினை இகழ்ந்தவன் சிவனை இகழ்ந்தவன் ஆவான்'' என்பது பிருகத் ஜபாலோபநிஷத் வாக்கியம்.

''நீரில்லா நெற்றி பாழ்'', ''திருநீறு இட்டு யார் கெட்டார்?'' முதலியவை ஆன்றோர் மொழிகள். பிறவி நோய் தீர்ப்பதற்கான மணிமந்திர ஔஷதங்களுள் விபூதியே சிறந்த ஔஷதமாகும் என்பது சங்கிர சங்கிதையின் கருத்து.

''காடுடைய சுடலைப்பொடி பூசி உள்ளங்கவர் கள்வன்'' என்பது சம்பந்தர் திருவாக்கு. எதையும் சுட்டு எரித்தால் கரியாகும். கரியையும் சுட்டெரித்தால் சாம்பலாகும். அதை மேலும் எரிக்க முடியாது. இவ்வாழ்வின் நிலையற்ற தன்மையை உணர்த்துவது திருநீறு. முடிவில் எல்லாம் பிடி சாம்பல்தான்.

சிவபெருமான் திருமேனியிலிருந்து விபூதி [illegible]து. [illegible]ளை அணிபவரின் தீவினைகள் எல்லாம் நீருக்கிவிடுவதால் திருநீறு எனப் பெயர் ஏற்பட்டது. தன்னை அணிபவர்க்கு மேலான செல்வத்தைத் தருவதால் விபூதி (வி—மேலான, பூதி—செல்வம்). தன்னை அணிபவரது பழவினைகளை அழிப்பதால் பஸ்மம் எனவும் பெயர் பெற்றது.

''பூதியெனப்படுஞ் செல்வ வேதுவினாற்
சிவமாகும் பொருடிகழ்த்து
மேதுவினிற் பசிதமிகு பாவங்கடம்மை
யச்சத்திசைத்த லாலே
யோதலுறும் பற்பமென விடரிடை
நின்றகற்றுதலா லொன்றுஞ் சாரந்
தீதகல வினை வரையுமளிப்பதனுல்ரக்கை
யெனச் செப்புநூலே''

—சித்தாந்த சிகாமணி

''நீடறுந் தீவினை யனைத்து நீற்றிவிடலானீ றென்றும்
வீடில் வெறுக்கை தருதலினுல் விபூதி யென்றுமுயிர் தோறுங்
கூடுமல மாசினைக் கழுவுங் குணத்தாற் சாரமென்று மடமோட
வளர் சோதியைத் தரலாற் பசிதமென்றும் உரைப்பாரால்''

—பேரூர்ப் புராணம்

[illegible] வேறு காரணத்தாலும் பெயர்ப் பாகுபாடு உண்டு. சிவபெருமானது ஐந்து முகங்களினின்றும் தோன்றிய ஐவகைப் பசுக்கள், சத்தியோஜாத முகத்திற்றோன்றிய கபிலவர்ணமுடைய நந்தையினிடத்து உண்டானதற்கு விபூதி என்றும், வாமதேவ முகத்தினின்றும் உதித்த வெண்ணிறமுடைய பத்திரையென்னும் பசுவினிடத்து உண்டானதற்குப் பசிதம் என்றும், அகோர முகத்தினின்றும் தோன்றிய கருநிறச் சுரபியிடத்து உண்டானதற்குரிய பஸ்மம் என்றும், தற்புருட முகத்திற்றோன்றிய புகைநிறச் சுசீலையினிடத்து உண்டானதற்குச் சாரம் (க்ஷாரம்) என்றும், ஈசான முகத்திற்றோன்றிய சிவப்பு நிறச் சுமனையிடத்தில் உண்டானதற்கு (ரக்ஷை) என்றும் பெயர்கள் சொல்லப்பட்டன. இதைப் பின்வரும் வீராகம சுலோகங்களாலறியலாம்.

சத்யோ ஜாதாத் விபூதிச் ச வாமாத் பசிதமே வச
அகோராத் பஸ்ம ஸம்ஸாத் புருஷாத் க்ஷார நாம ச

## பசுவின் சாணம்

திருநீறு ஆக்குவதற்குப் பசுவின் சாணத்தைப் பயன்படுத்துவதற்குரிய காரணத்தை நாம் ஈண்டறிதல் நல்லது. மும்மலங்களாற் கூட்டப்பெற்ற ஆன்மாக்கட்குப் பசு என்றும்

பெயருமுண்டு. மேலும் பசுவின் உடம்பில் எல்லாக் கடவுளர்களும் தேவர்களும் பொருந்தியுள்ளனர்.

''வேதாவுங் கரியவனுமாவினது
கோட்டடியின் விளங்கி வாழ்வர்
கோதாவி முதற்றீர்த்தங்
கோட்டினுதிச் சராசரமுங்கூடி நிற்கு
மீதான சிரத்தமலன் விமலையத
னடுநெற்றி விசாகனுசி
மீதானந்தனிலத னுண்ணுசி
தனிலுகேசர் விளங்குவோரே''

—சிவ தருமோத்திரம்

எனவே, பசுக்களின் மலம் நீறுக்கப்படுதல் போல ஆன்மாக்களாகிய பசுக்களின் மலங்களும் சிவ ஞானாக்கினியால் தகிக்கப்படல் வேண்டும் என்னும் உட்கருத்தே பசுவின் சாணத்தால் திருநீறு ஆக்கப்படுவதற்குரிய காரணமாகும். திருநீறு பற்றிய அரிய விவரங்களைப் பெரிய புராணத்துள் 'முழு நீறு பூசிய முனிவர் சருக்கத்துள்' காணலாம்.

முழந்தாள்கள், புயங்கள், முழங்கைகள், மணிக்கட்டுகள், விலாப்புறங்கள், முதுகு, கழுத்து ஆகிய 12 இடங்களிலும் படைத்தலைச் செய்யும் திருவருள் பதிந்த சத்தியோஜாத மந்திரத்தையும் உச்சரிக்க வேண்டும். இவ்வாறு அணிவதால் அவ்விடங்கட்டு அதிதேவ மூர்த்திகளாகிய சிவம், சக்தி, சதாசிவன், மகேசுவரன், உருத்திரன், வாமை முதலிய நவசக்திகள், அசுவினி தேவர் இருவர் ஆயினோரது திருவருள் சுரக்கும். இவ்வாறு மனமுருகக் கடவுளை நினைத்து, வாயாற் சிவ மந்திரத்தைக் கூறிக் கையினால் திருநீற்றைப் பூசும்போது மனம், வாக்கு, காயம் மூன்றினாலும் ஒரே சமயத்தில் சிவ பாவனையும் வழிபாடும் நடக்கின்றன. இதுவே உத்தம வழிபாடு. இக்கருத்தைக் ''கருவாய்க் கிடந்துன் கழலே நினையும் கருத்துடையேன்'' என்று தொடங்கும் அப்பர் சுவாமிகள் திருப்பாடலால் அறியலாம்.

திருநீறு 32 இடங்களிலேனும், 16 இடங்களிலேனும், 8 இடங்களிலேனும், 5 இடங்களிலேனும் தரிக்கற்பாலது. இவற்றுள் 8 இடங்களாவன :—1. தலை, 2. நெற்றி, 3. காதுகள் இரண்டு, 4. தோள்களிரண்டு, 5. மார்பு, 6. கொப்பூழ் என்பன.

ஐந்து இடங்களாவன:—1. நெற்றி, 2. தோள்களிரண்டு, 3. கழுத்து, 4. கொப்பூழ் என்பன.

இவ்வாறு நாம் அணிந்துகொள்ளும் திருநீற்றால் அந்தந்த இடங்களுக்குரிய கருவிகளாற் செய்யப்படும் பாவங்கள் நீங்குமென்று ''பிருகச்சாபாலோப நிஷத்'' கூறுகின்றது.

ஐந்தெழுத்தை உச்சரித்து திருநீறு பூசிக்கொள்வது மரபு. அனுஷ்டானம், சிவபூசை செய்வோர் முதலில் திருநீற்றைத் தண்ணீர் விட்டுக் குழைக்காமல் பூசிக்கொள்ள வேண்டும். பின் பெருவிரல், நடுவிரல், மோதிர விரல் என்ற மூன்று விரல்களால் திருநீற்றை எடுத்து இடது உள்ளங்கையில் வைத்து ஐந்து எழுத்தை எழுதி வலக்கரத்தால் மூடி பின்கண்ட 16 மந்திரங்களைக் கூறவேண்டும்.

### பஞ்சகலா மந்திரம்

ஓம் நிவர்த்தி கலாயை நம: ஓம் பிரதிஷ்டா கலாயை நம: ஓம் வித்தியா கலாயை நம: ஓம் சாந்தி கலாயை நம: ஓம் சாந்தியதீத கலாயை நம:

### பஞ்சப் பிரம்ம மந்திரம்

ஓம் ஈசானாய நம: ஓம் தத்புருஷாய நம: ஓம் அகோராய நம: ஓம் வாமதேவாய நம: ஓம் சத்யோஜாதாய நம:

### ஷடங்க மந்திரம்

ஓம் ஹ்ருதயாய நம: ஓம் சிரசே நம: ஓம் சிகாயை நம: ஓம் கவசாய நம: ஓம் நேத்ரத்திரயாய நம: ஓம் அஸ்த்ராய நம:

விபூதியை மூன்று ரேகைகளால் இட்டுக்கொள்கிறோமில்லையா? இம்மூன்றுக்கும் ஒன்பது தேவதைகள். 'அ' காரம், கார்ஹபத்யம், ருக் வேதம், பூலோகம், ரஜோ குணம், ஆத்மா, கிரியா சக்தி, பிராதஸ்ஸவனம், மகாதேவன் (இவை முதல் ரேகையின் தேவதைகள்.)

இரண்டாவது ரேகைக்கு 'உ' காரம். தஷிணாக்னி, ஆகாசம். யஜுர்வேதம் ஸத்வ குணம். மாத்யாந்ஸவனம, இச்சா சக்தி. அந்தராத்மா, மகேஸ்வரன் தேவதைகள்.

மூன்றாவது ரேகையின் தேவதைகள் 'ம' காரம். ஆஹவனீயம் பரமாத்மா. தமோகுணம், ஸுவர்க்கம், ஞானசக்தி, சாமவேதம், திருதீயஸவநம், சிவன்.

திரிபுண்ட்ர தாரணமே மாஹேஸ்வர விரதம் எனப்படும்.

## நாற்றம் அகற்றுகிறது

பசுஞ் சாணி ஒன்றே பிற நாற்றத்தைப் போக்கிதான் நாறு

பசும் சாணத்தினால் மெழுகப்பட்ட இடம் அணுவுலை இயக்கத்தால் எவ்வித ஆபத்தும் இல்லாமல் பாதுகாக்கப்படுகிறது என்று ரஷ்ய விஞ்ஞானிகள் கண்டுபிடித்திருக்கின்றனர்.

சாணியை சுட்டெரித்த சாம்பலுக்கு நாற்றத்தை அகற்றும் ஆற்றல் இன்னும் அதிகம். இதுவும் விஞ்ஞான ரீதியாகக் கண்டு பிடிக்கப்பட்டது.

## கிருமிகளைக் கொல்கிறது

விபூதி ஒரு சிறந்த கிருமி நாசினி. அவரைச் செடியில் பூச்சி விழுந்தால் சாம்பலைத் தூவுவார்கள்.

நெற்றியில் பூசும் விபூதி பிணி, சூன்யம், திருஷ்டி இவைகளை நீக்கும் வல்லமை கொண்டது.

''நீறில்லா நெற்றி பாழ்'' என்று கூறியிருக்கிறார் ஔவை பிராட்டி.

திருநீறு நெற்றியில் எப்போதும் இருக்கவேண்டும். காலையிலும், நண்பகலிலும், மாலையிலும், நீராடி முடிந்ததும், பூஜைக்கு முன்னும், நித்திரைக்கு முன்னும் திருநீறு தரிக்க வேண்டும்.

சிவ சந்நிதி முன்பும், ஓமத் தீ முன்பும், குருவின் முன்னிலையிலும், தூய்மையற்ற இடங்களிலும் திருநீறு அணிதலாகாது.

சந்நிதி, ஓமத்தீ, குருவின் முன்னிலை ஆகிய இடங்களில் திருநீற்றைப் பெற்றுக்கொண்டு சற்றுத் தள்ளி நின்று இட்டுக் கொள்ளவேண்டும்.

## ஞானம் ஏற்படும்

நெற்றியில் திருநீறு பூசுவதால் ஞான சக்தி ஏற்படும்.

உலகில் எல்லாப் பொருள்களும் தீயினால் அழிவுற்றால் பிடி சாம்பலாக மாறும். இந்த உடம்பு ஒருநாள் அழியக்கூடியதே. அப்படி அழிந்தால் சாம்பலாகும் அல்லது மண்ணோடு மண்ணாகும். இதை திருநீரான சாம்பல் நமக்கு நினைவூட்டுகிறது. நிலையாமையை உணர்ந்தால் நாம் அநேக கவலைகளிலிருந்து விடுபடுவோம் மேற்கொண்டு நல்ல காரியங்களையே செய்ய முற்படுவோம்.

## தயாரிக்கும் முறை

சுத்தமான பசுவின் சாணத்தை உருண்டை உருண்டையாகச் செய்து வெயிலில் உலர்த்த வேண்டும். அவ்வாறு உலர்ந்த உண்டைகளை மூடக்கூடிய அளவுக்கு உமியைக் குவித்து தீ மூட்ட வேண்டும். மூன்று அல்லது நான்கு தினங்கள் கழித்து அக்குவியலை நன்றாக நீறினால் உமியும் சாணி உண்டைகளும் சாம்பலாகி யிருக்கும். உமி சாம்பலை நீக்கி நீற்றிருக்கும் சாணி உண்டைகளை எடுத்து துணியினால் வடிகட்டி வைத்துக் கொள்ள வேண்டும். அதுவே விபூதி. திருநீறு தரித்து சிவபூசை செய்யாதவர் ஏன்? பிறந்தார்? என்கிறார் அதிவீர ராம பாண்டியர்.

சிவ கருமம் செய்யார் திருநீறு சாத்தார்
தவநிலையாஞ் சைவ நெறி சாரார்—அவனிதனில்
கான் பரந்த பச்சைக் களா நிழலைக் கை தொழார்
ஏன் பிறந்தார் மானிடராய் இன்று

# சைவ சித்தாந்தம் 9

''பொறுமை நலம் வாய்ந்தது. எல்லாச் சமயங்களையும் ஏற்று உடன்பட்டு அவ்வவற்றிற்கு உரிய நிலையில் படிமுறையே தன்பால் அவற்றிற்கெல்லாம பொதுவாய் தாயகமாக அமைத்து திகழ்வது சைவ சித்தாந்தம்'' (சித்தியார் 267.)

''தென்னிந்திய மக்களின் மிகச் சிறநத ரூபமான பெருவிளைவே சைவ சித்தாந்தம்'' என்று அறிஞர் ஜி. யூ போப் கூறியிருக்கிறார்.

(''The Saiva Siddanda system is the most elaborate influential and undoubtedly the most intrinsically valuable of all religions in India. This philosophy is the choicest products of the Dravidian intellects'' (G U Pope)

இது தமிழர்களின் சமுதாய வாழ்க்கை வளத்தின் செழிப்பினின்று மலர்ந்ததாகும்.

மெய்கண்டார் சிவஞான போதம் இயற்றியவர். இது செந்தமிழ் தத்துவ நூல். காணப்படும் பிரபஞ்சத்தைக் கொண்டே காணப்படாதப் பதிப் பொருளின் உண்மையை வற்புறுத்துகிறார்.

ஒன்று என்றது ஒன்றே காண் ஒன்றே பதி பசுவாம்
என்று என்ற நீ பாசத்தோடு
உளைகாண்; ஒன்று இன்றால், அக்கரங்கள் இன்றாம் அகர
உயிர் எனனும் இருக்கு

(அகர எழுத்து இல்லை என்றால் வேறு எழுத்து இல்லை போல பதிப்பொருள் இல்லையாகில் வேறு எந்த உயிரும் உலகமும் இயங்குதல் இயலாது.)

இறைவனின் அருளைப் பெற 16 பண்புகள் அவசியம். அவை உலகத்தோடு ஒட்டி வாழ்தல், எல்லோரிடமும் அன்பு காட்டல், எல்லோரிடம் இரக்கமுடைமை, சாஸ்திரங்கள் விதித்தப்படி நடத்தல், பெரியோர்க்கு பணிவிடை, எல்லோருடனும் இனிது பழகுதல், நற்குணம், ஐம்பொறி அடக்கல், உவகையோடு இயன்றன கொடுத்தல், மூத்தோரை வழிபடுதல், பணிவுடைமை, உண்மையே பேசுதல், பிறன் மனைவியை நாடாதிருத்தல், கெட்ட வழிகளில் செல்லாதிருத்தல், நல்லனவற்றை போற்றுதல், இறைவனை மறவாதிருத்தல்.

அருள் நந்தி சிவம் தன் சிவஞான சித்தியாரில்,

ஒழுக்கம் அன்பு அருள் ஆசாரம் உபசாரம் உறவு சீலம்
வழுக்கில்லாத தவம் தானங்கள் வந்தித்தல் வணங்கல்
வாய்மை அழுக்கிலாத்துறவு அடக்கம்
அறிவோடு அர்ச்சித்தல ஆதி
இழுக்கில்லா அறங்கள் ஆனல் இரங்குவான் பணி அறங்கள்

என்று பட்டியலே போட்டுத் தருகிருர்.

உமாபதி சிவம் 'திருவருட் பயன்' என்ற நூலை எழுதியிருக்கிருர். திருக்குறளில் இடம் பெருத 'வீட்டுப்பால்' என்ற பகுதியை விளக்குவதாக வெண்பாக்களால் இதை அமைத்துள்ளார்.

## சைவ சித்தாந்த சாஸ்திரங்கள்

இவை மெய்கண்ட நூல்கள் என்றும் வழங்கப்படும். இவை பதினன்கு.

திருவுந்தியார், திருக்களிற்றுப்படியார், சிவஞான போதம், சிவஞான சித்தியார், இருப்பா இருப்பஃது, உண்மை விளக்கம், சிவப்பிரகாசம், திருவருட்பயன், வினு வெண்பா, போற்றி பஃறொடை, உண்மை நெறி விளக்கம், கொடிக்கவி, நெஞ்சுவிடு தூது, சங்கற்ப நிராகரணம். இவை பரம்பரையாக உபதேசிக்கப்பட்டு உபதேச நூல்களாகப் புகழ் பெற்றவை.

சைவ சாஸ்திரங்களுக்கான முதல் நூல் திருமந்திரமேயாகும்.

திருவுந்தியார்:—இயற்றியவர் திருவியலூர் உய்ய வந்த தேவ நாயனர் (1147). கூறப்படும் பொருள் மன மொழிகளுக்கு அப்பாற்பட்ட முதல்வனே ஞானசிரியனுக மெய்யுணர்வை போதிப்பன். அது கேட்டல், சிந்தித்தல், தெளிதல், நிஷ்டை என்கிற நான்கு கிறத்தால் உணரப்படும். அவ்வாறு உணர்ந்தார் சிவமே யாவர்.

திருக்களிற்றுப்படியார்:— ஆளுடைய தேவ நாயனர் இயற்றியது. திருவுந்தியாரின் வழி நூல் (1177). இந்நூல் உபநிஷதம், பிரம்ம சூத்திரம், பகவத் கீதை என்ற மூன்றுமே முதன்மையான பிரமாண நூல்கள் என்கிறது. இறைவன் திருவடி கூடுதற்குரிய சாதனங்களை சிவ தன்மம், சிவ யோகம், சிவ ஞானம் என்று மூன்ருக வகைப்படுத்திக் கூறுகிறது

சிவஞான போதம்:—திருவெண்ணெய் நல்லூர் மெய்கண்ட தேவர் அருளிய ஞான நூல். 12 சூத்திரங்கள். அளவிற் சிறிதாயினும் அறிவு நூல்களின் முடிபெல்லாம் அகப்படுத்தத் தெரிவிப்பது. வேதாகமங்களில் முடிந்த முடிபை இந்நூல் ஒன்றுலே ஒருவர் உணர்தல் கூடும்.

சிவப்பிரகாசம் :—உமாபதி சிவம் இயற்றியது. சிவஞான போதத்தின் சார்பு நூல். மூதனூலாகிய சிவஞான போதத்திலும், வழி நூலான சிவஞான சித்தியிலும் எடுத்தோதாமல் குறிப்பாகக் கூறப்பட்ட பல பொருள்களை இது விளக்குகிறது. திருக்கயிலாய பரம்பரையில் வழிவந்த சந்தான குரவர்களுள் இன்னார் என்பது இதன் பாயிரத்தில் காணப்படுகிறது.

திருவருட் பயன் :—இது சைவ சித்தாந்த ஞான நெறியைத் தெள்ளத் தெளிய இனிது விளக்குவது. நூறு குறட்பாக்களால் ஆனது.

வினா வெண்பா :—பதின்மூன்று வெண்பாக்களால் ஆனது.

''காண்பானும் காட்டுவதும் காண்பதும் நீத்துண்மை
காண்பார்கள் தன்முத்தி காணார்கள் காண்பானும்
காட்டுவதுங் காண்பதுவும் தன் கடந்தைச் சம்பந்தன்
வாட்டு நெறி வாராதவர்''

என்னும் செய்யுள் சுத்தாத்வைத சித்தாந்த முத்தியியல்பை எடுத்துரைக்கின்றது. ஞானம், ஞேயம், ஞாதுரு எனப்படுத்துணர் வாருக்கு அனுபவ நிலைவரவில்லை. அவை முத்தி நிலையில் இல்லை எனபாரும் இன்புறு நிலையை எய்துவார் அல்லர் என்பது இதன் பொருள்.

போற்றிப் பஃறொடை :—உயிர்களுக்குத் திருவருள் தொன்று தொட்டுச் செய்து வரும் உபகாரங்களை நினைந்து போற்றுவதாக இந்நூல் விளங்குகிறது.

கொடிக் கவி :—தில்லையிலே கொடியேறும் பொருட்டுப் பாடப் பட்டது. ஞான தீக்ஷயின் பயனும், திருவைந்தெழுத்தின் ஓது முறைகளும் பொருளும் உரைப்பது.

நெஞ்சுவிடு தூது :—ஆசிரியர் உமாபதி சிவம் தன் ஞானாசிரியரான மறைஞான சம்பந்தரிடம் நெஞ்சை தூதாக அனுப்புவதாக இயற்றப்பட்டது.

உண்மை நெறி விளக்கம் :—ஞானச் செய்திகளை பத்து செயல்களாக விளக்குவது. தத்துவ உருவம், தத்துவக் காட்சி, தத்துவ சுத்தி, ஆன்ம உருவம், ஆன்மக் காட்சி, ஆன்ம சுத்தி, சிவ ரூபம், சிவ தரிசனம், சிவ யோகம், சிவ போகம், உமாபதி சிவம் இயற்றியது.

சங்கற்ப நிராகரணம் :—இதர சமயங்களை மாயா வாதம், ஐக்கிய வாதம், பாடாண வாதம், பேத வாதம், சிவசம வாதம், சக்கிரந்த வாதம், ஈசுவர அவிகார வாதம், நிமித்த காரண பரிணாம வாதம், சைவ வாதம் என முறைப்படுத்தி அச் சங்கற்பங்களை நிராகரிப்பது.

## திருக்குறளும், சைவ சித்தாந்தமும்

திருக்குறள் தமிழ் நாட்டின் தன்னிகரில்லாச் சிறப்பு நூல். அவ்வாறே சைவ சித்தாந்தம் என்ற தத்துவமும் தமிழ் நாட்டில் தோன்றிய தலை சிறந்த தத்துவக் கொள்கையாகும்.

திருக்குறளை சமய குரவர்களான அப்பர், சம்பந்தர், சுந்தரர், மாணிக்கவாசகர் தம் முடைய பாடல்களில் பாராட்டியிருப்பது போலவே சைவ சித்தாந்த ஆசிரியர்கள் அனைவரும் திருக்குறளின் சொற் தொடர்களையும், கருத்துக்களையும் தங்கள் நூல்களில் குறிப்பிட்டுப் போற்றியுள்ளனர்.

திருவள்ளுவரைப் பின்பற்றியே மெய்கண்டார் தன் சிவஞான போதத்தை இயற்றியுள்ளார்.

மெய்கண்டார் வழி வந்த அருள்நந்தி சிவாசாரியாரும் திருச்குறளை முழுதும் பின்பற்றி போற்றியிருத்தலை அவருடைய சிவஞான சித்தியாரில் காணலாம்.

இறைவனின் அருளைப் பெறுவதற்குரிய அறங்கள் இவை என்று சொல்லுமிடத்தில் திருக்குறளின் அறத்துப்பால் முழுவதையுமே சாரமாகப் பிழிந்து தொகுத்து சிவஞான சித்தியார் கூறுகிறது.

உமாபதி சிவம் திருவள்ளுவர் முறையைப் பின்பற்றி தம் நூலை பத்து அதிகாரங்களாக வகுத்துக்கொண்டு ஒவ்வொரு அதிகாரத்தையும் பத்து பத்து குறள்களால் அழகுற விளக்கியிருக்கிறார். இவர் தான் இயற்றிய 'நெஞ்சுவிடு தூது' நூலில் திருவள்ளுவரின் பெயரையே குறிப்பிட்டு பாராட்டியுள்ளார்.

## சிவாகமங்கள்

எப்படி வேதங்கள் அநாதியோ அதே மாதிரி ஆகமங்களும். வேதங்களின் முடிவு வேதாந்தம். அதுபோல ஆகமங்களின் முடிவு சித்தாந்தம். வேதத்தின் முடிவானப் பொருளை சொல்லும் சிவாகமம் தான் இந்த சித்தாந்தம்.

(முதல் பத்து சிவ பேதமான ஆகமங்கள்)

### ஆகமங்கள்—உபாகமங்கள்

1. காமிகம் :—வக்தாரம், பைரவோத்தரம், நாரசிம்மம். 3

2. யோக ஜாகமம் :—தாரம், வீணசி, கோத்தரம், ஆத்ம யோகம், ஸநதம, சந்ததி. 6

3. சித்தியாகமம் :—சுசிந்தியம், சுபகம், வாமம், பாபநாசம், பரோத்வம், அமிர்தம். 6

4. காரணாகமம் :—பாவனம், மாரணம், தௌர்க்கம், மாஹேந்திரம, பீம ஸம்ஹிதா, காரணம், வித்வேஷம். 7

5. அஜிதம் :—ப்ரபூதம், பரோத்பூதம், பார்வதி ஸம்ஹிதா பத்ம ஸம்ஹிதா. 4

6. தீப்தாகமம் :—அமேயம், அப்த்தம், ஆச்சாத்யம், அசங்கியம், அமிருதௌஜஸம், ஆனந்தம், மாதவோத்பூதம், அற்புதம், அக்ஷயம்.

7. சூக்ஷ்மம் :—உபகாமமும் சூக்ஷ்மம் என்ற ஒன்றே.

8. ஸஹஸ்ராகமம் :—அதீதம், மங்கலம், சுத்தம், அப்ரமேயம், ஜாதிபாக், பிரபுத்தம், விபுதம், ஹஸ்த்தம், அலங்காரம், சுபோதம். 10

9. அம்சுமான் :—வித்யா புராண தந்திரம், வாஸவம், நீல லோஹிதம், ப்ரகரணம், பூத தந்திரம், ஆத்மாலங்காரம், காச்யபம், கௌதம், ஐந்திரம், பிராம்மம், வாசிஷ்டம், ஈசானோத்தரம். 12

10. சுப்ரபேதம் :—சுப்ரபேதம்.

(ருத்ர பேதமாகமங்கள்)

11. விஜயம் :—உத்பவம், ஸௌம்யம், அகோரம், ம்ருத்யு நாசனம், கௌபேரம், மஹா கோரம், விமலம், விஜயம். 8

12. நிச்வாஸம் :—நிச்வாஸம், நிச்வாசேத்திரம், நிச்வாஸ ஸூகோதயம், நிச்வாஸ நயனம், நிச்வாஸ காரிகா, நிச்வாஸ கோரம், நிச்வாஸ குஹ்யம், மந்திர நிஸ்வாசம். 8

13. ஸ்வாயம்புவம் :—ப்ரஜாபதி மதம், பத்மம், நளினோத்பவம், ஆக்னேயம். 3

14. அனலம் :—ஆக்னேயம்.

15. வீரம் :—பிரஸ்தரம், புல்லம், அமலம், ப்ரபோதகம், அமோகம், மோகஸ்மயம், சகடம், சகடாதிகம், பத்ரம், விலேகனம், வீரம், ஹலம், போதகம். 13

16. ரௌரவம் :—காலாக்யம், கால தகனம், ரௌரவம், ரௌவரோத்தரம், மஹா காலமதம், ஐந்தரம். 6

17. மகுடம் :—மகுடம், மகுடோத்தரம். 2

18 விமலம் :—அனந்தம், போகம், ஆக்ராந்தம், வ்ருஷபிங்கம், வ்ருஷோதரம், வ்ருஷோத்பூதம், ரௌத்ரம், ஸூதந்தம், தாரணம், ஆரேவதம், அரிக்ராநதம், அஷ்டஹாஸம், பத்ரவிதம், அர்ச்சிதம், அலங்கிருதம், விமலம். 16

19. சந்திர ஞானம் :—ஸ்திரம், ஸ்தாணு, மஹாந்தம், வாருணம், நந்திகேஸ்வரம், ஏகபாத புராணம், சாங்கரம், நீலருத்ரம், சிவபத்ரம், கல்ப பேதம், ஸ்ரீமுகம், சிவஸாஸனம், சிவசேகரம், தேவிமதம். 14

20. முகபிம்பம் :—சதுர்முகம், ஸம்ஸ்தோயம், பிரதிபிம்பம், அயோகஜம், ஆத்மாலங்காரம், லாயவ்யம், தௌடிகம், துடிநீரசம், குட்டிமம், துலாயோகம், காலாத்யயம், மஹா சௌரம், பட்டசேகரம், நைர்ருதம், மஹா வித்யா. 15

21. ப்ரோத்கீதம் :—வாராஹம், கவசம், பாசபந்தம், பிங்களாமதம், அங்குசம், தண்டதரம், தனுர்த்தரம், சிவஞானம், விக்ஞானம், ஸ்ரீ காலஞானம், ஆயுர்வேதம், தனுர் வேதம், ஸர்பதம்ஷ்ட்ர, விபேதனம், கீதகம், பரதம், ஆதோத்யம். 16

22. லலிதம் :—லலிதம், லலிதோத்ரம், கௌமாரம். 3

23. ஸித்தம் :—ஸாரோத்தரம், ஔசனஸம், சாலாபேதம், சசிமண்டலம். 4

24. சந்தானம் :—லிங்காத்யக்ஷம், கராத்யக்ஷம், அமரேச் வரம், சங்கரம், அஸங்க்யம், அநிலம், தீவந்தம். 7

25. சர்வோக்தம் :—சிவ தர்மோத்தரம், வாயுப்ரோக்த்தம், திவ்யப்ரோக்தம், ஈசானம், சர்வோத்கீதம். 7

26. பராமேஸ்வரம் :—மதங்கம், யக்ஷிணீபத்மம், பாரமேஸ் வரம், புஷ்கரம், சுப்ரயோகாம், ஹம்ஸம், சாமான்யம். 7

27. கிரணம்.—காருடம், நைருதம், நீலம்ருக்ஷம், பானுகம், தேனுசம், ப்ரபுத்தம், புத்தம், காலம். 9

28. வாதுளம் :—வாதுளம், உத்தார வாதுளம், கால ஞானம், புரமோகிதம், சர்வம், தர்மாத்மகம், ச்ரேஷ்டம், நித்யம், சுத்தம், மஹாகனம், விச்வம், வித்வாத்மகம். 12

இந்த 28 ஆகமங்களும் சிவலிங்க ரூபமாக விருத்தாசலம் ஆலயத்தில் உள்ளன.

சிவபூஜை செய்தால் எல்லா நலன்களும் கிடைக்கும் என்பது ஆகமங்களின் முடிவு.

திருமாலின் பூஜையால் பிராஜாபி விருத்தி, சூரிய பூஜையால் கிரஹசாந்தி, இந்திர பூஜையால் மகிமை, சுப்பிரமணிய பூஜையால் குழந்தைகளுக்கு நன்மை, சாஸ்தாவின் பூஜையால் தன் காரியங் களில் சிரத்தை, மன்மதன் பூஜையால் அழகு, தேவி பூஜையால் ஜயம், சாமுண்டி பூஜையால் விரோதிகள் நசிப்பர், விக்னேஸ் வரர் பூஜையால் சர்வசித்தி, லக்ஷ்மியை பூஜை செய்வதால் வறுமை நீக்கம், சரஸ்வதி பூஜையால் வாக் வன்மை, சப்த மாதாக்களை பூஜிப்பதால் சர்வ சம்பந்துக்கள். இந்த எல்லோ ருடைய பூஜையாலும் எந்தெந்த பலன் கிடைக்கிறதோ அப் பலன்கள் யாவும் சிவ பூஜையால் கிடைக்கிறது. ஆதலால் சிவ பூஜையை எப்போதும் செய்ய வேண்டும் என்கிறது காமிகாகமம்.

இந்த 28 ஆகமங்களிலும் கூறப்பட்டதை எல்லாம் தொகுத்து சிவ பூஜாஸ்தவம் என்ற ஒரு நூல் உள்ளது. இதை இயற்றியவர் ஞான சம்பு சிவாச்சாரியார். நித்ய நைமித்திக காம்ய கர்மாக்களை செய்யவேண்டிய வரிசையையும் அதற்குரிய மந்திர தந்திர பாவனைகளையும் விளக்கமாக சிவாகம பத்ததி என்ற நூல் கூறுகிறது.

## திருமுறைகள

சைவ சமய நூல்களை இரு வகையாக பிரித்திருக்கின்றனர். ஸ்தோத்திரங்கள் (அன்பு நூல்கள்) பன்னிரண்டு. சாஸ்திர நூல்கள் பதினான்கு. ஸ்தோத்திர நூல்கள் 12-ம் பன்னிரண்டு திருமுறைகள்.

இவை :—திருஞானசம்பந்தர் அருளிச செய்த திருப்பதிகங்கள்-1, 2, 3, திருமுறைகள். திருநாவுக்கரசர் அருளிச் செய்த பண்வகை, திருநேரிசை, திருவிருத்தம், 4-ம் திருமுறை. அவர் அருளிய திருக்குறுந் தொகை, 5-ம் திருமுறை. அவரது திருத்தாண்டகங்கள், 6-ம் திருமுறை, சுந்தரர் அருளிய திருப்பதிகங்கள் 7-ம் திருமுறை.

(இவை ஏழும் சேர்ந்து அடங்கன் முறை எனவும், திருநெறித் தமிழ் எனவும் வழங்கும்) மாணிக்கவாசகர் அருளிய திருவாசகமும், திருக்கோவையாரும் 8-ம் திருமுறை.

திருமாளிகை தேவர் முதலிய ஒன்பதின்மர் அருளிய திருவிசைப்பா திருப்பல்லாண்டு 9-ம் திருமுறை.

திருமூலர் இயற்றிய திருமந்திரம் 10-ம் திருமுறை.

## திருமந்திரம்

திருமந்திரம் ஒரு ஆகம நூல் என்றும், ஒன்பது பழைய சிவாகம நூல்களை உள்ளத்திற்கொண்டே ஒன்பது தந்திரங்களாக வகுத்தனர் என்றும் கூறுவர்.

திருமூலர் வெளியிட்டுள்ள சில உண்மைகள் :

'நான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்'
'ஒன்றே குலமும் ஒருவனே தேவனும் நன்றே நினைமின்'
'ஆர்க்கும் இடுமின் அவரிவ ரென்னன் மின்'
'வேதாந்தமாவது வேட்கை ஒழித்திடல்'
'வல்ல பரிசால் உரைமின்கள் வாய்மையை'
'வெல்லும் அளவில் விடுமின் வெகுளியை'
'அகத்தில் கண் கொண்டு பார்ப்பதே ஆனந்தம்'
'பெரியாருடன் கூடல் பேரின்பமாமே'
'பற்றது பற்றிற் பரமனை பற்றுமின்'
'உள்ளம் பெருங்கோயில் ஊனுடம்பே ஆலயம்'
'அன்பே சிவம்'

திருமூலர் இயற்றிய நூலை திருமந்திர மாலை என்றும்; தமிழ் மூவாயிரம் என்றும் கூறியுள்ளனர். இது 3000 பாடல்கள் கொண்டது. இந்நூல் 9 தந்திரங்களாக வகுக்கப்பட்டுள்ளது.

முதல் தந்திரம் :—செல்வம், ))வை நிலையாமை, கொல்லாமை, புலாலுண்ணுமை.

இரண்டாம் தந்திரம் :—அஷ்ட வீரட்டம், இறைவனின் ஐந்தொழில்.

மூன்றும் தந்திரம் :—அஷ்டாங்க யோகம், அஷ்டமா சித்தி முதலியவை.

நான்காம் தந்திரம் :—மந்திர வகைகள், சக்கர வகைகள்.

ஐந்தாம் தந்திரம் :—சரியை, கிரியை, யோகம், ஞானம், சத்திநிபாதம்.

ஆறும் தந்திரம் :—சிவகுரு தரிசனம், திருவடிப்பேறு, திருநீறு, ஞானம், தவம், துறவு.

ஏழாம் தந்திரம்:—ஆறு ஆதாரங்கள், சிவபூஜை, குருபூஜை, அடியார் பெருமை.

எட்டாம் தந்திரம் :—உடல் அமைப்பு, அவஸ்தைகள், வாய்மை, பத்தி, முத்தி.

ஒன்பதாம் தந்திரம்:—இறைவன் திருநடனங்களின் உண்மை, ஐந்தெழுத்தின் சிறப்பு, சமாதி நிலையடைதல் முதலியன.

இத்திருமந்திரமே சமய நூல்களுக்கெல்லாம் தலைசிறந்த முதல் நூலாக அமைந்துள்ளது. பதினுன்கு சாஸ்திரங்களுக்கும் முற்பட்ட சித்தாந்த நூல். சித்தாந்தம் என்ற சொற்றொடரை முதலில் வழங்கியவரே திருமூலர் தான்.

திருமந்திரம் சாஸ்திர நூலாகவும் ஸ்தோத்திர நூலாகவும்

திருவாலவாயுடையார் (சிவபெருமான்), காரைக்காலம்மையார். ஐயடிகள் காடவர்கோன், நக்கீரர், கல்லாடர், கபிலர், பரணர், அதிராவடிகள், பட்டினத்துப் பிள்ளை, நம்பியாண்டார் நம்பி, இளம்பெருமாள் அடிகள் ஆகிய பன்னிருவர் இயற்றிய 40 பிரபந்தங்கள் 11-ம் திருமுறை.

சேக்கிழார் இயற்றிய பெரிய புராணம் (திருத்தொண்டர் புராணம்) 12-ம் திருமுறை. திருத்தொண்டத் தொகையின் மாபாடியம் (பாஷ்யம்) போன்று விளங்குவது இது. கி.பி. 3-ம் நூற்றுண்டு முதல் 9-ம் நூற்றுண்டு வரை உள்ள கால எல்லையில் தமிழ் நாட்டின சமயம், நாகரிகம், பண்பாடு, கலை முதலியவற்றை வரலாற்று முறையில் கற்றுணர வழி செய்யும் திருமுறைகளின் வரலாற்றையும் அவற்றின் வரலாறறையும் உள்ளவாறு உணர்வதற்கு இபபுராணம்

இன்றியமையாதது. இந்த பன்னிரண்டு திருமுறைகளே சிவநெறிக்கு மிக முக்கியமான பிரமாண இலக்கியங்கள் ஆகும்.

## திருக்குறள்

இன்ன சமயத்திற்காக இயற்றப்பட்ட நூல் என்று திருக்குறளை சொல்ல முடியாவிட்டாலும் திருக்குறளுக்கும் சைவ சமயத்திற்கும் நெருங்கிய தொடர்பு உண்டு.

அறுவகைச் சமயத்தோர்க்கும் அவ்வவர் பொருளாய், வேறும்
குறியது உடைத்தாய், வேதாக மங்களின் குறி இறந்து அங்கு
அறிவினில் அருளால் மன்னி அம்மையோடு அப்பன் ஆகி
செறிவொழியாது நின்ற திருக்குறள் சென்னி சேர்ப்பாம்

| சிவபெருமான் | திருக்குறள் |
|---|---|
| தனக்கு உவமை இல்லாதவர். | —திருக்குறளும் உவமையில்லாச் சிறப்புடையது. |
| அறுவகை சமயத்திற்கும் அவ்வவர் பொருளாயும் வேறும் விளங்குபவர். | —6 வகை சமயக் கொள்கைகளை கூறி அதற்கு அப்பாற்பட்டும் இருக்கிறது. |
| சிவபெருமான் நூல்களின் எல்லையைக் கடந்தவர். | —எல்லா நூல்களிலும் மேம்பாடு மிக்கது. |
| எல்லா உயிர்களுக்கும் அம்மையும் அப்பனும். | —திருக்குறளும் ஒருவகையில் அப்படி திகழ்கிறது. |

துறைமங்கலம் சிவப்பிரகாச ஸ்வாமிகள் திருக்குறள் அடிகளை மாதிரு பாதியனை சிவனின் அடிகளுக்கு ஒப்பிட்டுப் புகழ்கிறார்.

திருக்குறளின் முதல் வரியில் நான்கு சீ வரியில் மூன்று சீர். அதாவது ஒரு அடி நீளம். ஒரு அடி குறுகியது.

அர்த்தநாரீ மூர்த்தத்தில் சிவனின் வலப்பாக அடி (பாதம்) சிறிது நீண்டும், அம்பிகைக்கு சொந்தமான இடப்பாகம் சிறிது குறுகியும் இருக்கும். நான்கு சீர் இறைவனின் பாதம் போலவும், மூன்று சீர் அம்பிகையின் பாதம் போலவும் இருக்கின்றதாம். ஆகவே குறளின் உருவமே அர்த்தநாரீ உருவம என்கிறார் இவர்.

## சிவானந்தலஹரி

ஆதிசங்கரரின் ஸௌந்தரியலஹரி எவ்வளவு முக்கியத்துவம் வாய்ந்ததோ அவ்வளவு முக்யத்துவம் வாய்ந்தது சிவானந்தலஹரி. ஸௌந்தரியலகரியில் சக்தி தத்துவம் வெளிப்படையாகவும்,

சிவதத்துவம் உள்ளடங்கியும் இருக்கின்றது. சிவானந்த லகரியில் சிவதத்துவம் வெளிப்படையாகவும் சக்தி தத்துவம் உள்ளடங்கிய தாகவும் இருக்கிறது.

சிவம் என்னும் பேரின்பத்தில் பெருக்கென்பது சிவானந்த லகரியின் அர்த்தம். சிவ யோகம் என்கிற பேரின்ப வெள்ளத்தைக் குறித்து தாயுமானவர்.

காகமுறவு கலந்துண்ணக் கண்டீர்
அகண்டாகார சிவயோக மெனும் பேரின்ப வெள்ளம்
பொங்கித் ததும்பி பூரணமாய் ஏகவுருவாய் கிடக்குதையோ
இன்புற்றிட நாமினி யெடுத்த
தேகம் விழுமுன் புசிப்பதற்கு சேரவாரும் ஜகத்தீரே

என்று அழைக்கிறார்.

இந்த சிவானந்த வெள்ளத்தை அனுபவிக்க பல சாதனங்கள் இருப்பினும் பக்தி ஒன்றே அவற்றுள் சிறந்த சாதனமாகும். பக்தனுடைய மன நெகிழ்ச்சியே பக்தி எனப்படும். அன்பு என்பதும் இதுவே. இந்த அன்பே அருள் என்ற பெயரைப் பெறுகிறது. அந்த அருளே சிவமாகிறது.

இப் பக்தி, சிரவணம், கீர்த்தனம், ஸ்மரணம், பாதசேவனம், அர்ச்சனை, வந்தனம், தாஸபாவம், ஸக்கியம், ஆத்ம சமர்ப்பணம் என்று ஒன்பது வகைப்படும். இவ்வகைகள் சிவானந்தலகரியில் கூறப்பட்டுள்ளன. இவை தவிர பராபக்தியின் ஸ்வரூபம், சிவ பக்தர்களின் பெருமை, பக்தியின் பெருமை, பக்தியின் பல படிகள் இவை பற்றியும் குறிப்பிடப்பட்டுள்ளன.

ஆதிசங்கரரது ஹிருதயத்தினின்றும் பொங்கிப் பெருகி கரை புரண்டு வழிந்தோடும் அத்வைதாம்ருதமாக

சிவானந்தலஹரி, சாண்டில்ய ஸூத்திரம், நாரத பக்தி ஸூத்திரம் முதலிய பக்தி நூல்களின் ஸார ஸர்வமாகும். ஸ்ரீ வாசஸ்பதி மிஸ்ரர் கூறியபடி ''பிரசன்ன கம்பீரமாக அமைந்துள்ள இந்நூல் ஸ்தூல திருஷ்டிக்குப் பருக பக்தி ரஸத்தையூட்டும். ஆழ்ந்து நோக்கினல் வேத வேதாந்தங்களின் பரம தாத்பர்யமான அத்வைதாம்ருதத்தை வெளிப்படுத்தும்.

இதை ஸ்ரீ பு. ப. மாசிலாமணி முதலியார் என்பவர் செய்யுள் வடிவமாகவும, தாத்பர்ய வடிவமாகவும் தமிழ்படுத்தி தமிழுலகத்திற்கு அளித்துள்ளார். இதற்கு ஸ்ரீ சிதானந்த நாதர் (ஸ்ரீ ந. சுப்பிரமணிய அய்யர்) அருமையான முகவுரை எழுதியிருக்கிறார்.

இந்த கிரந்தத்தை ஆதிசங்கரர் ஸ்ரீசைலத்தில் மல்லிகார்ஜ்ஜுனர் சந்நிதியில் செய்ததாகக் கூறப்படுகிறது. மல்லிகார்ஜ்ஜுனரைப் பற்றியும் இரண்டு சுலோகங்கள் இதில் இடம் பெற்றுள்ளன.

# 10

# சிவனின் இருப்பிடங்கள்

வேற்றாகி விண்ணாகி நின்றாய் போற்றி
மீளாமே யாளென்னைக் கொண்டாய் போற்றி
ஊற்றாகி உள்ளே யொளித்தாய் போற்றி
யோவாத சத்தத் தொலியே போற்றி
ஆற்றாகி அங்கே அமர்ந்தாய் போற்றி
யாறங்க நால்வேத மானாய் போற்றி
காற்றாகி எங்கும் கலந்தாய் போற்றி
கயிலை மலையானே போற்றி, போற்றி
—அப்பர் (திருத்தாண்டகம்)

சிவபெருமான் இல்லாத இடம் ஏது? இருப்பினும் அவருக் கென்று சில சிறப்பான இடங்கள் உண்டு.

சிவபெருமான் என்றதுமே அவர் உறையுமிடமான கைலாசம் தான் நினைவிற்கு வரும். இயற்கையாக அமைந்த கோயில் அது பாண்டவர்கள், சுந்தரமூர்த்தி சுவாமிகள், சேரமான் பெருமாள் நாயனார் காரைக்காலம்மையார்* ஆகியவர்கள் கைலை சென்றதாக வரலாறுகள் இருக்கின்றன. அப்பர் கைலைக்குச் செல்ல விரும்பி முடியாமல் திருவையாற்றிலேயே இறைவன் அருளால் கைலை தரிசனம் பெற்றார்.

பூலோக கைலாயம், மேரு கைலாயம், தென் கைலாயம் முதலிய கைலைகள் பல. இவைகளுக்கெல்லாம் ஆதாரம் அப்ராக்ருத கைலாயம். அங்கு பரமசிவன் ஆனந்த மூர்த்தியாக அமர்ந்திருக் கிறார். கற்ப முடிவிலும் தான் முடிவுறாத இறைவனை தாங்குகிறது. தருமம் என்ற விடை (விருஷபம்) தரும ரூபம் வெளுத்திருந்த தாலும், வஸ்துக்களில் வலிவானதாலும் தருமத்தின் மேலல்லது ஈசன் ஏறான் என்று தக்கயாக பரணி (453) தாழிசை உரை கூறுகிறது.

* காரைக்காலம்மையார் கயிலைக்கு தலையால் நடந்து சென்றார் பேய்கள் தலைகீழாய் நடக்கவல்லவை என்று கலிங்கத்துப் பரணி கூறுகின்றது. சில யோகிகள் தலைகீழாய் நடக்க வல்லவர். இந்த நிலைக்கு ஒரு பொருளும் உண்டு. மனித உடம்பு உறுப்புகளில் சிறந்ததாகிய தலை மூவகை ஞானத்தில் பதி ஞானத்தைக குறிப்பதாகும். அதை ஆண்டவன் திருவடியில் சேர வைபபது பதி ஞானம் பெறுவதைக் குறிக்கும். தலையால் நடத்தல் நிவிர்த்தி மார்க்கத்தைக் குறிப்பதும் ஆகும.

ஆத்யாத்மிக அர்த்தப்படி மகா மேரு கிரியும், கயிலாய கிரியும் ஒன்றே. சுழிமுனை நாடியின் மத்தியில் அறிவு மயமாக அடங்கி இருக்கும் சிவபோதமே மகா மேரு. அவ்வாறே மனது என்னும் தடாகத்துக்கு மானஸரோவம் என்று பெயர். மகா மேரு, என்பது வட துருவத்தில் இருப்பதாகக் கூறப்படுகிறது. ஆகவே கயிலை வேறு, மேரு வேறு.

கயிலாயமும், மானஸரோவரும் சேர்த்து கௌரி சங்கர் எனப்படுகிறது. கயிலைக் கண்ணில் தென்பட்டவுடனேயே 'கயிலாசபதிக்கு ஜே' என்ற கோஷம் பிராயாணிகளின் வாயிலிருந்து வெளிப்படுகிறது. உலகில் இயற்கையாக அமைந்துள்ள அதிசயங்களில் கயிலையை ஒப்பற்றதெனலாம். இறைவனுடைய மகிமையை உணர வைக்கக்கூடிய இடம் இதைவிட வேறு எதுவும் இல்லை.

விசுவ லிங்கம் விண்ணுலகையும், மண்ணுலகையும் இணைப்பது போன்று ஆகாயத்தை அளாவிக்கொண்டு நிற்கிறது. அது சதாகாலம் உறைபனியால் மூடப்பட்டிருக்கிறது. இடையிடையே விண்ணினின்று வந்து குவியும் வெண் முகில் அவனது ஜடா பாரத்தில் தரிக்கப்படும் ஆகாய கங்கை போன்று காட்சி கொடுக்கிறது. அல்லும் பகலும் ஜோதிமயமாகத் திகழும் அச்சிகரம் வேளைக்கொரு வர்ணமாக மாறுகிறது. இரவில் மற்ற இடங்கள் எல்லாம் இருள் சூழ்ந்திருக்கும் போது வெள்ளை வெளேறென்று மின்னுகிறது. காலை சூரியன் கிரணத்தில் தங்கம் போல காட்சியளிக்கிறது. சூரியன் மேலே வந்ததும் வெள்ளி மலையாகக் காட்சி அளிக்கிறது.

மனிதனுடைய சரீரத்தில் மூலாதாரத்திலிருந்து ஆக்ஞை சக்கரம்வரை ஆறு ஆதாரங்கள் இருக்கின்றன. ஒவ்வொரு ஆதாரத்திலும் ஒவ்வொரு விதமாக யோகி ஈசுவர தரிசனம் செய்கிறான். இந்த ஆறு சக்கிரங்களையும் கடந்து உச்சந்தலையில் சகஸ்ராரம் என்னும் சக்கிரத்துக்குக் குண்டலினி சக்தி எழுந்தருளும்போது யோகியானவன் பரம்பொருளோடு லயித்தது முக்தியடைந்து விடுகிறான். இத்தத்துவம் இப்பாரத புண்ணிய பூமியில் இயற்கையாக அமைந்திருக்கிறது.

தென் கோடியில் கன்னியாகுமரி மூலாதார ஸ்தானம். அங்கிருந்து வடக்கு நோக்கிப் போகும்போது இடைகலை, பிங்கலை என்னும் இரண்டு நாடிகளுக்கிடையில் யோக சக்கிரங்கள் போன்ற முக்கியமான ஸ்தானங்களில் சிவ ஸ்தலமும், விஷ்ணு ஸ்தலமும் பக்கம் பக்கமாக இருந்துக்கொண்டு ஒரே கருத்தை விளக்கு

முதலில் மதுரை சுந்தரேஸ்வரர், அழகர்.
இரண்டாவது :—நடராஜர், ரங்கராஜர்.
மூன்றாவது :—காளஹஸ்தி, திருப்பதி.

—காசியும், பிருந்தாவனமும்.

ஐந்தாவது :—கேதார்நாத்தும், பத்ரிநாத்தும்.

ஆறுவது :—இமய பர்வதம்.

திருக்கயிலாயகிரியை ஏழாவது ஸ்தானமான சகஸ்ராரத்துடன் ஒப்பிடலாம்.

''யோகியர் போகியர் இருவரும் இரவு வேளையில் தத்தம் வேலையின் பொருட்டு விழித்திருப்பர் என்று சொல்லப்படுகிறது. யோக சாதனத்தில் கொஞ்சமாவது இச்சையுள்ளவர்கள் இமயமலைக்குச் சென்று இரவில் தியானம் செய்ய முயல்வார்களேயானால் இடத்தால் ஏற்படும் பலன் யாது என்பது உள்ளங்கை நெல்லிக்கனிபோல அவர்களுக்கு விளங்கும்'' என்று இமயமலை யாத்திரை சென்றுவந்த சுவாமி சித்பவானந்தர் தன் 'திருகயிலாய யாத்திரை' புத்தகத்தில் குறிப்பிட்டிருக்கிறார்.

அவர் கூறுவதாவது: ''இமயமலை முழுவதும் சிவபெருமானின் வடிவம் என்பது பரம உண்மை. இராக்காலத்தில் அங்கு சாந்தம் அரசாள்கிறது. அயர்ந்து தூங்கும்போது ஏற்படும் சாந்தத்தைப் போன்றதில்லை அது. பூரண விழிப்போடு கூடியது. தென்படுகிற யாவும் சமாதியில் நிலைத்திருப்பது போலத் தோன்றுகின்றன. சரம், அசரம், சேதனம், அசேதனம் என்னும் பேதம் அங்கு அடிபட்டுப் போகிறது. காலத்தின் அளவைக்கு அங்கு இடமில்லை.

''இமயமலையிலுள்ள ஒவ்வொரு நதிக்கும் கங்கை என்றே பெயர். கௌரி கங்கை, காளி கங்கை என்றெல்லாம் அங்கு பெயர்கள்.

கயிலங்கிரியல் மனிதருல் கட்டப்பட்ட கோயில் எதுவும் இல்லை. ஆனல் கோவில்களுக்கெல்லாம் ஒரு மாடலாக அது இயற்கையாகவே அமைந்திருக்கிறது. தென் முகமாக கைலாசமலை இந்தியாவைப் பார்த்துக்கொண்டிருக்கிறது. அதன் சுற்றளவு 29 மைல். பிரகாரம் போன்ற மலைச் சுவர் செங்குத்தாக நிற்கின்றது. சில இடங்களில் வெறும் சுவராகவும், சில இடங்களில் சித்திரங்கள் அமைக்கப்பட்டுள்ளது போலும் காணப்படுகிறது.

பிராகாரத்தின் மீது ஒரு பெரிய மேடை சுவர் ஆயிரம் அடி உயரத்திற்கு செங்குத்தாக இருப்பதால் அங்கு யாரும் செல்ல முடியாது. அம் மேடையின் மீது நூற்றுக் கணக்கான சிறு மலைகள் கோபுரம் போல அமைந்துள்ளன. அவைகளில் சதுரமாக இருப்பவை, வட்டவடிவமாக இருப்பவை முக்கோணமாக இருப்பவை, தூண் போன்றிருப்பவை இப்படி பல விதமான ரூபங்களில் காணப்படுகின்றன. இந்தியாவின் தென் முனையிலிருந்து இமயம் வரை எத்தனை விதமான ஆலய கோபுரங்கள் உண்டோ அத்தனைக்கும் மாடல்கள் கயிலையில் உள்ளன. மிக உயரமான சிகரம் (22980 அடி) விசுவலிங்கம் என்று பெயர். இதன் பக்கத்தில் கூட யாராலும் செல்ல முடியாது.

இறைவனுடைய இடது பாகம் பேர்பாதி அம்பிகைக்கு அளிக்கப்பட்டது என்பது ஐதீகம். இயல்பாகவே அமைந்துள்ளது. விராட் லிங்கத்தின் இடது பக்கம் கௌரி குளம் உள்ளது.

கயிலையிலிருந்து 40 மைலில் மானசரோவர் என்ற தடாகம் உள்ளது. இதன் சுற்றளவு 56 மைல் சமசதுரமாக இருக்கிறது. இது பச்சை நிறமாக இருக்கிறது. 50 அடி ஆழத்திலுள்ள கற்கள் தெளிவாகத் தெரிகின்றன.

இக்கயிலையின் பெருமையை ஸ்ரீ சித்பவானந்தர் பின்வருமாறு குறிப்பிடுகிறார்:

''தவத்தின் உட்பொருள் சயிலையில் நன்கு விளக்கப்படுகிறது. மனது உருகும் தன்மையாகும்போது அது தவ நிலையில் இருப்பதாகக் கூறப்படுகிறது. தவத்தின் வாயிலாக மனது மாறுகிறது. புதிய வல்லமையும் அதற்கு உண்டாகிறது.

அமர்நாத், கேதார்நாத், பத்ரிநாத் முதலிய க்ஷேத்திரங்கள் இமயத்தில் உள்ளன. எந்த யாத்ரிகர்களும் கேதாரநாதரை தரிசிக்காமல் பத்ரி யாத்திரை போய் வந்தால் அது பலனற்றதாகும். கேதாரநாதத்தின் ஆலயத்தில் திரௌபதி பஞ்சபாண்டவர்கள் இருக்கின்றனர்.

இமயமலைக்கு அடுத்தபடியாக சிவபெருமானுக்கு மிகப் பிரியமான இடம் வாரணாசி. அவருக்கு ஸ்மசானம் என்றால் பிடிக்கும். மயான ருத்ரனல்லவா? காசி க்ஷேத்திரமே ஒரு மயான பூமி. இதற்கு ருத்ர பூமி என்று பெயர்.

சிவபெருமான் இங்கு நிலைத்து இருப்பத க்ஷேத்திரம் என்று பெயர். இங்கு இறப்பவர்களின் காதில் தாரக நாமத்தை சிவபெருமான் உபதேசிக்கிறாராம். பிரளய காலத்திலும் காசி அழிவதில்லையாம். இந்நகரமே சூலாயுத அமைப்பில் உள்ளது.

நள்ளிரவில் சிவபெருமான் காசியில் நர்த்தனம் செய்கிறார் என்றும், அப்போதுதான் தேவர்கள் ஸ்நானம் செய்ய வருகிறார்கள் என்றும் புராணங்கள் கூறுகின்றன.

ஆதிசங்கரர் தன் குருகுல வாசத்தை முடித்துக்கொண்டு இங்கு வந்தபோது எங்கு பார்த்தாலும் லிங்கமாக இருப்பதைக் கண்டு இம்மண்ணில் கால் வைக்கக் கூசினாராம். காசியில் இடறி விழுந்தால் லிங்கங்கள் மேல்தான் விழவேண்டும் என்று சொல்லும் அளவுக்கு லிங்கங்கள் இருந்தாலும் மிகப் பிரதானமான லிங்கம் விசுவநாதர் தான். ஆதிசங்கரர் தன் திருக்கரங்களாலே பிரதிஷ்டை செய்த லிங்கம் இது. இது ஜோதிர் லிங்கம்.

ராமேஸ்வரத்†திலுள்ள ராமர் பூஜித்த ராமநாதர் இந்த பன்னிரண்டு ஜ்யோதிர் லிங்களில் ஒன்று.

மதுரை‡ சிவனுக்குப் பிரியமான இடங்களில் ஒன்று. மயான ருத்ரனாக இருந்தவர் கலியாண சுந்தரனாகி மீனாக்ஷியை மணந்து அவர் கொடுத்த ராஜ்யத்தைப் பரிபாலித்து 64 திருவிளையாடல்கள் நடத்தி தமிழ் வளர்ந்தவர் அவர். சுந்தரேஸ்வரர் என்ற பெயரில் விளங்குகிறார்.

## பஞ்சபூத ஸ்தலங்கள்

''அஞ்சுகல்லால் ஒரு கோட்டை; அந்த ஆகாசக் கோட்டைக்கு ஒன்பது வாசல்'' என்ற பாடலைக் கேட்டிருக்கிறோம். கிடைத்தற்கரிய இம்மானிட சரீரமே பஞ்ச பூதங்களின் சேர்க்கையினால் உண்டானது என்பதே அப்பாடலின் கருத்து.

நிலம் (பிருத்வி) நீர் (அப்பு) நெருப்பு (தேயு) காற்று (வாயு) வானம் (ஆகாசம்) என்ற ஐந்தும் சேராத பொருள் ஒன்றும் ஜகத்தில் இல்லை என்பது தத்துவ சாஸ்திரிகள் கண்ட உண்மை.

இதை நன்கு அறிந்த நம் முன்னோர்கள் பஞ்ச பூதங்களில் ஒவ்வொன்றும் பணியத்தக்கவை என்ற கொள்கையுடன் ஐந்து தலங்களை பஞ்சலிங்கத் தலங்கள் என்ற பெயரால் வழிபட வைத்திருக்கிறார்கள்.

பிருதிவி தலம் :—காஞ்சிபுரம். இங்குள்ள ஏகாம்பரேஸ்வரர் லிங்கம் காமாக்ஷி அம்பிகையின் கரத்தால் மணலில் பிடித்து வைத்து பூஜை செய்யப்பட்டதாகும். இதை நிலமாகப் போற்றி வணங்குகிறோம்,

மாமரத்தினடியில் அம்பிகையை ஈசனுடன் பிராகாரத்தில் காணலாம். நான்கு வேதங்களும் நான்கு பெரிய கிளைகளாக

அப்புத் தலம் :—திருவானைக்காவல். இங்கு ஜம்புகேஸ்வரர் கோவில் கொண்டுள்ள கர்ப்ப ஸ்தலத்தில் எப்போதும் ஜலம் இருந்துக்கொண்டே இருக்கும். அடிக்கடி தண்ணீரை இறைத்து விட்டுத்தான் பூஜை செய்யவேண்டும். இதை நீராகப் போற்றி வணங்குகிறோம்.

தேயுத் தலம் :—திருவண்ணாமலை. இம்மலையையே ஜோதிர் லிங்கமாக வணங்குகிறோம். கார்த்திகை தீப தரிசனம் இம்மலையே அக்னி ஸ்வரூம் என்று காட்டுகிறது.

---

† காசி, ராமேஸ்வரம் பற்றி முழு விவரங்களை பிரதிபாவின் காசி, கங்கா, சேது யாத்திரை புத்தகத்தில் காணலாம்.

‡ பிரதிபாவின் 'மீனாக்ஷி திருவிளையாடல்' புத்தகத்தில் மதுரை பற்றிய முழு விவரமும் காணலாம்.

வாயுத் தலம் :—காளஹஸ்தி. இத்தலத்தைக் காற்றுக் கோயிலாகக் கொண்டாடுகிறோம். இங்கே கர்ப்பக் கிரகத்திலுள்ள தூண்டா மணி விளக்கின் தீப ஜோதி எப்போதும் அசைந்து ஆடிக்கொண்டே இருக்கிறது. இதை ஞானிகள் குண்டலினி சக்தியின் நடனம் என்று கூறுகிறார்கள்.

ஆகாசம் :—சிதம்பரம். முறையில் கடினமாகிய மண்ணில் ஆரம்பித்து, பிறகு முறையே நீர், நெருப்பு, காற்று என்ற ஸ்வரூபத்தின் மூலம் பக்தியை உண்டாக்கி பக்திப் பழக்கம் வந்த பின் சூன்யத்தில் ஸ்வரூபத்தைக் காணும்படி போதிப்பது. பரந்த வெளியை தரிசனம் செய்து வைக்கிறார்கள்.

## பஞ்சலிங்க ஸ்தலப் பாடல்கள்

பஞ்சபூத க்ஷேத்திரங்கள் பற்றி ஸ்ரீ முத்துஸ்வாமி தீக்ஷிதர் பாடல்கள் பாடியிருக்கிறார்.

காஞ்சியிலுள்ள பிருதிவீ லிங்கத்தைக் குறித்து 'பைரவி' ராகத்தில்,

சிந்தயமா கந்த மூல கந்தம் சேத ஸ்ரீ ஸோமாஸ்காதம்
ஸந்ததம் அகண்ட சச்சிதானந்தம் அந்தகசுதனம்,
குந்தரதனம்

(எம்பெருமான் எங்கும் நிறைந்தவராகவும், மங்களத்தைக் கொடுக்கக் கூடியவராயுமிருக்கிறார்.)

உத்துங்க கமனீய வருஷ துரங்கம் பைரவி பிரசங்கம்
குரு குகானந்தரங்கம் பிருத்வி லிங்கம்

(பைரவி என்ற பெயர் கொண்ட அம்பிகையால் தோத்தரிக்கப்பட்டவர். பைரவி ராகத்தில் உன்னைப்பற்றி பாடுகிறேன் என்பது மற்றொரு பொருள்.)

அப்பு லிங்கமான ஆனைக்கா ஈசனைப்பற்றி யமுனா கல்யாணி ராகத்தில் பாடியிருக்கிறார்.

ஜம்பூபதே மாம்பாஹி நிஜானந்தாம்ருதம் போதம் தேஹி

(ஜம்பூ க்ஷேத்திரத்திற்குப் பதியாக விளங்குகிறவரே, உம்மை வணங்குகிறேன். அழிவில்லாத ஆனந்தத்தைத் தந்திடுவீர்.)

பஞ்சபூத பிரபஞ்ச ப்ரபோ பாவத ஜாங்ராரீத்த
[அப்புலிங்கவிபோ

(பர்வதராஜனின் பெண் பார்வதி தேவியால் தோத்தரிக்கப்பட்ட அப்பு லிங்கம்.)

அம்புதி காவேரி கங்கா யமுனா
கம்பு கண்ட்ய அகிலாண்டேசுவரீ ரமண

(யமுனு கல்யாணி என்ற ராகத் பெயரையும் பெயர் அகிலாண்டேச்வரி என்பதையும் குறிப்பிடுகிருர்.)

அருணுசலத்திலுள்ள தேயுலிங்க ஸ்வரூபத்தை சாரங்கா ராகத்தில்,

அருணுசல நாதம் ஸ்வாமி
அநிசமப்த சாம்பா சமேதம்
விபசோத்தம விசேஷாந்தர்ங்கம்
விரகுருகுஹ தாரப்ர சங்கம்
ஸ்வப்ரதீப மௌளி வித்ருத கங்கம்
ஸ்வப்பிரகாச ஜிதசோமாக்னி பதங்கம்

(சூரியன், அக்னி, முதலியவர்களுக்கு தேஜஸ் அல்லது 'யைத் தருகிற தேஜோமயமானவர்.)

ஸ்மரநாத் கைவல்ய ப்ரத சரணுரவிந்தம்
தருணுதத்ய கோடி சம்காச சித்தாந்தம்

(அருணுசலம் நினைத்த மாத்திரத்தில் முக்தியை அளிக்க .)

அப்ராக்ருத தேஜோமய லிங்கம்
அத்யத்புத கரக்ருத சாரங்கம்

(பார்ப்பதற்கு அக்கையில் மானை வைத்திருப்பவர் சாரங்கம் என்ருல் மான். ராகத்தின் பெயருமாகிறது.)

வாயுலிங்கமான சீகாளத்தி ஈசனை
ஸ்ரீ காளஹஸ்தீ ச்ருத ஜனுவன சமீரா கார
மாடம்பாஹி ராஜமௌளே

என்று உசேனி ராகத்தில் பாடியிருக்கிருர்.

பாகாரி விதிஹரீப் பிராணமய கோசாநிலாகாச பூமி
ஸ்விலாக்னிப் பிரகாச சிவ

(இந்திரன், பிரும்மா, விஷ்ணு, ஆகாசம், பூமி, ஜலம், அக்னி இவைகளுக்கும் பிராணமய கோசத்திற்கும் அதிபதியான வாயுவுக்கும் ஆதாரமாக உள்ளவர் என்றும் இது வாயு லிங்கத் தலமென்றும் விளங்குகிறது. கோசேனி என்பது உசேனி ராகத்தைக் குறிப்பிடுகிறது.

ஞானப் பிரஸூனும்பிகாபதே பக்தாபிமான தக்ஷிண
கைலாஸா வாஸாபீஷ்டதான சதுர கராப்ஜ

அம்பிகையின் பெயர் ஞானப் பூங்கோதை என்றும், இத்தலத்தை தக்ஷிண கைலாயம் என்று கூறுகிருர்.

கடைசியாக கீர்த்தனத்திலும் ஆகாச லிங்கத்தைக் குறித்து

ஆனந்த நடன ப்ரகாசம் சித்சபேசம்
ஆச்ரயாமி சிவகாம வல்லீசம்

என்று கேதார ராகத்தில் பாடுகிறார்.

பானு கோடி கோடி ஸம்காசம்
பக்தி முக்தி ப்ரத தகராகாசம்

தகராகாசம் என்றதில் வேதத்லதை தகர வித்தை என்கிறார். ஆதலால் ஆகாச லிங்கத்தைக் குறிப்பிடுகிறது.

சீதாம்சு கங்காதரம் நீலகந்தாரம்
ஸ்ரீ கேதாராதி க்ஷேத்ராதாரம்

கேதாராதி க்ஷேத்திரங்களுக்கு ஆதாரம் கேதார ராகத்தையும் குறிப்பிடுகிறது.

நாயன்மார்கள் பதிகங்களால் சிறப்பிக்கப்பட்ட திருத் தலங்கள் இரு நூற்றுக்கும் அதிகமாயிருந்தாலும் பாடல் பெறாத எவ்வளவோ சிவத்தலங்கள் இந் நாட்டில் பல பகுதிகள் உள்ளன. அரியும் சிவனும் ஒன்று என்பதையறிநது திருமாலுக்கும் சிவபெருமானுக்கும் அடுத்தடுத்து ஆலயங்களை எழுப்பி வழிபட்டு வந்திருக்கிறார்கள் நம் முன்னோர்கள்.

தமிழ் நாட்டில் அஷ்ட வீரட்ட ஸ்தலங்கள், சப்த ஸ்தானத் தலங்கள், சப்த விடங்கத் தலங்கள், பஞ்ச சபைகள் அவசியம் குறிப்பிட வேண்டியவை.

## அஷ்ட வீரட்டத் தலங்கள்

பூமன் சிரம் கண்டி, அந்தகன் கோவல் புரம் அதிகை
மாமன் பறியல் சலந்தரன் விற்குடி மா வழுவூர்
காமன் குறுக்கை யமன் கடவூர் இக் காசினியில்
தேமன்னு கொன்றையும் திங்களும் சூடி தன் சேவகமே

இப்பழம் பாடல் அஷ்ட வீரட்டானம் என்ற எட்டு க்ஷேத்திரங்களையும் சேர்த்து குறிப்பிடுகிறது.

கண்டியூர் ;—தஞ்சையிலிருந்து திருவாரூர் செல்லும் பாதையில் உள்ளது. பிரும்மாவின் தலை ஒன்றைக்கிள்ளி தண்டித்திருக்கிறார் சிவபெருமான்.

ஆதியில் பிரும்மாவுக்கு ஐந்து தலைகள். உமாதேவி உள்பட பலரும் ஆள் மாறாட்டம் செய்துகொண்டனர் என்பதற்காகவே ஒரு தலையைக் கொய்து விட்டானும் பரமன். இது ஈசனின் வீரச் செயலாக இல்லை. ஆகவே இதை ஏற்பதற்கில்லை. பிரும்மன் காம வசப்பட்டான் என்றும், படைக்கும் தந்தையின் ஸ்தான முள்ளவன் மனதில் மாசுபடக் கூடாதென்பதைக் கண்டிக்கவே

தண்டிக்கப்பட்டார் என்பது மற்றொரு வரலாறு. படைப்பு என்று ஏற்படும்போது அதில் காமமும் சேர்ந்து விடுகிறது. இது நம்மவர்களுக்குப் பொருந்தும். தேவ சிருஷ்டித் தொழிலுக்குப் பொருந்தாது.

திருக்கோவலூர் :—விழுப்புரத்திற்கும் திருவண்ணாமலைக்கு மிடையிலுள்ளது. ஒரு காலத்தில் ஒரு அரசின் தலைநகரமாகவும் இருந்திருக்கிறது.

இறைவன் சூரிய சந்திரர்களைக் கண்களாகப் பெற்றவர். அம்பிகை விளையாட்டாக அவர் கண்களை பொத்தியபோது இருள் ஏற்பட்டு அந்தகாரன் என்ற அசுரனாயிற்று. அந்த அசுரனைக் கொன்ற இடமே இது.

இருளில் பிறந்த அந்தகனைக் கொன்ற இறைவன் நம் அக இருளையும் நீக்குவான் என்பதை உணர்த்துவது போல "இருளற நோக்க மாட்டக் கொத்தையேன் செய்வதென்னே?" என்று கேட்கிறார் அப்பர் சுவாமிகள்.

திருவதிகை :—இது கடலூருக்கு அருகில் உள்ளது. இங்கு உறையும் இறைவன் திரிபுர தகனம் செய்தவன்.

தாரகாக்ஷன், கமலாக்ஷன், வித்யுன்மாலி என்ற அசுரர்கள் கோட்டைகளாக உருவெடுத்து நினைத்த இடங்களுக்குச் சென்று அப்படியே அமர்ந்து நாடு நகரங்களைக் கூண்டோடு அழித்து வந்தார்கள்.

இறைவன் சந்திர சூரியரை சக்கரமாகவும், பூமியைத் தேர்த் தட்டாகவும், மேரு மலையை வில்லாகவும், வாசுகியை நாணாகவும் வாசுதேவனை அம்பாகவும், பிரும்மனை சாரதியாகவும் கொண்டு படாடோபமாக வந்தார். சங்கல்ப மாத்திரத்தால் எதையும் சாதிக்கவல்ல பரம் பொருளுக்கு இத்தனை ஆடம்பரம் தேவையில்லைதான். தன்னுடைய படைப்புகளுடன் விளையாடிய கோலாகலமே இவ்வளவு யுத்த சன்னத்தமும் என்கிறார். புஷ்பதத்தர். இத்தனை தடபுடலுடன் வந்தும் அவர் ஆயுதத்தைப் பயன்படுத்தாது சிரித்தே அத்திரிபுர அசுரர்களையும் பஸ்மமாகி விட்டார்.

திரிபுரம் தகனம் செய்தவர், அவ்வசுரர்கள் இருவரை உயிர்ப்பித்து தன் துவாரபாலகர்களாகவும், மூன்றாமவனை குடமுழவ வாத்யம் வாசிப்பவனாகவும் நியமித்துக் கொண்டிருக்கிறார். திருநாவுக்கரசர் பிறந்த இடம் இது.

திருப்பறியலூர் :—மாயூரம் தாலூக்காவில் செம்பொனார் கோவிலுக்கு அருகிலுள்ளது. தக்ஷன் தலையைப் பறித்த இடமாதலால் பறியலூர்.

உமையை தன் மகளாகவும், சிவபெருமானைத் தன் மருமகனாகப் பெற்றிருந்தும் தக்ஷன் அந்த அருமை பெருமைகளை உணரவில்லை. அவன் செய்த வேள்விக்கு பெண்ணையும்

மாப்பிள்ளையையும் அழைக்கவில்லை. பெண் உள்ளத்தின் பாசம் காரணமாக அழைப்பின்றியே வந்தாள் உமை. தன் கணவனை நீக்கியும் பழித்தும் தக்ஷன் செய்யும் யாகத்தைக் காணப் பொருது ஹோம குண்டத்திலேய்ய வீழ்ந்துத் தன் உடலை நீத்தாள். சிவபெருமான் கோபம் காரணமாக அவர் சடையிலிருந்து உதித்த வீரபத்திரன் தக்ஷன் தலையை வெட்டினான். இறைவன் கருணை காட்டி ஆட்டுத் தலையைப் பொருத்தி தக்ஷனை உயிர்பித்தார்.

ஈசுவராம்சமான வீரபத்ரரே இங்கு சம்ஹார மூர்த்தியாக உருப்பெற்றிருக்கிறார்.

திருவிற்குடி:—தன் சினத்தையே இறைவன் சம்ஹரித்த தலம் இது.

இந்திரன் மிக கர்வமடைந்தான் என்பதை உணர்ந்த சிவபெருமான் அவன் கைலைக்கு வரும்போது தானே துவாரபாலக ரூபம் எடுத்து அவன் முன் நின்றார். ஈசனைப் பார்க்க முடியுமா? என்று இந்திரன் கேட்டபோது துவாரபாலகர் வாய்திறக்கவில்லை. கோபமுண்ட இந்திரன் அவனை வஜ்ராயுதத்தால் தாக்க அந்த ஆயுதம் பொடிப் பொடியாக சிதறியது. இறைவன் கோபா வேசத்துடன் தன் சுய ரூபத்துடன் நின்றார். இந்திரன் தன் தவறை உணர்ந்து மன்னிப்பு கேட்கவே இறைவன் உள்ளம் குளிர்ந்தது.

எனினும் இறைவன் கோபஜ்வாலை கடலில் விழுந்து ஒரு குழந்தையாயிற்று. ஜலம் தரித்ததால் ஜலந்தரன் எனப் பெயர் பெற்றது அக் குழந்தை. இவனே பின் கொடும் அசுரனாக இறைவனின் சக்கிரத்தால் கொல்லப்படுகிறான். திருவிற்குடியில் சங்கரமூர்த்தி சங்கார மூர்த்தியாக காணப்படுகிறார்.

திருக்குறுக்கை :—அஷ்ட வீரட்டானத் தலங்களில் ஒன்று காமதகனம் நடைபெற்ற திருக்குறுக்கை. மாயூரத்திலிருந்து மணல் மேடு போகும் பஸ் வழியில் கொண்டல் மதகடியிலிருநது மேற்கே 2 மைலில் உள்ளது. ஸ்தல விருட்சம் கடுக்காய் மரம். காம தகனபுரம் என்றும் கடுகவனம் என்றும் இத்தலத்திற்குப் பெயர்.

இறைவர் வீரட்டேசுவரர், இறைவி ஞானம்பிகை, மன்மதன், ரதி இவர்களின் அழகான உருவங்களும் இக்கோயிலிலுள்ளது. இங்கேயுள்ள சபை காமாங்க நாசினி சபை பக்கத்திலுள்ள திருமணஞ் சேரியில் இறைவனின் திருமணத் திருக்கோலம்.

மன்மதன் மலர் பாணம் எய்யப் போவதை தேவர்கள் கூடி நின்று பார்த்த ஊர் தேவனூர். மலர் பாணம் எய்வது என்று கங்கணம் கட்டிய ஊர் கங்கணம்புதூர். மன்மதன் வில் விளைத்த இடம் வில்லியனூர். காலை வளைத்து குறி பார்த்த இடம் கால் வளைமேடு. பஞ்சபாணங்களை பிரயோகித்த இடம் பஞ்சபாண நல்லூர். தேவர்கள் இறைவனை பிரார்த்தித்த இடம் தோத்திர

மங்கலம். இந்த ஊர்கள் எல்லாம் அருகிலேயே உள்ளன. ஊர் குளத்திலிருந்து மண் எடுத்தால் அது சாம்பல் போல வெள்ளையாக இருக்கிறது.

வழுவூர்:—மாயூரத்திற்குத் தெற்கே ஏழு மைலிலுள்ளது இது. இங்குள்ள ஞான சபையில் நவ தாண்டவங்களில் ஒன்றாக திருமேனியை வளைத்து உள்ளங்கால் தெரியும்படி குழைந்து நெளிந்து ஆடும் கஜஸம்ஹார மூர்த்தியை தரிசிக்கலாம். கஜமுகாசுரனை இறைவன் சம்ஹாரம் செய்த இடம். அந்த யானையின் மத்தகத்தில் தன் காலை அழுத்திப் பதித்து இறைவன் நடனமாடினான். அந்த அசுரனின் சர்மத்தை உரித்துப் போர்த்திக் கொண்டான். இதனால் 'கிருத்திவாஸன்' என்றழைக்கப்படு கிறான்.

அழிவுத் தொழிலைக் காட்டாத அருளாளனாக வரவேண்டும் என்று ஈசுவரனை வேண்டும் ஸ்ரீ ருத்ர மந்திரம் ஒன்று உண்டு. அதில் ஆயுதங்களைத் தரிக்காமல் எழுந்தருளுமாறு, வேண்டும் போதே பிநாக வில்லை மட்டும் தாங்கி தோலையும் கிருத்தி வாஸனாக வருமாறு கோரப்படுகிறது.

யானையை அடக்கும் ஈசனின் ஆற்றலை ஆதிசங்கரர் சிவானந்தலஹரியில் 'மனம் என்னும் மதயானையை ஞானத் தறியில் பிணைப்பாயாக' என்று வேண்டுகிறார்.

திருக்கடவூர் :—''யமன் பிரியமற்றவனைப் போல் இருந்து மனிதனுக்கு நன்மை செய்கிறான். காமனோ பிரியமுள்ளவனைப் போல் இருந்து அவனுக்குத் தீங்கு இழைக்கிறான்'' என்பது ஆதிசங்கரர் வாக்கு. இந்த யமனும் இறைவனின் அடியாளும் கைவரிசை காட்டியதற்காக இறைவனால் தண்டிக்கப்பட்டிருக் கிறார். இத்தலம் மாயூரம் தரங்கம்பாடி பாதையிலுள்ளது.

சிவலிங்கபூஜையில் ஈடுபட்டிருந்த மார்க்கண்டேயன் உயிரைக் கவர்ந்திழுக்க யமதர்மன் வந்து லிங்கத்தையும் சேர்த்து பாசக் கயிற்றை வீசியதும் அப்போது லிங்கம் பிளந்து இறைவன் வெளிபட்டு காலனை காலால் உதைத்து தண்டித்ததும் நடந்தது இத்தலத்தில் தான். மூலமூர்த்தி அமிருத கடேஸ்வரர். பாற் கடலிருந்து கிடைத்த அமிர்தமே இங்கு சிவலிங்கமாகியுள்ளது.

இந்த அஷ்ட வீரட்டங்களையும் நினைத்து அவைகள் பெயரை,

''நாவில் நவின்றுரைப்பாரிக்கு நணுகச் சென்றால்
நமன் தமரும் சிவன் தமர் எனறகல்வர்''

என்பது அப்பர் வாக்கு.

## சப்த ஸ்தானத் தலங்கள்

பிரணவம், அகார, உகார, மகார, அர்த்தமாத்திரை, நாதம், பிந்து, உன்மனீ என்கிற ஏழு அவயங்களையுடையது. இந்த ஏழும் முறையே ஜாக்கிரதம், ஸ்வப்னம், ஸுஷுப்தி, துரியம்,

துரியாதீதம், அதியோதீதம், சன்மயம் என்கிற ஏழு அவஸ்தைகளை குறிப்பதாகும். இவ்வெல்லா அவஸ்தைகளிலும் விருத்தியுண்டு. சன்மயத்தில் விருத்தி உபசனமாகிவிடுகிறது. இந்த சன்மயாவஸ்தையின் நிலையே இந்த பஞ்சநத க்ஷேத்திரத்தின் ஸ்வரூபமாகும்.

1. திருப்பழனம்—ஜாக்கிரம் அகாரம்.
2. திருச்சோற்றுத்துறை—ஸ்வப்னம் உகாரம்.
3. திருவேதிக்குடி—ஸுஷுப்தி மகாரம்.
4. திருக்கண்டியூர்—துரீயம் அர்த்தமாத்திரை.
5. திருப்பூந்துருத்தி—துரியாதீதம் நாதம்
6. திருநெய்த்தானம்—அதியோதீதம் பிந்து.
7. திருவையாறு—சன்மயம் உன்மனீ.

பல்லக்கு தான் விருத்தி.

''ஏழூர் சுற்றி என் பெயர் முத்தி''

திருப்பழனம் :—ஐயாறப்பன் சப்த ஸ்தானத்தின்போது முதலில் எழுந்தருளுவது இந்த தலத்தில்தான். திருவையாறிலிருந்து கும்பகோணம் செல்லும் பாதையில் $2\frac{1}{2}$ மைலிலுள்ளது. அப்பூதி அடிகள் இங்குதான் தண்ணீர் பந்தல் வைத்து நடத்தி திருநாவுக்கரசர் அருள் பெற்றார். ஸ்தல விருக்ஷம் வாழை. ஆபத்ஸகாயர் இறைவன் பெயர்.

இங்கிருந்து ஒரு மைலில் திங்களூர்—அப்பூதி அடிகள் அவதரித்த தலம்.

கருந்தட்டாங்குடி:—தஞ்சை, திருவையார் பாதையிலுள்ளது. கோயிலில் சிற்பக் களஞ்சியம். இறைவன் வசிஷ்டேஸ்வரர், கரந்தை என்ற பெயரும் உண்டு. தமிழ் வளர்க்கும் கழகம் செயல்படுகிறது.

வெண்ணாற்றங் கரையில் நான்கு விஷ்ணு கோவில்கள் உள்ளன. ஒன்று மணிபல்லவ பெருமாள். அரசூர் சுப்பிரமணிய சுவாமி கோயில்.

ஐயாறப்பனின் சப்த ஸ்தான பல்லக்கு திருப்பழனத்திற்குப் பின் காவிரி குழருட்டி ஆறுகளைத் தாண்டிக் கொண்டு திருசோற்றுத் துறையை அடைகிறது (கண்டியூரிலிருந்து 3 மைல்).

அம்மன் ஆலயம் சுவாமியின் வலது புறத்தில் அமைந்துள்ளதால் திருமணத்தலம். அருணகிரியால் போற்றப்பட்ட முருகன் சிலை உள்ளது. ஆலயத்தினுள் வரதராஜர். பன்னீர் மரம் ஸ்தல விருக்ஷம்.

கௌதமர் பஞ்சம் வந்தபோது சோறு அளித்துக் காத்தார்.

திருவேதிக்குடி :—அடுத்த தலம் சோற்றுத் துறையிலிருந்து $1\frac{1}{2}$ மைல். பங்குனி 12, 13, தேதிகளில் சூரிய பூஜை. மறை

வீரிநாதன் இத்தல அருளொளியாகிய
வடிவேல் என்று பா

த்திரம், பிரம்மாவின் ஒரு
யைத் துண்டித்த இடம்.

வீரட்ட க்ஷேத்திரக் கோயில்கள் மேற்கு நோக்கியே இருக்கும். பிரம்மன் சரஸ்வதிக்கு சிலைகள். மாசி 13 முதல் 15வரை சூரிய பூஜை பிரம்மனின் தனிக் கோயில் கிழக்கு நோக்கியுள்ளது.

திருப்பூந்துருத்தி :—கண்டியூரிலிருந்து 2 மைல். அப்பர், சம்பந்தர் பல்லக்கு சுமந்த இடம். பொய்யிலி-அழகாலமர்ந்த நாயகி. கிருஷ்ண லீலா தரங்கிணி பாடிய நாராயண தீர்த்தர் சமாதி இங்குள்ளது. நந்தி விலகியுள்ள சந்நிதி.

சப்தஸ்தானம், ஏழு ஊர்களிலுள்ள மூர்த்திகள் சேர்ந்து உலா வரும் பெரிய விழா. திருவையாற்றுச் சிவபெருமான் அம்பிகையோடு கண்ணாடிப் பல்லக்கில் புறப்பட்டு திருப்பழனம் முதலிய தலங்களின் வழியே செல்வார். அந்த ஊர்களிலுள்ள மூர்த்திகளையும் அழைத்துக் கொண்டு திருவையாற்றை அடைவார்கள். ஏழு ஊர் மூர்த்திகளும் ஒருங்கே காட்சி தருவார்கள்.

இந்தத் தெய்வத் திருவுலா திருப்பூந்துருத்தியை அடையும் போது எல்லோக்கும் பசி மிகுதியாகும். அங்கங்கே அன்ன தானத்துக்கு ஏற்பாடு செய்திருப்பார்கள் ஊர்க்காரர்கள்.

''திருப்பூந்துருத்தி உபசாரம்'' என்று கேட்டிருக்கிறீர்களா? புதியவர் யாரேனும் வந்தால், ''நீங்கள் எல்லாம் நம் வீட்டில் சாப்பிடுவீர்களா?'' என்று சொல்லிக்கொண்டே கதவைச் சாத்திக்கொள்ளும் உபசாரத்தைத்தான் அப்படிச் சொல்வார்கள். ஏழூர்த் திருவிழாவாகிய சப்த ஸ்தானத்தைச் சேர்ந்த ஏழு தலங்களில் திருப்பூந்துருத்தியும் ஒன்றாக இருக்கப் போய், இந்த அபக்கியாதி அதற்கு வந்தது.

திருநெய்த்தானம் :—தில்லை ஸ்தானம் நெய்யாடியப்பர். பாலாம்பிகை. சரஸ்வதி இறைவனை பூஜித்த தலம்.

தக்ஷிணாமூர்த்தி நின்ற கோலம். புகழேந்தியும் ஒட்டக் கூத்தரும் இங்குள்ள இறைவனைப் பாடியிருக்கிறார்கள். இத்தல முருகனை அருணகிரி பாடியுள்ளார்.

இந்த ஏழு ஊர்த் திருவிழா சித்திரா பௌர்ணமியில் நடை பெறும். இந்த ஏழு சிவபெருமான் ஆலயங்களும் பஞ்சநதீஸ்வரர் கோயில் கொண்டுள்ள திருவையாறு ஈஸ்வரனுடன் சம்பந்தப் பட்டவை.

'அன்னதான சிவன்' என்று புகழ் பெற்ற பெரியார் அன்ன தானத்தை மிகச் சிறப்பாக இந்த சப்த ஸ்தானத்தின்போது நடத்தி வந்தார்.

## சப்த விடங்க ஸ்தலங்கள்

பஞ்ச பூதத்தலம், அட்ட வீரட்டம் என்பவற்றைப் போல, சப்த விடங்கத் தலங்கள் என்பவை ஒரு வகையில் தொடர்பும் பொதுமையும் உள்ள ஏழு தலங்கள். இந்தத் தலங்களில் தியாகராஜர் எழுந்தருளியிருப்பார். அம்மையும் அப்பனும் இடையே முருகனும் உள்ள மூர்த்தியைச் சோமாஸ்கந்தர் என்பது வழக்கு. தியாகராஜப் பெருமானும் சோமாஸ்கந்தரே. வடிவிலும் தியாகராஜ வடிவிலும் இறைவன் எழுந்தருளியிருக்கிறார்.

விடங்கர் என்பதற்கு உளி படாத சுயம்பு மூர்த்தி என்று பொருள். திருமால் படுத்தபடியே தம் திருமார்பில் தியாகராஜப் பெருமானை வைத்துப் போற்றினார். அப்போது தேவேந்திரன் அவரிடம் சென்று அம் மூர்த்தியை வேண்டிப் பெற்றுப் பூசித்து வந்தான். வலன் என்னும் அசுரனோடு போர் செய்யும்போது இந்திரனுக்கு உறுதுணையாக முசுகுந்தச் சக்கரவர்த்தி வந்துவெற்றி வாங்கித் தந்தார். அவர் செய்த பெரு உதவிக்குக் கைம்மாறு செய்ய விரும்பிய இந்திரன், அச் சக்கரவர்த்தியிடம் என்ன வேண்டுமென்று கேட்டான். அவர் சோமாஸ்கந்தரைக் கேட்கவே இந்திரன் கொடுக்க மனம் இல்லாமல் இருந்தான். ஆயினும் அதனைப் புலப்படுத்தாமல் தெய்வத் தச்சனைக் கொண்டு அந்த மூர்த்தியைப் போலவே வேறு ஒன்று செய்வித்து வழங்கினான். அதை வாங்கிக் கொண்ட முசுகுந்தர், ''திருமால் மார்பில் இருந்து ஆடிய மூர்த்தி இவர் அல்ல; அவரைத் தரவேண்டும்'' என்று கேட்க, இந்திரன் மீண்டும் ஒன்று செய்வித்தளிக்க, அவர் பெற்று மறுபடியும் கேட்டார். இப்படி ஆறு மூர்த்திகளைக் கொடுத்த பிறகு வேறு வழியில்லாமல் மூலமாகிய விடங்கப் பெருமானையே இந்திரன் வழங்கினான். அம் மூர்த்தியைத் திருவாரூரிலும், மற்ற ஆறு மூர்த்திகளையும் ஆறு தலங்களிலும் பிரதிஷ்டை செய்தார் முசுகுந்தர். இந்த ஏழிலும் விடங்கர் கோயில் கொண்டிருப்பதால் சப்த விடங்கத் தலம் என்ற பெயர் வந்தது.

திருவாரூர் :—இதுதான் திருமால் திருமார்பில் இருந்த தியாகராஜர் உள்ள தலம். திருமால் மூச்சு விடும்போது அவர் மார்பில் இருந்தபடியே ஆடியமையால் இவருக்கு இருந்தாட்டழகர் என்றும், அஜபா நடனமூர்த்தி என்றும் பெயர்கள் வந்தன. இவருக்கு வீதி விடங்கர் என்றும் பெயர். இத்தலத்தில் உள்ள பெரிய தீர்த்தம் கமலாலயம்.

திருக்காறுயில் :—ீ தெற்கே 8 மைலில் உள்ளது. ஆதி விடங்கர். அவர் ஆடியது குக்குட நடனம்.

திருநள்ளாறு :—காரைக்காலுக்கு மேற்கே 3 மைலில் உள்ளது. நக விடங்கர், அவர் ஆடியது உன்மத்த நடனம்.

திருக்கோளிலி :—திருவாரூருக்குத் தென் கிழக்கே 12 மைலில் உள்ளது. இப்போது திருக்குவளை என்று வழங்குகிறது. அவனி விடங்கர். பிரமர நடனம்.

திருவாய்மூர் :—திருவாரூருக்குத் தென் கிழக்கில் 15 மைலில் உள்ளது. நீல விடங்கத் தியாகர். இவர் ஆடியது கமல நடனம்.

திருமறைக்காடு :—இது வேதாரணியம். புவனி விடங்கத் தியாகர். ஹம்ஸ நடனம் செய்யும் தலம் இது.

திருநாகைக் காரோணம் :—நாகப்பட்டினத்திலுள்ள காயாரோகணேசுவரர் கோயில். இங்கு சுந்தர விடங்கத் தியாகர் எழுந்தருளியிருக்கிறார். பாராவார தரங்க நடனமென்றும், வீசி நடனம் என்றும் இவருடைய நடனத்தைக் கூறுவர்.

# கடல் கடந்த சைவம் 10

உலகத்தில் சிவத்தின் தொடர்பு இல்லாதது இல்லை. எல்லாவற்றிலும் சிவம் கலந்திருக்கிறது. சிவனும், சக்தியும் சேர்ந்தால் தான் உலகம் இயங்குகிறது. உண்மையை

ஞாயிறு வழிபாடு உலகமெங்கும் பரவியிருந்தது. அவ்வழிபாடே உலகின் பல பாகங்களில் சிவ வழிபாடாக மாறியிருக்கிறது என்பது ஆராய்ச்சியாளர்கள் கருத்து.

சில நாடுகளில் சிவன் பெயர் நகரங்களுக்கும், சில இடங்களுக்கும் வைக்கப்பட்டுள்ளன.

எகிப்தில் லிபிய வனாந்தரத்தில் சிவன் என்னும் பாலை நிலைப் பசுந்தரை (Oasis) இருந்து வருகிறது. பாபிலோனியாவில் சிவா என்பது ஒரு நகரின் பெயரே என்பது பழங்கால களிமண் பட்டயங்களில் காணப்படுகிறது.

அக்கேடிய மக்களின் ஏழு முக்கிய விண் மீன்களில் மூன்றாவது சிவ எனப்பட்டதாகும். ஜப்பானிய மக்களின் பழைய தெய்வங்களில் ஒன்று சிவோ என்பதாகும்.

வட அமெரிக்காவில் கொலராடோ என்ற இடத்திலுள்ள குன்றின்மீது சிவ ஆலயம் இருந்ததைத புதைம் பொருள் ஆராய்ச்சி யாளர்கள் 1937-ல் கண்டுபிடித்தனர். இந்த ஆலயம் 10,000 ஆண்டுகளுக்கு முற்பட்டதாக இருக்கலாம் என்றும் அவர்கள் அபிப்ராயப்படுகின்றனர்.

கிரீட் என்ற தீவு பழந்தமிழர்களின் குடியேற்ற நாடாக இருந்தது. அங்குள்ள பழைய நகரம் ஒன்றுக்கு சிவன் நகரி

என்ற பெயர் இருந்திருக்கிறது. சின்ன ஆசியாவிலும் (ஆசியா மைனர்) சிவாஸ் என்ற பழைய நகர் ஒன்று உண்டு, இலங்கையில் சிவன் மலை என்றே ஒன்றிருக்கிறது.

மேற்கு ஆசிய மக்களின் மூன்று பெரு பாதம் சிவன் என்பது. சிவன் பின்லாந்து மக்களின் காவல் கடவுள்.

அமெரிக்க நாட்டை முதன் முதலில் ஸ்பெயின் நாட்டினர் கண்டுபிடித்தபோது சிவலிங்கம் இருப்பது கண்டுபிடிக்கப்பட்டதாம்.

சயாம் நாட்டில் திரிமூர்த்தி வழிபாடு இருந்ததாக புதை பொருள் ஆராய்ச்சியிலிருந்து தெரியவருகிறது. அங்கு சிவனுக்கும் உமைக்கும் முதலை வாகனம் அளிக்[illegible]
கண்டுபிடிக்கப்பட்ட ஒரு
பிரும்மாவுக்கு ஒரு முகம்தான். [illegible]
திருவெம்பாவை (மார்கழி) விழா சயாம் நாட்டில்
பின்பற்றப்பட்டு வருகிறது.

''இந்திய நாகரிகமும் அதன் பழமையும்'' என்ற [illegible] முக்கேசி என்பவர் லிங்க வழிபாடு உலகமெங்கும் பரவியிருந்ததைப் பற்றி பின்வருமாறு குறிப்பிடுகிறார்.

''இந்திய மக்கள் சிவனின் அருட் குறியான சிவலிங்கத்தை தொன்று தொட்டு வழிபட்டு வருகின்றனர். உலகின் பல பாகங்களிலும் இது பரவியிருந்ததென்பதை விளக்குவதற்கு வேண்டிய சான்றுகள் கிடைத்துள்ளன. சீனு, ஜப்பான், பசிபிக் தீவுகள் முதலிய இடங்களில் இவ்வழிபாடு முற்றிலும் மறைந்து விடவில்லை. ஆப்பிரிக்க மக்களிடையேயும் இது பரவியிருந்தது. திபெத், பூடான் நாடுகளிலும் சிவலிங்கங்கள் காணப்படுகின்றன. ஆப்பிரிக்காவில் தகோமி என்ற இடத்தில் லிங்கம் லெங்பா என்ற பெயரில் வணங்கப்பட்டு வந்துள்ளது.''

பல நாடுகளில் ஆண் குறிகளே லிங்கமாக வழிபட்டதும் உண்டு. அதைக் கொண்டு சில மேனாட்டு எழுத்தாளர்கள் இந்தியர்கள் வழிபடும் லிங்கம் ஆண் குறிச் சின்னமே என்று தங்கள் புத்தகங்களில் எழுதியிருக்கிறார்கள். இது முற்றிலும் தவறு. சிவனும் சக்தியும் இணைந்தது லிங்கம்தான். என்றாலும் அவைகள் ஆண் பெண் குறிகளை வைத்து வழிபடுவதாகாது.

தெய்வத்தை நாட மேல் நோக்கு வேண்டும். பிராண சக்தி மேல் நோக்கி இயங்குகிறது. அதனால் லிங்கம் பாணம் நிமிர்ந்துள்ளதாக அமைக்கப்பட்டுள்ளது. வட்டமாக உடைய ஆவுடையார் இறைவன் ஆதியும் அந்தமும் இல்லாதவன் என்பதை உணர்த்துவதாகும்.

---

* பிரதிபாவின் ''பாவை உணர்த்தும் தத்துவங்கள்'' புத்தகத்தில் விவரமாக இதுபற்றி காணலாம்.

# பஞ்சாக்ஷரீ மஹா மந்திரங்கள் 11

## சிவ பஞ்சாக்ஷரீ மஹா மந்திரம்

அஸ்ய ஸ்ரீ சிவபஞ்சாக்ஷரீ மஹா மந்திரஸ்ய வாமதேவரிஷி: பங்க்திச் சந்த: ஸாம்ப பரமேஸ்வரோ தேவதா||

ஓம் பீஜம் நம் சக்தி: மம் கீலகம் ஸ்ரீ ஸாம்ப பரமேஸ்வர பிரசாத ஸித்தியர்தே ஜபே விநியோக:

ஓம் நம் மம் சிம் வாம் யம் இதி கரன்யாஸ: அங்கன்யாஸ: பூர்புவஸ்ஸுவ ரோமிதி திக்பந்த: ||

**தியானம்:** சாந்தம் பத்மாஸனஸ்தம் சசிதர மகுடம், பஞ்ச வக்த்ரம், திரிணேத்ரம் சூலம் வஜ்ரஞ்ச கட்கம் பரசுமபயதம் தக்ஷபாகே வஹந்தம் | நாகம் பாசஞ் ச கண்டாம் ப்ரளய ஹுதவஹம் ஸாங்குசம், வாமபாகே நானாலங்கார யுக்தம் ஸ்படிகமணி நிபம் பார்வதீசம் நமாமி || லம் இத்யாதி பஞ்சபூஜா.

(சாந்த மூர்த்தி, பத்மாஸனத்தில் இருப்பவர். ஐந்து முகங்கள் உள்ளவர் மூன்று கண்கள், சூலம் முதலிய ஆயுதங்களைத் தரித்தவர், ஸ்படிகமணி போன்றவர்—இந்த பார்வதீசனை நமஸ்கரிக்கிறேன்.)

**மூலம்:** ஓம் நமசிவாய. ஹிருதயாதி நியாஸ: பூர்புவஸ் ஸுவரோ மிதி திக் விமோக: தியானம், பஞ்சபூஜா, சமர்ப்பணம்.

## சக்தி பஞ்சாக்ஷரீ மஹா மந்திரம்

அஸ்ய ஸ்ரீ சக்தி பஞ்சாக்ஷரீ மஹா மந்திரஸ்ய வாமதேவ ரிஷி: அனுஷ்டுப் சந்த: ஸ்ரீ ஸாம்ப ஸதாசிவோ தேவதா ||

ஹ்ராம் பீஜம், ஹ்ரீம் சக்தி: ஹ்ரூம் கீலகம் ஸ்ரீ ஸாம்ப ஸதாசிவ ப்ரீத்யர்த்தே ஜபே விநியோக: ||

ஓம் ஹ்ராம் ஹ்ரீம் ஹ்ரூம் ஹ்ரைம் ஹ்ரௌம் ஹ்ர: இதி அங்கன்யாஸ: கரன்யாஸ பூர்புவஸ்ஸுவ ரோம் இதி திக்பந்த: ||

### தியான ஸ்லோகம்

வந்தே ஹரம் வாத ஸுலக பாஸஹஸிதம்
ஸாநந்த மத்ரீஸுதயோஜ் ஜ்வல தேஹ காந்த்யே |
வாமோரு பீடகதயா நிஜவாமஹஸ்தந்யஸ்
தாருணேத் பலருசா பரிரப்த காத்ரம்

வரத ஹஸ்தத்துடன் சூலமேந்தியும் ஒருகையில் பிக்ஷாபாத்திரமான கபாலமும் ஏந்திய ஈசனின் இடப் பாகத்தில் வீற்றிருக்கும் அம்பிகை இடக் கையில் தாமரையுடன் பொலிந்து ஆலிங்கனம் செய்துக் கொள்கிருள். இத்தகைய ஈசனை தியானிக்கிறேன்.

**மற்ருெரு தியான சுலோகம்:** மூலே கல்பத்ருமஸ்ய த்ருதகனக நிபம் சாரு பத்மாஸனஸ்தம் வாமாங்காரூட கௌரீ நிபிட குச பராபோக காடோப கூடம் | நானலங்கார காந்தம் வர பரசு ம்ருகாபீதி ஹஸ்தம் த்ரிணேத்திரம் வந்தே பாலேந்து மௌலிம் கஜவதன குஹாச் லிஷ்ட பார்ச்வம் மஹேசம் ||

(கற்பக விருக்ஷத்தடியில் பத்மாசனத்தில் இருப்பவர். மடியில் கௌரியை வைத்திருப்பவர். முக்கண்ணர். சிரசில் இளம்பிறைச்சந்திரன் கணபதியும் குகனும் இருபுறமும் சேர்ந்திருக்கப் பெற்றவர் இந்த மகேஸ்வரனை நமஸ்கரிக்கிறேன்.) லம் இத்யாதி பஞ்சபூஜா.

மூலம் : ஓம் ஹ்ரீம் நமசிவாய ||. பூர்புவஸ்ஸுவரோமிதி திக்விமோக: தியானம் பஞ்சபூஜா சமர்ப்பணம்.

## குரு தாரக பஞ்சாக்ஷரீ மஹா மந்திரம்

அஸ்ய ஸ்ரீ குருதாரக பஞ்சாக்ஷர மஹா மந்திரஸ்ய பகவான் ஸதாசிவ ரிஷி: விராட்சந்த: ஸ்ரீ குருபரமாத்மா தேவதா ||

ஹம் பீஜம், ஸ: சக்தி ஸோகம் கீலகம் ஓம் ஸ்ரீ குருபரமாத்மா ப்ரஸாத ஸித்தியர்த்தே ஜபே விநியோக: |

ஓம் ஹம் ஸாம், ஓம் ஹம் ஸீம் ஓம் ஹம் ஸூம் ஓம் ஹம் ஸைம் ஓம் ஹம் ஸௌம் ஓம் ஹம் ஸ: || இதி கரன்யாஸ: அங்கன்யாஸ: பூர்புவஸ்ஸுவரோமிதி திக்பந்த:

**த்யானம் ;** ஊர்த்வாம்னய குரோ: பதம் திரிபுவநௌங் காராக்ய ஸிம்ஹாஸனம் ஸித்தாசார ஸமஸ்த வேத படிதம் ஷட்சக்ர ஸஞ்சாரிணம் | அத்வைத ஸ்புரதக்னி மேக மமலம் பூர்ண பிரபா ஸோபிதம் சாந்தம் ஸ்ரீ குருபாதுகாம் பஜமனச் சைதன்ய சந்த்ரோதயம் || லம் இத்யாதி பஞ்சபூஜா.

(ஊர்த்வாமனயமாகிய குருபதமும் மூன்று புவனங்களின் ஆட்சி பீடமாகிய ஓம்காரம் என்னும் ஸிம்மாஸனமும் ஆறு ஆதாரங்களில் சஞ்சரிப்பதும் அத்வைத நிலையை விளக்கும் அக்னியும் ஒன்றேயாகிய தத்துவமும் பூர்ணபிரபையுடன் விளங்குவதும் சாந்தமானதும் சைதன்ய சந்திரன் உதிக்குமிடமுமாகிய குருபாதுகையை தியானிக்கிறேன்.)

மூலம்: ஓம் ஓம்காராய நமசிவாய, ஓம் நகாராய நமசிவாய, ஓம் மகாராய நமசிவாய, ஓம் சிகாராய நமசிவாய, ஓம் யகாராய நமசிவாய, ஓம் நம ஸ்ரீ குருதேவாய பரம புருஷாய, ஸர்வ தேவதா வசீகராய, ஸர்வாரிஷ்ட விநாசாய ஸர்வ துர்மந்த்ர ச்சேதனய, த்ரைலோக்யம் வசமானய ஸ்வாஹா || ஹ்ருதயாதி நியாஸ: பூர்புவஸ்ஸுவரோமிதி திக்விமோக: தியானம் லம் பஞ்சபூஜா, சமர்ப்பணம்,

# வேதஸார சிவ ஸ்தோத்திரம்

வேத மந்திரமான ஸ்ரீ ருத்திரத்திலுள்ள சிவபெருமான் பெருமையை ஸாரமாக எடுத்து இதில் ஆதிசங்கரர் வழங்கியுள்ளார்.

1. பஶூநாம் பதிம் பாபநாசம் பரேசம்
கஜேந்த்ரஸ்ய க்ருத்திம் வஸாநம் வரேண்யம் |
ஜடா ஜூட மத்யே ஸ்புரத் காங்க வாரியம்
மஹாதேவ மேகம் ஸ்மராமி ஸ்மராமி ||

2. மகேசம் ஸுரேசம் ஸுராராதி நாசம்
விபும் விஸ்வநாதம் விபூத்யங்க பூஷம் |
விருபாக்ஷ மிந்த்வர்க்க வஹ்நி நேத்ரம்
ஸதானந்த மீடே ப்ரபும் பஞ்ச வக்த்ரம் ||

3. கிரீசம் கணேசம் களே நீலவர்ணம்
கவேந்திராதி ரூடம் குணாதீத ரூபம்
பவம் பாஸ்வரம் பஸ்மநா பூஷிதாங்கம்
பவாநீ களத்ரம் பஜே பஞ்ச வக்த்ரம் ||

4. சிவா காந்த சம்போ ச சாங்கார்த்த மௌளே
மகேஶாந ஶூலிந் ஜடா ஜூடதாரிக் |
த்வமேகோ ஜகத் வ்யபாகோ விஶ்வ ரூப :
ப்ரஸீத ப்ரஸீத ப்ரபோ பூர்ணரூப ||

5. பராத்மா ந மேகம் ஜகத் பீதமாத்யம்
திரிஹம் நிராகார மோம்ஹார வேத்யம் |
யதோ ஜாயதே பாலயதே யேந விஶ்வம்
தமீஶம் பஜே லீயதே யத்ர விச்வம் ||

6. ந பூமிர் ந சாபோ ந வஹ்நிர் ந வாயுர்
ந ஆகாஶ மாஸ்தே ந தந்த்ரா ந நித்ரா |
ந சேஷ்ணம் ந சீதம் நதேஶோ ந வே ஷோ
நயஸ்யாஸ்தி மூர்த்திஸ் த்ரி மூர்த்திம் தமீடே ||

7. அஜம் சாஶ்வதம் காரணம் காரணாநாம்
சிவம் கேவலம் பாஸகம் பாஸகாநாம் |
துரீயம் தம : பாரமாத்யந்த ஹீநம் ப்ரபத்யே பாம் பாவநம்
த்வைதஹீநம் |

8. நமஸ்தே நமஸ்தே விபோ விஸ்வமூர்த்தே
நமஸ்தே நமஸ்தே சிதானந்த மூர்த்தே |
நமஸ்தே நமஸ்தே தபோ யோககம்ய
நமஸ்தே நமஸ்தே ஶ்ருதிஞ்ஜாந கம்ய ||

9. ப்ரபோ சூலபாணே விபோ விஸ்வநாத
மகாதேவ சம்போ மஹேச திரி நேத்ர : |
சிவாகாந்த சாந்த ஸ்மராரே புராரே
த்வதந்யோ வரேண்யோ ந மாந்யோ ந கண்ய |

10. சம்போ மஹேஶ கருணாமய சூலபாணே
கௌரீபதே பசுபதே பசுபாசநாசிந் |
காசீபதே கருணயா ஜகதேத தேகஸ்
த்வம் ஹம்ஸி பாஸி விததாஸி மஹேஶ்வரோஸி

11. த்வத்தோ ஜகத்பவதி தேவ பவ ஸ்மராரே
த்வய்யேவ திஷ்டதி ஜகந் ம்ருட விஶ்வநாத |
த்வய்யேவ கச்சதி லயம் ஜகதேத தீஶ
லிங்காத்மகே ஹர சராசர விஶ்வ ரூபிந் ||

# சிவ மானஸ பூஜை

ஆதிசங்கரர் இந்த ஸ்தோத்திரத்தில் ஹிருதய கமலத்தை சிவலிங்கமாக பாவித்து பூஜை செய்கிறார். சிவ தியானம் செய்யும் போது 'ஓம் நமசிவாய' என்கிற பஞ்சாக்ஷர மந்திரத்தை இமைகளுக்கு இடையே லிங்க ஸ்வரூபத்தில் வைத்து உலகத்தின் நிலைகளை மறந்து வைராக்கியமாக ஜபம் செய்வது உத்தமம்.

ஆராதயாமி மணி ஸந்நிப ஆத்மலிங்கம்
மாயாபுரீ ஹிருதய பங்கஜ ஸந்நி விஷ்டம் |
ஶ்ரத்தா நதீ விமல சித்த ஜலா பிஷேகை
நித்யம் ஸமாதி குஸுமை ரபுநர்பவாய || 1

மாயபுரி என்ற இந்த உடலிலுள்ள ஹிருதய கமலத்தில் ஸ்படிகம் போல் வெண்மையாக பிரகாசிக்கும் ஆத்ம லிங்கத்தை சிரத்தை என்ற நதியிலிருக்கும் சித்தம் என்ற நீரால் அபிஷேகம் செய்து ஸமாதி என்னும் புஷ்பங்களால் மீண்டும் பிறவா வரம் அருள பூஜிக்கிறேன்.

ரத்நை: கல்பித மாஸனம் ஹிம ஜலை: ஸ்நாநம் ச திவ்யாம்பரம்
நாநா ரத்ன விபூஷிதம் ம்ருக மதாமோத அங்கிதம் சந்தனம் |
ஜாதீ சம்பக வில்வ பத்ர ரசிதம் புஷ்பம் ச தூபம் ததா தீபம்
தேவ தயாநிதே பசுபதே ஹ்ருத் கல்பிதம் க்ருஹ்யதாம் ||

ரத்னாஸனமும் கங்கா ஜல ஸ்நாநமும், திவ்ய வஸ்திரமும் பல ரத்னங்கள் இழைத்த ஆபரணமும் கஸ்தூரி கலந்த சந்தனமும், ஜாதி சம்பகம், வில்வம் முதலான புஷ்பம் பத்ரங்களும் தூபமும் தீபமும் மனஸாலே அளிக்கிறேன்.

ஸௌ வர்ணே நவரத்ன கண்ட ரசிதே பாத்ரே க்ருதம்
பாயஸம் பக்ஷ்யம் பஞ்சவிதம் பயோ
ததியுதம் ரம்பா பலம் பானகம் |
ஶாகா நாமயுதம் ஜலம் ருசிகரம் கர்ப்பூர
கண்டோஜ் ஜ்வலம் தாம்பூலம் மனஸாமயா
விரசிதம் பக்த்யா ப்ரபோ ஸ்வீகுரு || 3

நவரத்னம் இழைத்த தங்க பாத்திரத்தில் நெய்யும், பாயஸமும், பால், தயிர், கூடிய பஞ்சவித பக்ஷணங்களும் வாழைப்பழமும் பானகமும் நல்ல ஜலமும் பச்சை கர்பூரம் கலந்த தாம்பூலமும் பக்தியுடன் சமர்ப்பிக்கிறேன்.

சத்ரம் சாமரயோர் யுகம் வ்ய ஜனகம் சாதர் ஶகம் நிர்மலம்
வீணு பேரிம்ருதங்கா ஹலகலா கீதம்
ச ந்ருத்யம் ததா | ஸாஷ்டாங்கம் ப்ரணதி : ஸ்துதிர்
பஹுவிதா ஹ்யேதத் ஸமஸ்தம் மயா
ஸங்கல்பேன ஸமர்ப்பிதம் தவ விபோ பூஜாம் க்ருஹாண
[ப்ரபோ 4

குடைபிடித்து வெண்சாமரங்கள் விசிறி, கண்ணாடிக் காட்டி, வீணே பேரி மிருதங்கம் இவையுடன் கானம் நர்த்தனம் ஸாஷ்டாங்க நமஸ்காரம், ஸ்தோத்திரம் இவை எல்லாம் மானஸீகமாக அளிக்கிறேன்.

ஆத்மா த்வம் கிரிஜா மதி : ஸஹசரா : ப்ராணு : ஶரீரம் க்ருஹ
பூஜாதே விஷயோப போக ரசனு நித்ரா ஸமாதிஸ் திதி : |
ஸஞ்சார : பதயோ : ப்ரதக்ஷிண விதி : ஸ்தோத்ராணி
ஸர்வா கிர :
யத்யத் கர்ம கரோமி தத்தத கிலம் சம்போ தவாராதனம் 5

என் ஆத்மா நீங்கள். புத்தி பார்வதி, பஞ்ச பிராணன்கள் நண்பர்கள். சரீரம் வீடு,விஷய போகங்கள் உமது பூஜை. தூக்கம் சமாதி பாதசஞ்சாரம் பிரதக்ஷிணம். பேச்செல்லாம் உமது ஸ்தோத்திரம் நான் செய்யும் சகல காரியமும் உமது ஆராதனே.

கர சரணக்ருதம் வா க்காயஜம் கர்மஜம் வா
ஶ்ரவண நய நஜம் வா மானஸம் வா பராதம் |
விஹித மவிஹிதம் வா ஸர்வ மேதத் க்ஷமஸ்வ
ஜய ஜய கருணுப்தே ஶ்ரீமஹா தேவ சம்போ 6

சம்போ மகாதேவா! கை, கால் வாக்கு சரீரம், கர்மம், கண் மனம் இவைகளால் வேதத்தில் விதிக்கப்பட்ட கர்மாவை செய்யாததும் விதிக்கப்படாததைச் செய்வதுமான அபராதத்தைப் பொறுப்பாயாக.

## சிவலிங்க பூஜை

நமோஸ்து ஸ்தாணு ரூபாயா, ஜ்யோதிர் லிங்கம்ருதம்ருதாத்மநே
சதுர் மூர்த்யபி பூஜ்யாய பாஸி தாங்காய ஶம்பவே ||

ஸ்தாணுவாயும் ஜோதிர் லிங்கமாயும் அம்ருத ஸ்வரூபனுகவும் சதுர் மூர்த்திகளால் பூஜிக்கத்தகுந்தவானுயும் உள்ள சம்புவிற்கு நமஸ்காரம்.

ஸ்வாத்ம ஸம்ஸ்தம் அஜம் நித்யம் த்வாமத்ய பரமேஸ்வர
அரண்யா இவஹவ்யாஶம் மூர்த்தௌ ஆவாஹயாம்யஹம் ||

பரமேசா! என்னுள் இருப்பவரும் பிறவி இல்லாதவரும் நித்யனுமான உம்மை இப்போது அரணிக்கட்டையில் உள்ள அக்னியைப் போல் இம்மூர்த்தியில் ஆவாஹனம் செய்கிறேன்.

ஹ்ருத்பத் மகாணி காமத் யாத் உமயா ஸஹ சங்கர
ஆகச்ச த்வம் மகாதேவ ஸர்வை ராவரணேஸ் ஸஹ ||

ஹேசங்கரா! நீர் உமையோடும் எல்லா ஆவரணங்களோடும் கூட ஹ்ருதய கமல மத்யத்திலிருந்து இந்த மூர்த்திக்கு வாருங்கள்,

ஆத்வாவஹந்து ஹரயஸ்ஸ சேதஸஶ :
ஶ்வேதைரஶ் வைஸ் ஸஹகேது மத்பி :
வாதாஜிதைர் பலவத்பிர் மநோ ஜவை
ராயாஹி ஶீக்ரம் மம ஹவ்யாய ஶர்வோம் ||

நான் பூஜை செய்வதற்காக உம்மை குதிரைகள் இங்கு கொண்டு வரட்டும். அக்குதிரைகள் நல்ல மனமுள்ளவை. காற்றைப்போல வேக முள்ளவை. அவைகள் சூழ என் பூஜையை ஏற்க வருவீராக.

த்ரயம்பகம் யஜாமஹே ஸுகந்திம் புஷ்டிவர்த்தனம்
உர்வாருக மிவ பந்தநாத் ம்ருத்யோர் முக்ஷீய மாமிருதாத் ||
நமஸ்தே ருத்ரவ மந்யவ உதோத இஷவே நம :
நமஸ்தே அஸ்து தன்வனே பாஹுப்யா முததே நம :

என்று சொல்லி அக்ஷதையை சிவ லிங்கத்தின் மீது

அஸ்மின் லிங்கே ஸபரிவாரம்
ஸாம்ப பரமேஸ்வரம் ஆவாஹயாமி

என்று போடவும்.

அஸு நீதே புனரஸ்மாஸு சக்ஷு : புன : ப்ராண மிஹநோ
தேஹிபோகம் ஜ்யோக் பஶ்யேம ஸூர்ய முச்சந்திர மநுமதே
ம்ருள யாநஸ் ஸ்வஸ்தி ||

என்று சொல்லிய பின் ஆவாஹனீ, ஸ்தாபனீ, ஸந்நிதாபனீ ஸம்ரோதினீ, ஸம்முகம், அவகுண்டநம் ப்ரஸாதம், ப்ரார்த்தனம் என்ற முத்திரைகளைக் காட்ட வேண்டும்.

ஆவாஹிதோபவ, ஸ்தாபி தோபவ ஸந்நிஹிதோபவ,
தோபவ ஸம்முகோபவ, அவகுண்டிதோபவ ஸுப்ரஸன்னோபவ ||

ஸ்வாமின் ஸர்வ ஜகந்நாத யாவத் பூஜாவஸாநகம்
தாதத்வம் ப்ரீதி பாவேந லிங்கேஸ்மின் சன்னிதம் குரு

எவ்வளவு நேரம் பூஜை செய்கிறேனே அவ்வளவு நேரம் இந்த லிங்கத்தில் சாந்நித்யமாக இருக்கும்படி பிரார்த்தனை செய்ய வேண்டும்.

## சுருக்கமான சிவார்ச்சனை

| | | |
|---|---|---|
| ஓம் நமோ பகவதே | பூர்வ முகாய | நம |
| ,, | தக்ஷிண முகாய | ,, |
| ,, | பச்சிம முகாய | ,, |
| ,, | உத்திர முகாய | ,, |
| ,, | ஊர்த்துவ முகாய | ,, |
| ,, | ஷஷ்ட முகாய | ,, |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| ஓம் | நிதபதயே | நம : | ஓம் | ஸுவர்ணாய | நம : |
| ,, | நித பதாந்திகாய | | ,, | ஸுவர்ணலிங்காய | ,, |
| ,, | ஊர்த்வராய | | ,, | திவ்யாய | ,, |
| ,, | ஊர்த்வ லிங்காய | | ,, | திவ்யலிங்காய | ,, |
| ,, | ஹிரண்யாய | | ,, | பவாய | ,, |
| ,, | ஹிரண்ய லிங்காய | | ,, | பவலிங்காய | ,, |

| | | | |
|---|---|---|---|
| ஓம் சர்வாய | நமஃ | ஓம் ஆத்மாய | நமஃ |
| ,, சர்வலிங்காய | ,, | ,, ஆத்ம லிங்காய | ,, |
| ,, சிவாய | ,, | ,, பரமாய | ,, |
| ,, சிவலிங்காய | ,, | ,, பரம லிங்காய | ,, |
| ,, ஜ்வாலாய | ,, | ,, சாம்ப பரமேஸ் | ,, |
| ,, ஜ்வாலாலிங்காய | ,, | வராய | ,, |

## சைவ அனுஷ்டானக் கிரியைகளில் முத்திரைகள்

1. பதாகை முத்திரை :—ஐந்து விரல்களையும் சேர்த்து நீட்டி கவிழ்ப்பது கவிழ்ந்த பதாகை. நிமிர்ப்பது நிமிர்நத பதாகை.

2. சிகா முத்திரை :—இரண்டு கைகளின் நடுவிரல் மூன்றையும் முட்டியாக மடக்கி தலையின் இரு புறத்திலும் புடைப்பது.

3. நமஸ்கார முத்திரை :—இரண்டு கைகளையும் சேர்த்து இட்டு பெருவிரல் மேல் வலது பெரு விரல் பொருந்தும்படி கூப்புவது.

4. திவ்ய முத்திரை :—பெருவிரல் அணி விரல்களைச் சேர்த்து மற்ற விரல்களை நீட்டுவது.

5. அதோமுகி முத்திரை :—சுட்டு விரலை நீட்டி மற்ற விரல்களை மடக்கி கீழ் நோக்கிப் பிடிப்பது.

6. தேனு முத்திரை :—இரண்டு கைகளையும் சேர்த்து விரல்களைக் கோத்து சுட்டு விரல்கள் நடுவிரல்களையும் நடுவிரல்கள் சுட்டு விரல்களையும் அணி விரல்கள் சிறு விரல்களையும் சிறு விரல்கள் அணி விரல்களையும் நுனியோடு நுனி பொருந்த அமைத்து பசுவினது முலைக் காம்பு போலப் பிடிப்பது.

7. கோமுக முத்திரை :—நடுவிரல்கள் மூன்றையும் சேர்த்து சற்று வளைத்து மற்ற விரல்களை மேல் நோக்கி நீட்டிக் கவிழ்த்துப் பிடிப்பது.

8. சங்க முத்திரை :—பெருவிரல் நுனியை சுட்டு விரல் அடியில் பொருந்த வளைத்து மற்ற நான்கு விரல்களையும் சேர்த்து நீட்டுவது.

9. சின் முத்திரை :—பெருவிரல் நுனி அல்லது அடியை சுட்டு விரலால் தொடுவது.

10. பிரசன்ன முத்திரை :—இரண்டு கைகளையும் கூப்பிப் பெரு விரல்களை இணைத்து அவற்றின் நுனிகள் அணிவிரல்களின் அடியிற் பொருந்த உள்ளே மடக்குவது.

# ஸ்ரீ லிங்காஷ்டகம்

ப்ரும்ஹ முராரி ஸுரார்ச்சித லிங்கம்
நிர்மல பாஸித ஸோபித லிங்கம் |
ஜன்மஜதுக்க விநாஸக லிங்கம்
தத்ப்ரணமாமி ஸதாஸிவ லிங்கம் ||

தேவமுனிப்ரவரார்சித லிங்கம்
காமதஹம் கருணாகர லிங்கம் |

ராவணதர்ப்ப விநாஶக லிங்கம்
தத்ப்ரணமாமி ஸதாஶிவ லிங்கம் ||

ஸர்வஸுகந்தி ஸுலேபித லிங்கம்
புத்திவிவர்த்தனகாரண லிங்கம் |
ஸித்த ஸுரா:ஸுரவந்தித லிங்கம்
தத்ப்ரணமாமி ஸதாஶிவ லிங்கம் ||

கனகமஹாமணிபூஷித லிங்கம்
பணிபதிவேஷ்டிதஶோபித லிங்கம் |
தக்ஷஸுயக்ஞவிநாஶக லிங்கம்
தத்ப்ரணமாமி ஸதாஶிவ:லிங்கம் ||

குங்குமசந்தனலேபித லிங்கம்
பங்கஜஹாரஸுஶோபித லிங்கம் |
ஸஞ்சிதபாபவிநாஶக லிங்கம்
தத்ப்ரணமாமி ஸதாஶிவ லிங்கம் ||

தேவகணார்ங்சிதஸேவித லிங்கம்
பாவைர்பக்திபிரேவச லிங்கம் |
தினகரகோடிப்ரபாகர லிங்கம்
தத்ப்ரணமாமி ஸதாஶிவ லிங்கம் |

அஷ்டதளோபரிவேஷ்டித லிங்கம்
ஸர்வஸமுத்பவகாரண லிங்கம் |
அஷ்டதரித்ரவிநாஶக லிங்கம்
தத்ப்ரணமாமி ஸதாஶிவ லிங்கம் ||

ஸுர குரு ஸுர வர பூஜித லிங்கம் |
ஸுரவன புஷ்ப ஸதார்ச்சித லிங்கம் |
பராத்பரம் பரமாத்மக லிங்கம்
தத்ப்ரணமாமி ஸதாஶிவ லிங்கம் ||

லிங்காஷ்டகமிதம் புண்யம் ய:
படேத் சிவஸன்னிதௌ
ஶிவலோகமவாப்னோதி
ஶிவேன ஸஹ மோததே ||

# ஸ்ரீ பில்வாஷ்டகம்

த்ரிதளம் த்ரிகுணாகாரம் த்ரிணேத்ரஞ்ச த்ரியாயுஷம் |
த்ரிஜன்ம பாப ஸம்ஹாரம் ஏகபில்வம் ஶிவார்பணம் ||

த்ரிஶாகைர்பில்வபத்ரைஶ்ச அர்சிதை: கோமளை: ஶுபை: |
சிவபூஜாம் கரிஷ்யாமி ஏகபில்வம் ஶிவார்ப்பணம் ||

அகண்டபில்வபத்ரேண பூஜிதே நந்திகேஶ்வரே |
ஶுத்யந்தி ஸர்வ பாபேப்ய: ஏகபில்வம் ஶிவார்ப்பணம் ||

ஸாலக்ராம ஶிலாமேகாம் விப்ராணம் ஜாது அர்பயேத் |
ஸோமயக்ஞ மஹாபுண்யம் ஏகபில்வம் ஶிவார்ப்பணம் ||

ஶாளக்ராமேஷு விப்ரேஷு தடாகே வனகூபயோ ꞉ |
யக்ஞகோடி ஸஹஸ்ராணும் ஏகபில்வம் ஶிவார்பணம்

தந்திகோடி ஸகஸ்ராணி வாஜபேயஶதானி ச |
கோடிகன்யா மஹாதானம் ஏகபில்வம் ஶிவார்பணம்

லக்ஷ்ம்யா ꞉ ஸ்தநத உத்பன்னம் மஹாதேவஸ்ய ச ப்ரியம்
பில்வவிருக்ஷம் ப்ரயச்சாமி ஏகபில்வம் ஶிவார்பணம்

ஏகஞ்ச பில்வபத்ரைஶ்ச கோடியக்ஞபலம் லபேத் |
மஹாதேவஸ்ய பூஜார்த்தம் ஏகபில்வம் ஶிவார்பணம்

தர்ஶனம் பில்வ வ்ருக்ஷஸ்ய ஸ்பர்ஶனம் பாபநாஸனம்
அகோரபாபஸம்ஹாரம் ஏகபில்வம் ஶிவார்பணம் ||

மூலதோ ப்ரஹ்ம ரூபாய மத்யதோ விஷ்ணு ரூபிணே
அக்ரத ꞉ ஶிவ ரூபாய ஏக பில்வம் ஶிவார்பணம் ||

காஶீக்ஷேத்ரநிவாஸஞ்ச காலபைரவ தர்ஶனம் |
கயா ப்ரயாகேத் வேத்ருஷ்ட்வா ஏகபில்வம் ஶிவார்பணம் || 11

உமையாஸஹ தேவேஶம் வாஹனம் நந்திகேஶ்வரம்
முச்யதே ஸர்வபாபேப்ய ꞉ ஏகபில்வம் ஶிவார்பணம் ||

பில்வாஷ்டகமிதம் புண்யம் ய ꞉ படேத் ஶிவஸந்நிதௌ
ஸர்வபாபவினிர்முக்த ꞉ ஶிவலோகமவாப்னுயாத் || 13

# சிவாஷ்டோத்திர சதநாம ஸ்தோரத்ம்

வேதத்திற்கு சமமான இந்த ஸ்தோத்திரம் வேதத்திலுள்ள நாமாக்களால் அமைந்தது.

இதை கௌரி தேவி ஒரு வருஷ காலம் பிரதிதினம் மூன்று ஸந்த்யா வேளைகளில் ஜபித்து இறைவனின் உடம்பில் பாதியைப் பெற்றாள்.

பார்வத் யுவாச ꞉

சரீரார்த மஹம் சம்போ ꞉ யேந ப்ராப்ஸ்யாமி கேசவ
ததிதாநீம் மமாக்ஷ்வ ஸ்தோத்ரம் சீக்ரபலப்ரதம் || 1

அஸ்தி குஹ்யமதம் கௌரி நாம் நாமஷ்டோத்தரம் சதம்
சம்போரஹம் ப்ரவக்ஷ்யாமி படதாம் சீக்ரகாமதம் 2

அஸ்ய ஶ்ரீ சிவாஷ்டோத்தர சத நாம ஸ்தோத்திர மஹா மந்திரஸ்ய நாராயண ரிஷி ꞉ அனுஷ்டுப் சப்த ꞉ சதாசிவோ தேவதா மம சதாசிவா பிரஸாத ஸித்தியர்த்தே ஜபே விநியோக ||

**தியானம்**

தவளவ புஷமிந்தோர் மண்டலே ஸந்நி விஷ்டம்
புஜகவலய ஹாரம் பஸ்மதிக் தாங்க மீசம் |
ஹரிண பரசு பாணிம் சாரு சந்திரார்த்த மௌளிம்
ஹிருதய கமல மத்யே ஸந்ததம் சிந்தயாமி

சிவே மகேஸ்வர : சம்பு பிநாகி சசிசேகர : |
வாமதேவோ விருபாக்ஷ : கபர்தீ நீலலோஹித : ||

சங்கர : சூலபாணிஸ்ச கட்வாங்கி விஷ்ணு வல்லப : |
சிபிவிஷ்டாம்பிகாநாத : ஸ்ரீ கண்டோ பக்தவத்ஸல : ||

பவ : சர்வ : திரிலோகேச : சிதிகண்ட : சிவாப்ரியா : |
உக்ர : சபாலீ காமாரி : அந்தகாசுர சூதன :

கங்காதரோ லலாடாக்ஷ : கால கால : க்ருபாநிதி : |
பீம : பரசுஹஸ்தஸ்ச ம்ருகபாணிர் ஜடாதர : ||

கைலாஸவாசீ கவசீ கடோர : திரிபுராந்தக : |
வருஷாங்கோ வ்ருஷபாரூடோ பஸ்மோத் தூளித விக்ர : ||

ஸாமப்ரிய : ஸ்வரமய : த்ரயீமூர்த்திரநீச்வர : |
ஸர்வஜ்ஞ : பரமாத்மாச ஸோம ஸூர்யாக்னி லோசன ||

ஹவிர் யஜ்ஞமய : ஸோம : பஞ்ச வக்த்ர : ஸதாசிவ : |
விஸ்வேஸ்வரோ வீரபத்ரோ கணநாத : ப்ரஜாபதி : ||

ஹிரண்ய ரேதா : துர்தர்ஷோ கிரீசோ கிரிசோநக : |
புஜங்க பூஷணோ பார்கோ கிரிதந்வா கிரிப்பிரியா : ||

கிருத்தி வாஸா : புராராதி : பகவாந் ப்ரமதாதி ப : |
ம்ருத்யுஞ்ஜய : ஸூக்ஷ்மதனு : ஜகத்வ்யாபீ ஜகத்குரு : ||

வ்யோமகேசோ மஹாஸேந ஜநக : சாருவிக்ரம : |
ருத்ரோ பூதபதி : ஸ்தாணு : அஹிர் புத்ந்யோ திகம்பர : ||

அஷ்ட மூர்த்தி ரநேகாத்மா ஸாத்விக : சுத்த விக்ரஹ : |
சாச்வத : கண்டபரசு : அஜ : பாஸ விமோசக : ||

ம்ருட : பசுபதிர் தேவ : மஹாதேவோ வ்யயோஹரி : |
பூஷதந்தபித் அவ்யக்ரோ தக்ஷாத் வரஹரோஹர : ||

பகநேந்த்ரபித் அவ்யக்த : ஸஹஸ்ராக்ஷ : ஸஹஸ்ரபாத் : |
அபவர்கப்ரதோ அநந்த : தாரக : பரமேஸ்வரா : ||

பல ஸ்ருதி

ஏததஷ்டோத்தரம் நாம் நாம் சதமாம்நாய ஸம்மிதம் |
சங்கரஸ்ய ப்ரீயா கௌரீ ஜப்த்வா சம்பு ப்ரஸாததம் ||

த்ரைகால்ய மந்வஹம் தேவி வர்ஷமேகம் ப்ரயத்னத : |
அவாப ஸா சரீரார்த்தம் ப்ரஸாதாத் சூலபாணிந : ||

ய : திரிஸந்தியம் படேந்நித்யம் நாம்நாமஷ்டோத்தரம் சதம்
சத ருத்ர திரிராவ்ருத்யா யத்பலம் லபதே நர : ||

யத்பலம் ப்ராப்நு யாந்நித்யம் ஏகாவ்ருத்யா நஸம்சய : |
ஸக்ருத்வா நாமபி : பூஜ்ய குலகோடிம் ஸமுத்தரேத் ||

பில்வ பத்ரை : ப்ரதஸ்தைஸ்ச புஷ்பைஸ்ச துளஸீதளை : |
திலாக்ஷதை : யஜேத்யஸ்து ஜீவந் முக்தோ நாஸம்சய : ||

# சிவா அஷ்டோத்ர சத நாமாவளி

(ஒவ்வொரு நாமாவிற்கு முன்பு 'ஓம்' என்றும்
முடிவில் 'நம' என்றும் சொல்லவும்)

சிவாய
மஹேச்வராய
சம்பவே
பிநாகிநே
சசிசேகராய
வாமதேவாய
விரூபாக்ஷாய
கபர்திநே
நீலலோஹிதாய
சங்கராய 10

சூலபாணயே
கட்வாங்கிநே
விஷ்ணுவல்லபாய
சிபிவிஷ்டாய
அம்பிகா நாதாய
ஸ்ரீ கண்டாய
பக்தவத்ஸலாய
பவாய
சர்வாய
த்ரிலோகேசாய 20

சிதிகண்டாய
சிவாப்ரியாய
உக்ராய
கபாலிநே
காமாரயே
அந்தகாஸுர ஸூதநாய
கங்காதராய
லலாடாக்ஷாய
காலகாலாய
க்ருபாநிதயே 30

பீமாய
பரசுஹஸ்தாய
ம்ருகபாணயே
ஜடாதராய
கைலாஸவாஸிநே
கவசிநே
கடோராய
த்ரிபுராந்தகாய
வ்ருஷாங்காய
வ்ருஷபாரூடாய 40

பஸ்மோத்தூளி
தவிக்ரஹாய
ஸாமப்ரியாய
ஸ்வரமயாய
த்ரயீமூர்த்தயே
அனீச்வராய
ஸர்வஞ்ஞாய
பரமாத்மநே
ஸோமஸூர்யாக்னி லோசநாய
ஹவிஷே
யஞ்ஞமயாய

ஸோமாய
பஞ்சவக்த்ராய
ஸதாசிவாய
விச்வேஸ்வராய
வீரபத்ராய
கணநாதாய
ப்ரஜாபதயே
ஹிரண்ய ரேதஸே
துர்தர்ஷாய
கிரீசாய

கிரிசாய
அனகாய
புஜங்கபூஷணாய
பர்காய

கிரிப்ரியாய
க்ருத்திவாஸஸே
புராராதயே
பகவதே
ப்ரமதாதிபாய

ம்ருத்யுஞ்ஜயாய
ஸூக்ஷ்மதனவே
ஜகத்வயாபிநே
ஜகத்குருவே
வ்யோமகேசாய
மஹா ஸேனஜனகாய
சாருவிக்ரமாய
ருத்ராய
பூதபதயே
ஸ்தாணவே

அஹயேபுத்ந்யாய
திகம்பராய
அஷ்டமூர்த்தயே

ஸாத்விகாய
சுத்தவிக்ரஹாய
சாச்வதாய
கண்டபரசவே
அஜாய
பாசவிமோசகாய 90

ம்ருடாய
பசுபதயே
தேவாய
மஹா தேவாய

அவ்யயாய
ஹரயே
பூஷதந்தபிதே
அவ்யக்ராய
தக்ஷாத்வரஹராய
ஹராய 100

பகநேத்ரபிதே
அவ்யக்தாய
ஸஹஸ்ராக்ஷாய
ஸஹஸ்ரபாதே
அபவர்கப்ரதாய
அனந்தாய
தாரகாய
பரமேச்வராய 108

முடிவுரை

# சிவ நாமம் வாழ்த்தி வாழ்வோம்!

சர்வ சக்தியுள்ள பரப்பிரும்மான சிவம் எங்கே? நாம் எங்கே? நாம் அவன் நாமத்தை வாழ்த்துவதாவது? அதற்கு என்ன அருகதை நமக்குள்ளது?

ஆனால் பெரியாழ்வார் இறைவனுக்குப் பல்லாண்டு பாடியிருக்கிறார். மாணிக்கவாசகர் அவன் நாமத்தை 'நமசிவாய வாழ்க' என்றே வாழ்த்தியிருக்கிறார். அவர்கள் பக்தி மூலம் தாங்களே இறைவனானவர்கள். இறைவனை வாழ்த்துவது மூலம் தங்களையே அவர்களைச் சேர்ந்த நம்மையுமே சேர்த்து வாழ்த்தியிருக்கிறார்கள்.

ஸ்ரீமந் நாராயணன் கபிலராக அவதாரம் செய்தார். இவர் தாயார் தேவஹூதி தன் குமாரனிடம் "பிறப்பிலிருந்து விலகுவதற்கு மார்க்கம் என்ன?" என்று கேட்டாள். கபிலர் கூறியதாவது:

"மோக்ஷத்திற்குக் காரணம் ஞானம். அந்த ஞானத்துக்குக் காரணம் பரமேஸ்வரன். ஸ்ரீ பரமேஸ்வரன் அருளுக்குக் காரணம் பஞ்சாக்ஷரம். இந்த மஹா மந்திரத்தை தக்க குரு மூலம் பெறுக" என்றார்.

"இந்த மந்திரம் ஆயிரம் எழுத்தா நூறு எழுத்தா ஐந்தெழுத்து தானே! இதைக்கூடவா சொல்ல முடியவில்லை?" என்று வள்ளலார் ராமலிங்க ஸ்வாமிகள் வருந்துகிறார். இந்த ஐந்தெழுத்தை ஒவ்வொருவரும் சொல்ல வேண்டும் என்பதே இப்புத்தகம் எழுதியதன் நோக்கம்.

சிவபெருமானைப்பற்றி திட்டமிட்டுள்ள மூன்று புத்தகங்களில் அவன் நாம மகிமையைச் சொல்வது இம் முதல் புத்தகம். அவனுடைய மூர்த்தி தத்துவங்களைப்பற்றியது "சிவ மூர்த்தங்கள்" என்ற இரண்டாவது புத்தகம். அவன் ஐந்தொழில்களை விளக்குவது மூன்றாவது புத்தகமான "நடராஜ தத்துவம்". அவன் அருள் இருந்தால் மற்ற இரு புத்தகங்களும் சீக்கிரமே வெளிவரும்.

நமசிவாய வாழ்க! நாமெல்லோரும் வாழ்க!!

ஓம் ஸ்ரீ மாத்ரே நம:

# பூஜைக்குரிய தெய்வீக சாதனங்கள்

ஸ்ரீ சிருங்கேரி சாரதாபீட ஸ்ரீ மகா சந்நிதானம் அவர்களும், ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதி ஸ்ரீ மகா சந்நிதானம் அவர்களும் அனுக்ரகித்து ஸ்ரீமுகம் வழங்கிய ஸ்ரீ மகாமேரு சாஸ்திரீய முறையில் தயார் செய்யப்பட்டது.

பூஜையில் வைக்கும் ஸ்ரீ மகா மேரு, ஸ்ரீசக்கரங்கள்.



சிருங்கேரி ஜகத்குரு ஆசி வழங்குகிறார்.

ஸ்ரீ மகா மேரு (பஞ்சலோகம்) 2¼" × 2¼" விலை ரூ. 325/-

ஸ்ரீ சக்கரம் (பஞ்சலோகம்) 2" × 2" விலை ரூ. 75/-

ஸ்ரீ சக்கரம் (செம்பு) 3" × 3" விலை ரூ. 35/-

ஸ்ரீ சார்வபௌம சர்வசித்தி சக்கரம 3" × 3" விலை ரூ. 75/-

ஸ்ரீ தன ஆகர்ஷண மகா சக்கரம் 3" × 3" விலை ரூ. 75/-

ஸ்ரீ நவாக்ஷரி சக்கரம் 3" × 3" விலை ரூ. 75/

**உடம்பில் அணியக்கூடிய தெய்வீக டாலர்கள் (வெள்ளியினாலான )**

| | |
|---|---|
| ஸ்ரீ சக்கரம் காமாட்சியுடன் | விலை ரூ. 30 00 |
| ஸ்ரீ சக்கரம் லக்ஷுமீ பீஜத்துடன் | விலை ரூ. 25 00 |
| ஸ்ரீ சக்கரம் தன ஆகர்ஷணத்துடன் | விலை ரூ. 25 00 |

மாங்கல்ய பலம், குழந்தைகளுக்கு பாலாரிஷ்டம், கண்திருஷ்டி நிவர்த்தி, விவாகப் பிராப்தி, நவக்கிரக மோதிரங்கள், ஒவ்வொன்றின் விலை ரூ. 25/-

**ஜபமாலைகள்:** தாமரை மணிமாலை 54 மணி ரூ. 35/- 108 மணி ரூ. 70/-
ஸ்படிக மணிமாலை 54 மணி ரூ. 35/- 108 மணி ரூ. 70/-
துளசி மணிமாலை 54 மணி ரூ. 35/- 108 மணி ரூ. 70/-

**தத்தாத்ரேய மகானின் கண்திருஷ்டி மகா சக்கரம்:** இந்த சக்கரத்தை வீடு, வியாபார ஸ்தலம், தொழில் கூடம் இவைகளில் வைத்தால் வியாபார விருத்திகளும், பிறரால ஏற்படும் தொல்லைகள், எதிர்ப்புகள் இவைகளை முறியடிக்கும். பஸ், லாரி, கார், ஸ்கூட்டர் இவைகளில் வைத்தால் விபத்துக்கள் நேரிடாமல் பாதுகாக்க வல்லது.

**விவாக பிராப்தி டாலர்:** நீண்ட நாட்களாக தடை ஏற்பட்டு இருக்கும் பெண்களுக்கோ, ஆண்களுக்கோ, இதை அணிந்த 108 நாட்களுக்குள் விவாகம் நடக்க வல்லது. நட்சத்திரம் எழுதி அனுப்பினால் பூஜையில் வைத்து பிரசாதத்துடன் அனுப்பப்படும். மற்றும் இதர சாதனங்கள் தேவைப்படுவோர் எங்களது கேட்லாக்கை இலவசமாக பெற்று பார்த்து பயன் அடையலாம். ஆர்டர்களுக்கு ரூ. 5-00 முன் பணமும் M.O. அல்லது டிராப்ட் மூலம் அனுப்பி உங்கள் தேவைகளை ஆர்டர் செய்தால் V.P.P. மூலம் அனுப்பி வைக்கப்படும்.

விலாசம்: **விஸ்வகர்மக்கு S. T. முருகபூஷணம்**

## நவசக்தி நிலையம்

96/1, லாயிட்ஸ ரோடு, (கோபாலபுரம்)
சென்னை-600086. (போன்: 812013)

எங்கள் லட்சியம்: லோகா சமஸ்தாஸ் சுகினோ பவந்து